# சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.)
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

சி. ராஜலிங்கம்

பதிவு எண். R10TAM09

நெறியாளர்

முனைவர் வை.இராமராஜபாண்டியன்






தமிழ்த்துறை

பெரியார் பல்கலைக்கழகம்

(தேசிய தரமதிப்பீட்டுக்குழுவின் மறுமதிப்பீட்டில் ‘ஏ’ தரச்சான்றிதழ் பெற்றது)

பெரியார் பல்கலை நகர்

சேலம்–636 011.


அக்டோபர் – 2017

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் வை.இராமராஜபாண்டியன்,** நாள் :
இணைப்பேராசிரியர், தலைவர்,
இக்கால இலக்கியத்துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

**‘சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு’** என்னும் தலைப்பில் **சி.ராஜலிங்கம்** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் (பிஎச்.டி) செய்த இந்த ஆய்வு பெரியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**தமிழ்த்துறைத் தலைவர்** **நெறியாளர்**

**(முனைவர் வை. இராமராஜபாண்டியன்)**

# இணை நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் தி.பெரியசாமி,**
பேராசிரியர் மற்றும் தலைவர்,
தமிழ்த்துறை,
பெரியார் பல்கலைக்கழகம்,
பெரியார் பல்கலைநகர்,
சேலம்–**636 011.**

நாள் :

**'சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு'** என்னும் தலைப்பில் **சி.ராஜலிங்கம்** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் (**பிஎச்.டி**) செய்த இந்த ஆய்வு பெரியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**தமிழ்த்துறைத் தலைவர்**

**இணைநெறியாளர்**

**(முனைவர் தி.பெரியசாமி)**

# ஆய்வாளர் உறுதிமொழி

**சி.ராஜலிங்கம்,** நாள் :
பதிவு எண். R10TAM09
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
பெரியார் பல்கலைக்கழகம்,
பெரியார் பல்கலை நகர்,
சேலம்–**636 011.**

**‘சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு’** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி) எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**ஆய்வாளர்**

**(சி.ராஜலிங்கம்)**

**உறுதிக் கையொப்பம்**

**நெறியாளர்**
**முனைவர் வை.இராமராஜபாண்டியன்**
இணைப்பேராசிரியர், தலைவர்
இக்கால இலக்கியத்துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

# நன்றியுரை

முனைவர் பட்டம் பயில வாய்ப்பளித்த பெரியார் பல்கலைக்கழக முன்னாள் இந்நாள் துணைவேந்தர்களுக்கும், பல்கலைக்கழக பதிவாளர் அவர்களுக்கும், ஆட்சிக்குழு உறுப்பினர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வின் மீது மிகுந்த அக்கறையுடன் தகுந்த ஆலோசனைகளை வழங்கிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் தி.பெரியசாமி** அவர்களுக்கும் நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

அறிமுகமான நாள் முதல் இன்று வரையிலும் என்மீதும் என் ஆய்வின் மீதும் மிகுந்த அக்கறை செலுத்துவது மாத்திரமல்லாமல், என் ஆய்வைக் கட்டமைப்பதில் நெறியாளராகவும் வழிகாட்டியாகவும் இருந்து, எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்துவரும் எனது நெறியாளரும், தற்சமயம் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இணைப்பேராசிரியராகவும் பணியாற்றி வரும் **முனைவர் வை.இராமராஜபாண்டியன்** அவர்களுக்கு என்றென்றும் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

என் ஆய்வு செம்மையுற உறுதுணையாக இருந்த தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் **முனைவர் இரா.தேவணன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சம்பந்தமான அறிவுரைகளை வழங்கிய தமிழ்த்துறை பேராசிரியர் **முனைவர் மோ.தமிழ்மாறன்,** இணைப்பேராசிரியர் **முனைவர் ம.சுந்தரமூர்த்தி**, உதவிப்பேராசிரியர்களான **முனைவர் சு.வேலாயுதன், முனைவர் க.மைதிலி, முனைவர் இரா.வசந்தமாலை** முதலிய அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அனைத்து முனைவர்பட்ட ஆய்வாள நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வின் வளர்ச்சிக்கு உதவிய பெரியார் பல்கலைக்கழக நூலகத்தாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை சிறப்புடனும் பொறுப்புடனும் கட்டமைத்துக் கொடுத்த நண்பர் திரு **சி.கௌதமன்** அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சி. ராஜலிங்கம்**

# சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| அகத். | – | அகத்திணையியல் |
| ஆ.பெ.இல்லை. | – | ஆசிரியர் பெயர் அறியப்படவில்லை |
| இளம். | – | இளம்பூரணர் |
| இறை.அ.வீ. | – | இறையனார் அகப்பொருள் விளக்கம் |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| எ.மே. | – | எடுத்தாண்ட மேற்கோள் |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலி. | – | கலித்தொகை |
| குறுந். | – | குறுந்தொகை |
| சூ. | – | சூத்திரம் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நம்.அ.பொ. | – | நம்பியகப்பொருள் |
| நற். | – | நற்றிணை |
| நூ. | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பரி. | – | பரிபாடல் |
| பா. | – | பாடல் |
| புறத். | – | புறத்திணையியல் |
| புறம். | – | புறநானூறு |
| பொருள். | – | பொருளதிகாரம் |
| மா.அக.பொ. | – | மாறன் அகப்பொருள் |
| மொ.ஆ. | – | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வீர. | – | வீரசோழியம் |

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைத் தமிழர்களின் அகம், புறம் சார்ந்த வாழ்க்கை நிகழ்வுகளை உலகிற்கு எடுத்துக் காட்டும் வரலாற்றுத் தரவுகளாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. இவ்விலக்கியங்கள் திணை, துறை அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்திணைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வைந்திணைப் பாடல்களும் நிலப் பின்னணியில் அமைந்த மக்களின் திணை சார்ந்த வாழ்வியலைப் பிரதிபலிப்பவைகளாகவும் உள்ளன. சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய ஐந்தும் அகநூல்கள் ஆகும். இவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் அடிப்படையிலான திணை இலக்கியங்களாகும். இம்முப்பொருள்களில் எப்பொருள் சிறந்தது என்பதிலும் திணைகள் எதன் அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன என்பதிலும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் மற்றும் பிற அறிஞர்களின் மத்தியில் கருத்து வேறுபாடுகள் நிறைந்துள்ளன. சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் உள்ள முதற்பொருள், கருப்பொருள் ஆகிய இரண்டும் உரிப்பொருளுக்குத் துணைபுரிகின்ற தன்மையையும் இத்திணைசார்ந்த வாழ்வியலை சங்ககால நெய்தல்நில மக்கள் வாழ்ந்த நிலைபாட்டையும் ஆராயும் விதமாகவும் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வுத்தலைப்பு**

‘**சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு**’ என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

சங்க அக இலக்கியத்தில் காணப்படும் நெய்தல் திணைப் பாடல்களில் உள்ள முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றின் அமைப்பையும், இம்முப்பொருள் அடிப்படையில் அமைந்த திணைசார்ந்த வாழ்வியலையும் விளக்குவதே இவ்வாய்வின் முதன்மையான நோக்கமாகும்.

**ஆய்வு மூலம்**

தமிழர் பண்பாட்டின் ஒட்டுமொத்த வடிவமாக திகழும் சங்க இலக்கியங்களில் அகம்சார்ந்த நெய்தல் திணைப்பாடல்கள் மட்டுமே ஆய்வின் மூலமாகக் கொள்ளப்படுகிறது. குறிப்பாக நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41–பி சிட்கோ இண்டஸ்ரியல் எஸ்டேட் அம்பத்தூர், சென்னை–600108, ஏப்ரல் 2004 ல் சங்க இலக்கியத் தொகுதிகளில் இடம்பெற்றுள்ள நெய்தல் திணைசார்ந்த 344 பாடல்கள் இவ்வாய்விற்குத் தேவையான முதன்மை தரவுகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

சங்க இலக்கிய நூல்களில் உள்ள தொடர்புடைய செய்திகள், சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வு நூல்கள், நெய்தல் திணை தொடர்பான முனைவர்பட்ட ஆய்வேடுகள், பண்பாடு தொடர்புடைய சமூகப் பண்பாட்டு நூல்கள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வின் கருதுகோள்**

தொல்காப்பியர் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணைகளுக்கும் உரிய ஒழுக்கமாக புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் ஆகியவற்றைக் குறிப்பிடுகையில் இத்திணைக்கு இவ்ஒழுக்கம் உரியது என்று கூறவில்லை. தொல்காப்பிய உரையாசிரியர்களாலேயே இத்திணைக்கு இவ்ஒழுக்கம் உரியது என்று கூறப்படுகிறது. மேலும் சங்க இலக்கியங்களை ஆய்வு செய்த முனைவர் வெ.மு.ஷாஜான்கனி, முத்துக்கண்ணப்பன் ஆகியோர் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் நெய்தலின் உரிப்பொருளாகிய இரங்கல் சரியாக வெளிப்படவில்லை என்கின்றனர். இதனைக் கருத்தில் கொண்டு எட்டுத்தொகை அக இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள நெய்தல் திணைப் பாடல்களில் இரங்கல் உரிப்பொருள் இடம்பெறுகின்றன என்ற கருதுகோளின் அடிப்படையிலேயே இவ்வாய்வு நகர்கின்றது.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியங்களில் நெய்தல் திணைப்பாடல்களில் உள்ள திணைகளைப் பகுத்துக் கூறுவதால் பகுப்பாய்வு அணுகுமுறையும் அவற்றை விளக்குவதால் விளக்கவியல் அணுகுமுறையும் நெய்தல் நிலம்சார்ந்த மக்களின் வாழ்வியலை விளக்குவதால் சமூகவியல் அணுகுமுறையும் இவ்வாய்வில் பின்பற்றப்படுகின்றன.

## ஆய்வு முன்னோடிகள்

ச.சாம்பசிவனாரின், தமிழ் இலக்கியத்தில் நெய்தல் திணை, நா.செயராமனின் நெய்தல் திணைப்பாடல்கள் போன்ற ஆய்வு நூல்களும், முத்துக்கண்ணப்பனின் சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், சா.சிவமணியின் சங்க அகத்திணை கோட்பாடு நோக்கில் தமிழ் மலையாள நெய்தல் நில நாவல்கள் என்னும் ஆய்வேடுகளும் ஆய்வு முன்னோடிகளாக உள்ளன.

## ஆய்வுப்பகுப்பு

**'சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் பொருளமைவு'** எனும் இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுத்தாராயப்பட்டுள்ளது.

**சங்கஇலக்கியங்களில்**

1. நெய்தல் திணை வைப்பும் பாடல்களின் அமைப்பும்
2. முதற்பொருளமைவு
3. கருப்பொருளமைவு
4. உரிப்பொருளமைவு
5. நெய்தல் நில மக்களின் திணைசார் வாழ்வியல்

என்ற அமைப்பில் இவ்வாய்வின் உள்ளடக்கம் அளிக்கப்படுகிறது. நெய்தல் திணை வைப்பும் பாடல்களின் அமைப்பும் என்பது முதலாமியலாகும். தொல்காப்பியம் முதலிய அகப்பொருள் இலக்கண நூல்களிலும் எட்டுத்தொகை அகஇலக்கியங்களிலும் நெய்தல் திணை வைப்பு முறைகள் ஆராயப்பட்டுள்ளன. மேலும் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய இலக்கியங்களில் உள்ள நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை இந்நூல்களில் நெய்தல் திணை வைப்புமுறை, பாடியப் புலவர்கள், நெய்தல்திணைக்கே உரிய புலவர்களின் பாடல்கள் போன்றவை ஆராய்ந்துக் கூறப்படுகிறது.

முதற்பொருளமைவு என்பது இரண்டாமியலாகும். தொல்காப்பியம் குறிப்பிடும் முதற்பொருள் நிலம், நிலத்தின் சிறப்பு, நெய்தல் நிலத்திற்காணப்பெயர்க் காரணம் மற்றும் நெய்தல் திணைப்பாடல்களில் நிலம் அமைந்துள்ள வகைகள் ஆராயப்பட்டுள்ளன. மேலும் பெரும்பொழுது, சிறுபொழுது ஆகியவற்றின் அமைப்புகளையும் நிலம், பொழுதுகளின் செயல்பாடுகள் குறித்தும், நெய்தல் நிலத்தலைவன், தலைவியின் ஒழுக்க வெளிப்பாட்டிற்கு முதற்பொருள்கள் களங்களாக அமைந்துள்ள விதமும் ஒழுக்க நிகழ்வுகளான தலைவியின் காதல், குறியிடம், தலைவியின் சினம், கடலே சான்றாதல், தலைவியின் ஆற்றாமை, தலைவியின் புலம்பல், தலைவியின் கலக்கம் குறித்தும், திணை மயக்கம், நெய்தல் திணைப் பாடல்களில் பிறதிணை மயக்கங்கள் குறித்தும் இத்திணை மயக்கங்கள் இரங்கல் ஒழுக்கத்திற்கு உறுதுணையாக அமையும் விதத்தையும் ஆராய்துரைக்கப்பட்டுள்ளன.

கருப்பொருளமைவு என்பது மூன்றாமியலாகும். தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள் குறிப்பிடும் நெய்தல் நிலக் கருப்பொருள்கள், சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ள கருப் பொருள்கள், நெய்தல் நிலக் கருப்பொருள்களான மரங்கள், பறவையினங்கள், விலங்குகள் இவற்றின்

செயல்பாடுகள், நெய்தல் நிலத் தலைவன், தலைவியின் ஒழுக்க நிகழ்வுகளான தலைவியின் பிரிவுத்துயர், புன்னையிடம் தலைவியின் அன்பும், இல்லறப்பண்பு, தலைவனின் பரத்தமை ஒழுக்கம், தலைவியின் பசலை, தலைவி உப்பு விற்றல் ஆகியவற்றிற்கு வாயில்களாக அமைந்துள்ள விதம், கருப்பொருள் மயக்கம் போன்றவைகளை ஆராய்ந்து தொகுக்கப்பட்டுள்ளது.

உரிப்பொருளமைவு என்பது நான்காம் இயலாகும். உரிப்பொருள், தமிழிலக்கணங்களில் உரிப்பொருள் கோட்பாடுகள், நெய்தல் நில உரிப்பொருள் கோட்பாடுகள் அறிஞர்களின் கருத்துக்கள் போன்றவை விளக்கிக் கூறப்பட்டுள்ளன. சங்க இலக்கிய நெய்தல் திணைப்பாடல்களில் அமைந்துள்ள நெய்தல் திணைக்குரிய ஒழுக்கங்களாக வெளிப்படும் தலைவியின் ஆற்றாமை, தலைவியின் வரைவிடைப்பிரிவு, தலைவி தோழியை ஆற்றுவித்தல் பிரிவிடை ஆற்றாத்தலைவி, தோழிஅறிவுறுத்தல், தலைவியின் புலம்பல், சிறைப்புறத்த தலைவனிடம் தோழி வரைவு கடாவியது. போன்ற நிகழ்வுகள் தலைவியின் இரங்கல் உணர்வாகவே வெளிப்படும் தன்மைகள் போன்றவை வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

நெய்தல் நில மக்களின் திணைசார் வாழ்வியல் என்பது ஐந்தா மியலாகும். சங்ககால இனக்குழு மக்கள் திணைசார் வாழ்வியலைக் கொண்டிருந்தனர். இதில் நெய்தல் நில மக்களும் அடங்குவர். நெய்தல் நில மக்கள், குடியிருப்புகள், உணவுமுறைகள், நிலம் சார்ந்த மக்களின் தொழில் முறைகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், ஆடைகள், அணிகலன்கள் போன்றவை நெய்தல் திணை சார்ந்த அடையாளங்களுடன் நிகழ்ந்துள்ளதைப் பற்றி விரிவாக இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

இயல்தோறும் பெறப்பட்ட ஆய்வுக் கருத்துக்கள் தொகுக்கப்பட்டு முடிவுரையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. மேலாய்வுக்குரிய களங்களும் இனம் காணப்பட்டுத் தரப்பட்டுள்ளன.

இறுதியில் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த நூல்கள், கட்டுரைகள் முதலானவை அகர நிரல்படுத்தித் துணை நூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

நெய்தல் நிலம் சார்ந்த முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் இடம்பெற்றுள்ள பாடல்களின் விவரங்களை அட்டவணைப்படுத்தி பின்னிணைப்புகளாகத் தரப்பட்டுள்ளன.

# நெய்தல் திணை வைப்பும் பாடல்களின் அமைப்பும்

## 1.0 முன்னுரை

இலக்கியம் என்பது சமுதாயப் படைப்புகளில் ஒன்று. தமிழ்ச்சமூகம் என்பது நீண்ட நெடுங்கால வரலாற்றைக் கொண்டது. ஆதலால் தமிழிலக்கியப் படைப்புகளும் நீண்ட வரலாற்றைக் கொண்டதாகும். தொன்மையான தமிழ்ச் சமூகத்தை அறிந்து கொள்வதற்கும் தமிழர்களின் கவிதை மரபை அறிந்து கொள்வதற்கும் முதன்மையானவை எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாகும். இவற்றில் அகம், புறம் என்ற இரு நிலைகளில் மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்கின்றன. அகம் என்பது மக்களின் இல்வாழ்க்கைக் கூறுகளான களவு, கற்பு நிகழ்வுகளை எடுத்து மொழிவதாக உள்ளன. அகப்பாடல்களின் தனிச்சிறப்பு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளாகப் பகுக்கப்பட்டு அவற்றினை அன்பின் ஐந்திணைகளாகக் கொள்ளப்பெற்றுள்ளது. தமிழ் இலக்கண இலக்கியங்கள் இத்திணை மரபை இன்றளவும் பின்பற்றப்படுகின்றன. இத்திணை மரபில் திணை வைப்பு முறையும் கவனிக்கத்தக்கதாகும். சங்க இலக்கியங்களில் உள்ள நெய்தல் திணைப்பாடல்களை ஆய்வு செய்வதற்கு நெய்தல் திணையின் வைப்பு முறை தமிழிலக்கணங்களில் எவ்விடத்தைப் பெறுகின்றன என்பதையும் நெய்தல் திணைப் பாடல்களின் அமைப்பையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.1 தமிழிலக்கணங்களில் திணைவைப்பு முறைகள்

காலத்தால் முற்பட்டதும் பொருளிலக்கணம் கூறுவதும் தமிழ்க்கவிதை மரபை எடுத்துரைப்பதும் தொல்காப்பியமாகும். இதற்குப் பிறகு தோன்றிய இறையனார் அகப்பொருள், வீரசோழியம், நம்பியகப் பொருள், மாறனகப்பொருள், போன்ற இலக்கண நூல்கள் ஐந்திணைகளைக் குறிப்பிடுகின்றன.

### 1.1.1 தொல்காப்பியம்

ஐந்திணை வைப்பு முறைகளைக் குறிப்பிடுவதில் முதன்மையானது தொல்காப்பியமாகும். அகத்திணையியலில் முதலில் திணைகளைக் குறிப்பிடும் போது,

''கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப''[1]

என்ற நூற்பாவில் கைக்கிளையை முதலாவதாகவும் ஐந்திணைகளை இடையிலும் பெருந்திணையை இறுதியாகவும் வகைப்படுத்துகிறது. இடையில் நின்ற ஐந்திணைகள் பல நிலைகளில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. மேலும், ஐந்திணைகளின் நிலங்களை அடையாளப்படுத்தும் போது,

''மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமணலுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறை யான் சொல்லவும் படுமே''[2]

என்னும் நூற்பா முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற வரிசைமுறை சுட்டப்பட்டுள்ளது. ஐந்திணைகளுக்குரிய பொழுதினைக் குறிப்பிடும்போது,

''காரும் மாலையும் முல்லை''[3]

''குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்''[4]

''வைகுறு விடியல் மருதம் ''[5]

''நெய்தல்

எற்பாடாதல் மெய்பெறத் தோன்றும்''[6]

''நடுவுநிலைத் திணையே வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே''[7]

என்ற நூற்பாக்களில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற வரிசையமைப்பில் பாலைத் திணை இறுதியில் வைக்கப்பட்டுள்ளது. மேலும், உரிப்பொருளைச் சுட்டும் போது,

''புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்

ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை

தேருங் காலை திணைக்குரிப் பொருளே''[8]

இந்நூற்பாவில் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்ற திணை வரிசைமுறை குறிப்பிடப்பட்டுள்ளது. புறத்திணையியலில் திணைகளைப் பற்றிக்குறிப்பிடும் போது,

''வெட்சி தானே குறிஞ்சியது புறனே''[9]

''வஞ்சிதானே முல்லையது புறனே''[10]

''உழிஞை தானே மருதத்துப் புறனே''[11]

''தும்பை தானே நெய்தலது புறனே ''[12]

''வாகை தானே பாலையது புறனே''[13]

''காஞ்சி தானே பெருந்திணை புறனே''[14]

''பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே''[15]

என்னும் சூத்திரங்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்ற வரிசைமுறைக் காணப்படுகிறது.

இத்தரவுகளைப் பார்க்கையில் இந்த வரிசையில் தான் திணைகளைக் குறிப்பிட வேண்டும் என்ற முறையை தொல்காப்பியர் வரையறைச் செய்யவில்லை.

“சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே’’ என்ற தொல்காப்பிய சூத்திர அடிக்கு வேறுபட்ட பொருட்சூழலை உணர்த்துவதாக உரையாசிரியர்களாலும் அறிஞர்களாலும் கருதப்பட்டு வந்துள்ளது.

இத்தொடர் குறித்து இளம்பூரணர், “மாயோன் மேயகாடுற உலகமும்’ என்ற தொல்காப்பிய (அகம் .சூ.5) திற்கான உரைவிளக்கத்தில், ‘சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே’ என்றதனால் இம்முறையின்றிச் சொல்லவும்படும் என்று கொள்க. அஃதாவது அவற்றுள் யாதானும் ஒன்றை முன்னும் பின்னும் வைத்துக் கூறுதல் அது சான்றோர் செய்யுட் கோவையிலும் பிற நூலாக்கத்தும் கண்டு கொள்க. எனக் குறிப்பிட்டுக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் முறை மாறியும் திணைசொல்லப்படலாம்’’[16] என்று குறிப்பிட்டுள்ளார்.

நச்சினார்க்கினியரும் இதே கருத்தில் “உம்மை எதிர்மறையாகலின் இம்முறை அன்றிப் பிறவற்றானும் சொல்லவும் படுமென்பது பொருளாயிற்று அது தொகைகளிலும் கீழ்க்கணக்குகளிலும் இம்முறை மயங்கி வரக் காண்க’’[17] எனக் குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட தரவுகளைக் கொண்டு பார்க்கையில் ஐந்திணை வைப்பு முறையில் தொல்காப்பியரிடையே மாறுபாடு இருந்துள்ளதைத் தெளிவாக அறியமுடிகிறது. ஆக திணை வைப்பு முறையென்பது மாறுதலுக்குட் படுவதோடு தொகுத்தோரின் விருப்பத்திற்காகவும், தொகுப்பித்த இடத்தின் சிறப்பிற்காகவும் பாடும் புலவரின் வசதிகளுக்கும் ஏற்ற முறையில் அமைகின்றதெனலாம்.

### 1.1.2 இறையனார் களவியல் உரை

தொல்காப்பியத்திற்கு அடுத்து அகஇலக்கணம் கூறும் நூல் இறையனார் களவியலுரையாகும். இந்நூலில்,

“அன்பின் ஐந்திணைக் களவெனப்படுவ’’[18]

என்னும் சூத்திரத்தில் ஐந்திணையாவன யாவையோ ? எனின் குறிஞ்சி , நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்று திணைகளைக் குறிப்பிடுகின்றது. நெய்தல் திணை இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது. ஆக இறையனார்களவியலுரையிலும் திணைவைப்புமுறை பின்பற்றப்படாமையை அறியமுடிகிறது.

### 1.1.3 வீரசோழியம்

‘‘முல்லை குறிஞ்சி மருதத் தொடு முதுபாலை நெய்தல்’’[19]

‘‘முல்லை குறிஞ்சி மருதத் தொடு பாலை நெய்தலை நதுஞ்

சொல்லுமகமா மதனுக்குரை தொகு சட்டகமோடு’’[20]

என்ற வீரசோழிய நூற்பாக்களில் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற திணைவைப்புமுறைச் சுட்டப்பட்டுள்ளது. நெய்தல் திணை யானது இறுதியாக வைக்கப்பட்டுள்ளது.

### 1.1.4 நம்பியகப் பொருள்

‘‘குறிஞ்சி பாலை முல்லை மருதம்

நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே’’[21]

என்னும் நம்பிகப் பொருள் நூற்பாவில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற நிலையில் திணைவைப்பு முறைக் கூறப்பட்டுள்ளது.

### 1.1.5 மாறனகப் பொருள்

‘‘கருதிய குறிஞ்சி பாலை முல்லை

மருதம் நெய்தல் வகுத்தவைந்திணைப்பெயர்’’[22]

என்னும் நூற்பாவில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற வரிசைமுறையில் ஐந்திணைகளைக் குறிப்பிட்டுள்ளன. தொல்காப்பியம், இறையனார் களவியல் உரை இந்நூல்களில் திணைவைப்பு முறை பின்பற்றப்படவில்லை.

பிற்காலத்தில் தோன்றிய வீரசோழியம், நம்பியகப் பொருள், மாறனகப் பொருள் ஆகிய இலக்கணநூல்களில் திணைவைப்புமுறை பின்பற்றியுள்ளன. மேலும் நெய்தல் திணையை இறுதியாக வைத்துள்ளன.

## 1.2 நெய்தல் திணைப்பாடல்களின் அமைப்பு

சங்க இலக்கியத்தில் மொத்தமுள்ள 1862 அகப்பாடல்களில் 347 பாடல்கள் நெய்தல்திணைக்குரியதாகும். ஐங்குறுநூற்றில் 2 பாடல்கள் கிடைக்கவில்லை. நற்றிணையில் ஒரு பாடல் 7 அடிகள் மட்டுமே கிடைத்துள்ளன. இப்பாடல்களில் 259 பாடல்களில் களவுக் காலத்திற்குரிய நிகழ்வுகளாவும், 74 பாடல்கள் கற்புக்காலத்திற்குரிய நிகழ்வுகளாகவும், 11 பாடல்கள் பெருந்திணைக்குரியதாகவும் மொத்தம் 344 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

### 1.2.1 நற்றிணை

எட்டுத்தொகையுள் முதலாவதாகிய நற்றிணை முதற்கண் பின்னத்தூர் அ.நாராணயசாமி ஐயரால் ஆய்ந்து வெளியிடப்பெற்றதாகும். இந்நூலில் உள்ள 400 பாடல்களில் 102 பாடல்கள் நெய்தல் திணைக்குரியதாகும். இவற்றில் (5, 111, 132, 163, 167, 172, 175, 178, 183, 195, 207, 235, 385 இப் 13 பாடல்களுக்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லை. 89 பாடல்களை 47 புலவர்கள் பாடியுள்ளனர். ஆசிரியர் பெயர் அறியப்படாத 13 பாடல்களுக்கு ஔவை சு.துரைசாமிப் பிள்ளை பல ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்து தனது உரையில் 45, 111, 167 ஆகிய பாடல்களுக்கு உலோச்சனார் எனவும் 132 பாடலுக்கு பெருங்கண்ணனார் எனவும் 163–ம் பாடலுக்கு தாயங்கண்ணனார், 172 ம் பாடலுக்கு நக்கீரனார், 175 ம் பாடலுக்கு மதுரைக் கணக்காயனார், 178 ம் பாடலுக்கு பூதன் தேவனார், 183 ம் பாடலுக்குக் கயமனார் 195 ம் பாடலுக்குப் பெருங்குன்றூர் கிழார் 207 ம் பாடலுக்கு ஆவூர்கிழார் 385 ஆம் பாடலுக்கு அஞ்சிலாந்தையார் (இப்பாடல் முழுமையாகக் கிடைக்கவில்லை.) என்று ஆசிரியர் பெயரிட்டழைப்பதை அறிய இயலும். தற்போது 102 பாடல்கள் நெய்தல் திணைக் குறியதாகக் கூறப்பட்டுள்ளது.

### 1.2.1.1. திணை வைப்பு முறை

இந்நூலுக்குத் திணைகள் தொகுத்தவர்களால் பெயரிடப்படவில்லை. பதிப்பித்தவர்களே திணையைக் குறிப்பிட்டுப்பதிப்பித்துள்ளனர். அ.நாராயணசாமி ஐயர் பதிப்பில் பாடல்களுக்குத் திணை குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் திணை எந்தச் சுவடியை அடிப்படையாகக் கொண்டு வரையறை செய்யப்பட்டது என்பதற்கான காரணங்கள் குறிப்பிடப்படவில்லை.

மா்ரே எஸ். ராஜம் பதிப்பு முன்னுரையில் ‘‘நற்றிணைச் செய்யுட்களுக்குக் குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணைப் பாகுபாடு ஏட்டுப் பிரதிகளில் காணப்பெறவில்லை. இவை பதிப்பாசிரியர்களால் ஊகித்துக் கொடுக்கப் பெற்றவையே’’[23] எனப் பதிப்பாசியர்களாலேயே முதன் முதலாகத் திணை குறிக்கப்பட்டமை குறிப்பிடப்பட்டுள்ளது.

எச். வேங்கடராமன் பதிப்பித்துள்ள நற்றிணை உரைக்கு நூலாராச்சிக் குறிப்பு எழுதியுள்ள வே. சிவசுப்பிரமணியன், ‘‘நற்றிணைச் செய்யுள்களுக்குக் குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணைப் பாகுபாடு ஏட்டுப் பிரதிகளில் இல்லை. பதிப்பாசிரியர்களால் பொருள் வரையறை செய்து கொடுக்கப்பெற்றுள்ளன. இத்தகைய திணைப் பொருள் வரையறை பழமையானதாகலின் செய்யுட் பொருளை உணர்ந்து கோடற்குப் பெரிதும் இன்றியமையாதது. ஆதலின் அவற்றை அப்படியே ஏற்றுக் கோடலில் தவறில்லை’’[24] என்று பதிப்பாசிரியர்களாலேயே திணை குறிக்கப்பட்டுள்ளமையைச் சுட்டுகின்றார்.

திணைக்குறிப்பீட்டுடன் பதிப்பிக்கப்பட்டுள்ள அ.நாராயணசாமி ஐயர். மா்ரே எஸ்.ராஜம், எச். வேங்கடராமன் ஆகிய மூவர் பதிப்புகளிலும் பெரும்பாலான பாடல்களுக்கு ஒத்த எண்ணிக்கையில் நெய்தல் திணைகள் அமைந்துள்ளன. மேற்கண்ட தரவுகளால் நற்றிணையில் பதிப்பாசிரியர்களாலேயே திணைகள் குறிப்பிடப்பட்டமைப் புலனாகிறது. திணை வைப்பு முறைகள் எதுவும் பின்பற்றப்படவில்லை.

### 1.2.2 குறுந்தொகை

1915 ல் திருக்கண்ணபுரம் திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கனார் இந்நூலை வெளியிட்டுள்ளார். இதில் 401 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் 72 பாடல்கள் நெய்தல் திணைக்குரியதாகும். இவற்றில் 313, 326, 381 ஆகிய மூன்று பாடல்களுக்கு ஆசிரியர்களின் பெயர் அறியப்படவில்லை. 69 பாடல்களை 46 புலவர்கள் பாடியுள்ளனர்.

#### 1.2.2.1 திணைவைப்புமுறை

குறுந்தொகை அடிவரையரை அடிப்படையிலான தொகுப்பு நூலாகும். இதுவரை வெளிவந்த குறுந்தொகைப் பதிப்புகள் சிலவற்றுள் திணை அடிப்படையிலான பதிப்பு முயற்சி மேற்கொள்ளப்பெற்றுள்ளன. நற்றிணை, குறுந்தொகை நூல்களில் திணை அடிப்படையிலான தொகுப்பு நெறிமேற்கொள்ளப் பெறவில்லை. இவ்விரு நூல்கள் குறித்து ‘‘நற்றிணை, குறுந்தொகை என்னும் இருதொகை நூல்களும் திணைகுறிக்கப்படாமலே திணையைக் கூறும் கருத்துடன் அமைந்தன வாதல் வேண்டுமென்று தோன்றுகிறது. ஏட்டுப் பிரதிகளிலும் கடிதப் பிரதிகளிலும் திணை குறிக்கப்படாமலே அவை காணப்படுகின்றன. சென்னை பழந்தமிழ் நூல் நிலையப் பிரதியிலும் திணைகுறிக்கப் படவில்லை திணைகள் குறித்து நற்றிணையும் குறுந்தொகையும் வெளியிட்டவர் முறையே பின்னத்தூர் திரு. அ.நாராயணசாமி அய்யர் அவர்களும் திருக்கண்ணபுரத்துத் திருமாளிகை சௌரிப் பெருமாள் அரங்கன் என்பவருமே யாவர்’’[25] எனக் குறுந்தொகைச் சொற்பொழிவில் குறிப்பிடும் சாம்பசிவசர்மாவின் கருத்து திணையும் திணைவரிசைமுறையும் பதிப்பாசிரியர்களாலேயே நடைபெற்றமை புலனாகிறது.

மர்ரே எஸ். ராஜம் தம் பதிப்பு முன்னுரையில் ‘‘பாடல்களின் அடியில் கொடுக்கப்பெற்றிருக்கும் கருத்துக்கள் பழமையானவை. ஆனால் பாடல்களின் தலைப்பில் இடம் பெற்றுள்ள திணைக்குறிப்புகள் பழமையானவையல்ல. நற்றிணையைப் போல் பதிப்பாசிரியர்களால் ஊகித்துக் கொடுக்கப் பெற்றவை.’’[26]

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் மு.சண்முகம் பிள்ளை முகவுரையில் ‘‘திணை பற்றிய பாகுபாட்டுக்குறிப்பு அகநானூறு, ஐங்குறுநூறு, முதலியவற்றைப் போலக் குறுந்தொகை, நற்றிணை நூல்களையும் முதன்முதலில் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் தாம் பாடலின் கண் அமைந்த கருப்பொருள், உரிப்பொருள்களைக் கருத்தில் கொண்டு திணைப்பாகுபாட்டுக் குறிப்புத் தந்துள்ளனர்’’[27] என்று குறுந்தொகை, நற்றிணை ஆகிய நூல்களுக்குக் கருப் பொருள் உரிப்பொருளடிப்படையில் திணைகள் சுட்டப்பட்டுள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.

கா. கோவிந்தன் நற்றிணை, குறுந்தொகை என்ற இரண்டு நூல் திணை வைப்பு முறை குறித்து குறிப்பிடும் பொழுது, ‘‘ஐந்திணைப் பாடல்களைத் தொகுத்ததில் இவ்விரண்டிலும் எவ்வித வரிசை முறையும் மேற்கொள்ளப்படவில்லை’’[28] என்கிறார். குறுந்தொகையில் இடம் பெற்றுள்ள ஐந்திணைகளைப் பற்றிக் குறிப்பிடும் சாமி சிதம்பரனார், ‘‘குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐந்திணை நிகழ்ச்சிகளைப் பற்றிய பாடல்களே குறுந்தொகைப் பாடல்கள். இப்பாடல்கள் எல்லாம் தனித் தனியாக இல்லாமல் கலந்து கிடக்கின்றன. குறிஞ்சித் திணைப்பாடல்கள் தனியாகவும், மருதத்திணைப்பாடல்கள் தனியாகவும், முல்லைத்திணை பாடல்கள் தனியாகவும், பாலைத்திணைப் பாடல்கள் தனியாகவும், நெய்தல் திணைப் பாடல்கள் தனியாகவும், பிரித்து ஐந்து பிரிவாக அமைக்கப்பட்டிருந்தால் நன்றாக இருக்கும்’’[29] என்று குறுந்தொகைப் பாடல் தொகுப்பு திணை இயையின்றி இருத்தலையும் ஐந்திணையடிப்படையில் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டுப் பதிப்பிக்கப்படவேண்டும் என்பதையும் குறிப்பிடுவதிலிருந்து திணைவைப்பு முறை சங்க இலக்கிய நூல்களில் பின்பற்றாமையை உறுதிபடுத்துகின்றது.

மேற்கண்ட கருத்தின் அடிப்படையில் கோ. இளவழகன் பதிப்பித்து, தமிழ்மண் அறக்கட்டளை வெளியீடுச் செய்துள்ள செவ்விலக்கியக் கருவூலம் தொகுதி –6ல் குறுந்தொகையைத் திணை வாரியாகக் குறிஞ்சி, பாலை,

முல்லை, மருதம், நெய்தல் என்ற வைப்புமுறையில் பதிப்பித்துள்ளார். இந்த திணைக்குறிப்பும், திணைவைப்புமுறையும் உரையாசிரியர்கள் செய்துள்ளனர்.

மேற்கண்ட தரவுகளால் குறுந்தொகையில் எவ்விதமான திணை வைப்பு முறையும் பின்பற்றாமையை அறிய முடிகிறது.

### 1.2.3 அகநானூறு

நெடுந்தொகை என அழைக்கப்படும் இந்நூலில் மொத்தமுள்ள 400 பாடல்களில் 40 பாடல்கள் நெய்தல் திணைக்குரியது. இப்பாடல்களை 24 புலவர்கள் பாடியுள்ளனர். இந்நூலின் சிறப்பு யாதெனில் 10, 20, 30 என்று ஒழுங்குபடுத்தப்பட்ட பாடல்கள் நெய்தல் திணைக்குரியனவாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளமையே ஆகும்.

#### 1.2.3.1 திணை வைப்பு முறை

அகநானூற்றுத் திணைத் தொகுப்பினைக் குறித்து ஆர். வேங்கடாசலம், அகநானூற்றுச் சொற்பொழிவின் தலைமையுரையில், ‘‘இந்நூலிலுள்ள செய்யுட்களின் முறை வைப்பு ஒரு தனிச் சிறப்பானதாகும். ஒவ்வொரு பத்து செய்யுட்களிலும் உள்ள ஒற்றை எண்கள் பாலையாகும். இரண்டும் எட்டும் குறிஞ்சி, நான்கு முல்லை, ஆறு மருதம், பத்து நெய்தல். எனவே பாலைக்கு இருநூறும், குறிஞ்சிக்கு என்பதும், ஏனைய முல்லை, மருதம், நெய்தலுக்கு நாற்பது நாற்பதுமாய்ச் செய்யுட்கள் உள்ளன’’[30] எனக் குறிப்பிடுகிறார்.

இதே கருத்தை சுந்தர சண்முகனார், ‘‘ஒவ்வொரு பத்துப் பாடல்களிலும் பாலைக்கு ஐந்து வீதமும், குறிஞ்சிக்கு இரண்டு வீதமும், முல்லைக்கும் மருதத்திற்கும், நெய்தலுக்கும், ஒவ்வொன்று வீதமும் இருக்கும் என அறியலாம். ஆகவே நானூறு பாடல்களிலும் பாலைக்கு நாற்பது ஐந்து வீதம் (5 * 40 = 200) இருநூறு பாடல்களும் குறிஞ்சிக்கு நாற்பது இரண்டு வீதம் (2 * 40 =80) எண்பது பாடல்களும், முல்லைக்கு நாற்பது ஒன்று வீதம் (1 *40 =40) நாற்பது பாடல்களும்

நெய்தலுக்கு நாற்பது ஒன்று வீதம் (1*40= 40) நாற்பது பாடல்களும் இருக்கும்''[31] எனத்திணைத் தொகுப்பினையும் பாடல் எண்ணிக்கை அமைந்த முறையையும் பிரிதொரு வகையில் குறிப்பிட்டுள்ளார்.

அகநானூற்றுப் பாடல் தொகுப்பில் மேற்காட்டிய திணை அடிப்படையிலான தொகுப்பு முறையே 400 பாடல்களிலும் முறையாய் பின்பற்றப்பட்டுள்ளன. ஒவ்வொரு பத்துப் பாடலும் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் திணை வரிசை முறையில் அமையுமாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அகநானூற்றின் மூன்று பகுப்புகளிலும் பாலைத்திணைப் பாடலில் தொடங்கி நெய்தல் திணைப் பாடலில் முடியுமாறு அமைந்துள்ளன. நெய்தல் திணை இறுதியாக வைக்கப்பட்டுள்ளது.

மேலும் அறிஞர் பலராலும் சுட்டப்பட்ட எண் அடிப்டையிலான திணை வைப்பு முறையே ஒவ்வொரு பத்துப் பாடலிலும் அமைந்துள்ளது. ஒவ்வொரு பத்திலும் வரும் ஒற்றைப்படை எண்கள் (1, 3, 5, 7,9) பாலைப் பாடல்களையும் இரட்டைப் படை எண்கள் (2,4,6,8,10) பிற திணைப் பாடல்களாகவும் அமையுமாறு பாடல் வைப்பு முறை அமைந்துள்ளது. ஒவ்வொரு பத்திலும் பாலைப் பாடல்கள் ஐந்தும் பிறதிணைப் பாடல்கள் ஐந்தும் வருமாறு தொகுப்பு முறை அமைந்துள்ளது. பாலை, குறிஞ்சி, பாலை முல்லை, பாலை மருதம், பாலை நெய்தல் என்ற அமைப்பில் திணை வைப்பு முறை அகநானூற்றில் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

### 1.2.4 ஐங்குறுநூறு

ஐங்குறுநூற்றில் உள்ள 500 பாடல்களில் 100 பாடல்கள் நெய்தல் திணைக்குரியதாக உள்ளன. இந்நூறு பாடல்களையும் அம்மூவனார் பாடியுள்ளார். இவற்றின் சிறப்பு பத்துப் பத்தாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பத்துப்பாடல்களும் ஒவ்வொரு தலைப்புக் கொடுக்கப் பெற்றுள்ளன. அவ்வகையில் தாய்க்குரைத்த பத்து, தோழிக்குரைத்த பத்து, கிழவற்குரைத்த பத்து, பாணற்குரைத்த பத்து,

ஞாழற்பத்து, வெள்ளாங்குருகுபத்து, சிறுவெண்காக்கைப் பத்து, தொண்டிப்பத்து, நெய்தற்பத்து, வளைப்பத்து என்ற அமைப்பு முறையில் பாடப்பட்டுள்ளது. இவற்றில் கிழவற்குரைத்தப் பத்தில் 129, 130 ஆம் பாடல்கள் கிடைக்கவில்லை. அதனால் 98 பாடல்கள் மட்டுமே உள்ளன. நெய்தல் திணைப் பாடல்களில் பரத்தைக் கூற்றாக 10 பாடல்கள் இடம்பெற்றுள்ளது சிறப்பாகும். நெய்தல் திணை 98 பாடல்களில் 55 பாடல்கள் களவுகால நிகழ்வுகளை 43 பாடல்கள் கற்புக்கால நிகழ்வுகளையும் குறிப்பதாகவும் உள்ளன.

### 1.2.4.1 திணை வைப்பு முறை

எட்டுத்தொகையுள் ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியன இரண்டும் திணைவாரியாய்த் தொகுக்கப்பட்டுள்ளன. தனித் தனிப் புலவர்களால் பாடப்பட்ட ஐந்திணைப் பாடல்களின் தொகுப்புகளாய் உள்ளன. இந்நூலில் திணைவைப்பு முறை செய்யப்பட்டுள்ளன. இதைப் பற்றி கூறுகையில் உ.வே.சாமிநாதையர், ‘‘முதன் முதலில் இந்நூலைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப் புலவரும் மலைநாட்டரசருமாதலால் ஆதனவினியென்னுஞ் சேரனைத் தலைவனாய்ப் பெற்ற முதற்பத்தையுடைய மருதம், முதலிலும் தொண்டிப் பத்தையுடைய நெய்தல் மருதத்தின் பின்னும் மலைநாட்டரசர்களைப் பாடி மலைநாட்டிற்பெரும்பாலும் வதிந்து மலைவளம் பாடுதலிற் புகழ் பெற்ற கபிலர் பாடிய குறிஞ்சி, நெய்தலின் பின்னும் சேர்க்கப் பெற்றனவென்று இம்மூன்றற்கும் ஒருவாறுமுறை கூறலாமாயினும் பாலையும் முல்லையும் இவற்றின் பின்னர் முறையே அமைக்கப்பெற்றதற்குக் காரணம் ஒருவற்றானும் விளங்கவில்லை’’[32] என தான் எழுதிய முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

மன்னர் புலவர்களின் வரிசையில் முதல் மூன்று திணைகளை வரிசைப்படுத்தும் இவர் பாலை, முல்லை ஆகியவற்றின் திணையியைபு குறித்து எதுவும் புலப்படவில்லையெனக் குறிப்பிடுகிறார். மேலும் ஐங்குறுநூற்றின் திணைவைப்புக் குறித்து ஆராய்ந்த எஸ். ரெங்கன், ‘‘ஊடலே நைதல் கூடல்

பிரிவென நிரலே நிறுத்திய தொகையால் வாழக் கூடலும், பிரிந்திரங்கலும் என்பது பெறுக. பின் வந்திருத்தல் முல்லை இதனால் ஊடல் கூட்டத்தாலும் கூட்டம் பிரிவாலும் பிரிவு பருவரல் உற்ற இரங்கலும் இருத்தலும் அழிவடையும் என இவ்வைந்தின் நிலையாமையும் வெருது முதலா மாலையீராகக் காட்டியத் தொகையில் நாளது இன்மையும் தெளிந்து இவை சுழன்று வருதலே அகத்திணைத்தாய இல்வாழ்க்கையென்று காட்டி, நுகர்ந்து இட்டுக் கழிப்பிய பின்றைத் பின்றைத் துறவு புகுந்து பேறடைக என்பதும் அறிவுபடக் கோத்தமை அறிக.''[33] என இல்வாழ்க்கையில் அகத்திணையின் உரிப்பொருள்கள் இயைந்து வரும் இயல்பைக் காட்டிப்பின் துறவு மேற்கொள்ளல் வேண்டும் என்பதனடிப் படையில் ஐங்குறுநூற்றில் ஐந்திணைகளும் முறைப்படுத்தப்பட்டுள்ளன என்கிறார்.

திணை வைப்பு முறை குறித்துப் புலியூர் கேசிகன் தன் பதிப்பு முன்னுரையில், ''முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்னும் இலக்கண விதியை ஒதுக்கி, ''மருதம் நெய்தல், குறிஞ்சி, பாலை என முறைப்படுத்தித் தொகுத்து இந்நூலை இவர் தமிழுக்குத் தந்திருக்கின்றார். வேளாண் குலத்தவராதலால் மருதத்தை முதலிலும் மாந்தரன் நெய்தல் நிலத்துத் தொண்டியிருந்தோனாதலின் அதனை அடுத்தும் நடுநாயகமாகும் என்பதால் குறிஞ்சியை நடுவாக வைத்தும் முல்லையின் எழிலைக் கருதி அதனை இறுதியில் வைத்தும் குறிஞ்சியும் முல்லையும் திரிந்தே பாலையென்னும் நிலையை எய்தலால் பாலையைக் குறிக்கும் முல்லைக்கு இடையில் வைத்தும் தொகுத்தார் என்று கருதலாம்''[34] என்று தொகுத்தார் தொகுப்பித்தார் அடிப்படையில் முதலிரு திணைகளும் திணைக்குரித்தான இயைபு கருதி ஏனைய மூன்று திணைகளும் முறைப்படுத்தப்பட்டன என்று குறிப்படுகின்றார்.

ஐந்திணைகளின் வைப்பு முறைகளை பேசவந்த சுந்தர சண்முகனார், ''ஐங்குறுநூற்றின் முதலில் உள்ள மருதப் பகுதியின் முதல் பத்து, வேட்கைப் பத்து என்னும் பெயருடையது இதிலுள்ள பத்துப் பாடல்களிலுமே 'வாழியாதன்

வாழிஅவினி' என்னும் தொடரே முதல் அடியாக உள்ளது. எனவே மருதப்பத்து 'வாழி' என்னும் மங்கலத்தொடக்கத்தால் மருதப்பகுதி ஐங்குறுநூற்றில் முதலிடம் பெற்றிருக்கலாம். மற்றும் 'வாழி ஆதன் வாழி அவினி' என்னும் தொடரால் வாழ்த்தப்பட்டிருக்கும் ஆதன் என்பவர் சேர மன்னர் நூலைத் தொகுத்த கூடலூர்க் கிழாரும் சேரநாட்டுப் பகுதியைச் சேர்ந்தவர். எனவே சேர மன்னர் ஒருவனது வாழ்த்துடன் தொடங்கும் மருதத்திணையை அவர்கள் முதலில் வைத்ததில் வியப்பில்லை. மருதத் திணையையடுத்து நெய்தல் திணை இரண்டாவதாக நிறுத்தப் பெற்றுள்ளது. ஐங்குறுநூற்றைத் தொகுத்தவன் யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை இவன் தொண்டியையாண்டவன், 'தொண்டிப்பத்து' என்னும் ஒரு பத்து நெய்தல் திணையில் உள்ளது. தொண்டி கடற்கரைப் பட்டினமாகும். நெய்தல் திணையும் கடற்கரை சார்ந்தது. எனவே ஐங்குறுநூற்றில் நெய்தல் திணை இரண்டாவதாக இடம் பெற்றிருப்பது பொருத்தமே யாகும்''[35] என்று முதலிரண்டு திணைகளும் 'சேரநாடு' என்னும் நில இயைபு அடிப்படையில் தொகுத்தவர் தொகுப்பித்தவர் இருவரும் சேர நாட்டினராய் இருப்பதால் முதன்மைப்படுத்தப்படுள்ளன எனக் குறிப்பிடும் இவர் எஞ்சிய மூன்றனுள் குறிஞ்சி பாடுவதில் சிறந்த சங்கப்புலவரான கபிலரால் பாடப்பட்டமையால் மூன்றாவதாகவும் எஞ்சியவை பிரிவு. பிரிவுக்குப் பின்னே ஆற்றியிருத்தல் என்னும் உரிப்பொருள்கள் நிகழ்வதால் அதனடிப்படையில் பாலை, முல்லை என வரிசைப்படுத்தப்பட்டுள்ளமைக்குக் காரணம் கூறுகின்றார். இக்கருத்திற்கு வலுசேர்க்கும் வகையில் பெ.மாதையன் அவர்கள் ஐங்குறுநூற்றின் திணை வைப்பு முறைகுறித்துக் கூறுகையில், ''ஐங்குறுநூற்றின் திணைவைப்புகள் மருதத்தில் தொடங்கி முல்லையில் நிறைவடையவனவாக மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற வைப்பு முறையுடன் கட்டமைக்கப்பட்டுள்ளன. இந்தத்திணை வைப்பிலேயும் ஒருவகை அரசச் சார்பு இருப்பதை உணரமுடிகிறது. மூவேந்தர் தம் அரசு உருவாக்கத்தில் முக்கியப் பங்கு வகித்துள்ளன. இனிவரும் குறிஞ்சியும் முல்லையும் மேற்படி இரு நிலங்களையும் அடிப்படையாகக் கொண்டு உருவான

அரசருக்கும் அரசுகளுக்கும் துணை நிற்பனவாக இருந்துள்ளன குறிஞ்சி நிலத்தை யாண்ட குறுநில மன்னர்கள் பலர் வேந்தர்களின் சார்பினராகவே இருந்துள்ளனர். எதிர்த்த பாரி, அதியன், ஓரி போன்றவர்கள் வேந்தர்களால் அழித் தொழிக்கப்பட்டுள்ளனர். மருதம் நெய்தலும் போலப் பருவகால வருவாய் அதாவது ஆரம், அகில், மிளகு போன்ற மலை விளைப்பொருட்களின் விளை நில ஆதாரமாக இருந்த குறிஞ்சி வேந்தர்களின் கவர்ச்சி நிலப்பகுதியாக அமைந்ததால் அதைக் கவர்வதற்கான போர்கள் வெகுவாக நிகழ்த்தப்பட்டுள்ளன. முல்லை அரசச் சார்புடையது. வேந்தனின் பாசறைப் போர்களில் ஈடுபட்டவர்கள் பெரும்பாலும் முல்லை நிலம் சார்ந்தவர்களாகவே உள்ளனர். முல்லையே வேந்துவிடு தொழிலுக்கு ஆட்பட்ட சீறூர் மன்னர்களின் வாழ்விடமாக இருப்பதைப் புறநானூற்றின் மூதின்முல்லை, வல்லாண் முல்லைப் பாடல்கள் காட்டுகின்றன. எனவே மலைநாடாகிய குறிஞ்சியை அடுத்து அமைந்த காட்டு நிலமாகிய முல்லை சார்ந்த திணை அடுத்து வைக்கப்பட்டுள்ளது. அரசு சார்ந்த திணை அடுத்து வைக்கப்பட்டுள்ளது. அரசு சார்ந்த அரச முதன்மை சார்ந்தோர் தம் வாழ்விடமாக அமைந்த குறிஞ்சியும் முல்லையும் அடுத்து அமையுமாறு ஐங்குறுநூற்றின் திணைவைப்பு நானிலஇணைப்புக்கு ஆதாரமான அரசின் சார்பினதாகவே அமைந்துள்ளது. பாலை என்பது திணைக் கவிதையியல் மரபிலும் வாழ்வியல் மரபிலும் மிக முக்கியமான இடத்தை உடையது. பாலை நடுவிண் ஐந்திணையாக அமைந்து நானிலப் பொதுத் திணையாக அமைந்த இயல்புடையது''[36] என்று திணைவைப்புமுறை குறித்துக் கூறுகின்றார்.

இக்கருத்துச் சங்க இலக்கிய அகநூல்கள் அனைத்திற்கும் பொருந்துமா என்ற வினாவும் எழுகிறது. சங்கத்திணைக்கவிதையியல் மரபில் திணைகளின் வைப்புமுறையும் முக்கியமானதொரு கவிதையியல் மரபாக உள்ளது. பாலையில் தொடங்கி நெய்தலில் முடியும் நிலையிலும் ஒவ்வொரு திணைப்பாடலுக்கு முன்னரும் ஒரு பாலைப் பாடலை பாலைகுறிஞ்சி, பாலைமுல்லை, பாலைமருதம், பாலை நெய்தல் என அமைத்துக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற

திணைவைப்பு முறையை உடைய அகநானூற்றின் திணைவைப்பு முறையிலிருந்து ஐங்குறுநூற்றின் திணைவைப்பு முறை மாறுபட்டுள்ளதைக் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

### 1.2.5 கலித்தொகை

'கற்றறிந்தோர் ஏத்தும் கலி' எனப் போற்றப்படும் இந்நூலில் 150 பாடல்கள் உள்ளன. இந்நூலிற்கு முதலாவதாக உரைகண்டவர் நச்சினார்க்கினியராவார். இதில் 36 பாலைத்திணைப் பாடல்களைப் பாலைப்பாடிய பெருங்கடுங்கோவும் 29 குறிஞ்சித் திணைப்பாடல்களை கபிலரும் 35 மருதத்திணைப் பாடல்களை மருதனிளநாகனாரும், 17 முல்லைத் திணைப்பாடல்களை நல்லுருத்திரன் அவர்களும் 33 நெய்தல் திணைப்பாடல்களை நல்லந்துவனாரும் பாடியுள்ளனர்.

#### 1.2.5.1. திணை வைப்பு முறை

தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன்றிலும் ஐந்திணைப் பாடல்களும் கலந்து காணப்படுகின்றன. ஆனால் ஐங்குறுநூறு, கலித்தொகை இரண்டிலும் குறிப்பிட்ட திணைப்பாடல்களை ஓரிடத்தில் வைக்கும் திணை அடிப்படையிலான வரிசைமுறை இடம் பெற்றுள்ளன.

கலித்தொகையின் உரையில் நச்சினார்க்கினியார் திணை வைப்பு முறையைக் கூறுகையில், ''முல்லை, குறிஞ்சி, மருதநெய்தலெனச் 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என் புழிச் சொல்லாத முறையாற் சொல்லவும்படும் என்றலின் இத்தொகையைப் பாலை, குறிஞ்சி, மருதம், நெய்தலென இம்முறையே கோத்தார் நல்லந்துவனார்''[37] என்று கூறுகின்றார். கலித்தொகையின் திணைவைப்பானது பாலைத்திணையை முதன்மைப்படுத்தப்படுவதோடு நெய்தல்திணை இறுதியாக வைக்கப்பட்டுள்ளது. ஐந்திணைகளில் பாலைத்திணை முதலில் வைக்கப்பட்டமைக்கான காரணம் குறித்து இ. வை. அனந்தராமையர் தம் முன்னுரையில் ''ஐந்திணையும் விரவிக் கோக்கப்பெற்ற நற்றிணை, குறுந்தொகை,

அகநானூறு போலாது விரவாது கோக்கப்பெற்ற ஐங்குறுநூறு அகப்பொருள் பற்றிய கீழ்க்கணக்கு நூல்கள் இலக்கண நூல்கள் இவற்றிலேனும் முதலிடம் பெறாத பாலைத்திணையை இவர் முதலில் நிறுவியதற்குக் காரணம் யாவரும் இத்திணையை முதலில் வைக்காமையால் இது முதலில் வருமோ வாராதோவென்று ஐயுற்று மயங்கி வாராதென்று திரியவுணர் வார்க்கு அத்திரி புணர்ச்சியை நீக்கல் கருதிப் போலும் அன்றி பாலை நானிலப் பொதுவாதலின் பொதுவை முற்கூறிச் சிறப்பைப் பிற்கூறுவதும் மரபென்பது பற்றி எனினுமாம்''[38] என்று பாலை முதலில் வருமோ வாராதோ என ஐயப்படுவார் ஐயத்தை நீக்க வேண்டும் என்பதாலும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு திணைகளுக்கும் பொதுவானது. பாலை என்பதாலும் பாலை முதலில் வைக்கப்பட்டுள்ளது எனச் சுட்டுகின்றார்.

இத்திணை வைப்பு முறையைப் பற்றி பல உரையாசிரியர்கள் கூறியுள்ள கருத்துக்களையும் கவனிக்க வேண்டியுள்ளது.

கலித்தொகையின் முன்னுரையில் பொ.வே. சோமசுந்தரனார், ‘‘செய்யுட்களையாதல் திணைகளையாதல் கோத்ததற்கு இலக்கணம் தொல்காப்பியம் முதலிய நூல்களில் யாண்டும் இன்மையின் கோப்பவர் தம் மனம் போனவாறு கோக்கலாம் ஆதலின் நல்லந்துவனார் இதனைக் கோவை செய்யுங்கால் இப்பாலைத் திணை முன்னிற்பதாயிற்று''[39] என்று தொல்காப்பியம் உள்ளிட்ட நூல்களில் திணை வைப்பிற்கு வரையறையின்மையின் விருப்பம்போல் கோக்கலாமென்பதைக் குறிப்பிடுகின்றார். மேலும் இது பற்றி பேசும், நா.ஆறுமுகம், ‘‘பாலை என்பது முழுதுந்துன்பமன்று பிரிவானோ என்று அஞ்சுவது பெரும்பாலும் அஞ்சும் பொழுது அன்பின் நொய்மை நன்கு புலப்படும். எந்தப் புலவனும் துன்பத்தைப் பற்றிச் சொல்லும் போதுதான். தான் மனிதத் தத்துவத்தையறிந்துள்ள முறையை நன்கு உணர்த்த முடியும். பாலைக்கலிப்பாடல்கள் மற்ற கலிப்பாடல்களை விடச்சுவையும் பயனும் நிரம்பியவை. வாழ்வியல் உண்மைகளையும் அறநெறி

விளக்கங்களையும் கொண்டவை அதனாலும் முதலில் இடம் பெற்றிருக்கலாம்’’[40] என்றதொரு கருத்தையும் சுட்டுகின்றார். இவ்வாறு அறிஞர்கள் திணை வைப்புக் குறித்தும் பாலை முதலில் வைக்கப்பட்டமை குறித்தும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள திணைவைப்பு முறையைப் பற்றிக்கூறும் வ.சுப. மாணிக்கம், ‘‘சொல்லிய முறை என்பதற்குத் திணை வரிசை சொல்லிய முறை அன்று என்பதை மறுத்து தாம் சொன்ன முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற வரிசையைத் தொல்காப்பியர் பின்பற்றவில்லை . அவருக்குப் பின் வந்த சான்றோர்களும் பின்பற்றவில்லை என்று குற்றம் அடுக்கிக் கொண்டே போவதைக் காட்டிலும் தொல்காப்பியர் வரிசைமுறை சொல்லவே இல்லையே, ‘சொல்லாததைச் சொன்னதாகச் சொல்லிய முறை என்ற தொடருக்கு உரை கண்டது தவறு என்று முடிப்பதே என் கருத்து’’[41] என்கிறார். இதிலிருந்து தொல்காப்பியர் திணை வரிசைமுறையைச் சுட்டவில்லை என்பதையும், உரையாசிரியர்களால் திணைவைப்புமுறை புகுத்தப்பட்டது என்பதையும் அறியமுடிகிறது. மேலும் ‘‘உலகமும் என வருகின்ற நான்கும் எண்ணும்மைகள் அல்லவே அல்ல. எதிரது தழீஇய எச்சவும்மைகள், காடுறையுலகமும் முல்லை ஏனைக் காலமும் கருவும் உரியும் என்றின்னவையும் முல்லையாம் என்று சுட்டிப் பொருள் கொள்ள வேண்டும்’’[42] எனச் சொல்லிய முறைக்கு விளக்கம் அளித்துள்ளார்.

ஆக திணை வைப்பு முறையானது உரையாசிரியர்களாலும் பதிப்பாசிரியர்களாலும் தொகுப்பித்த அரசர்களின் ஈடுபாட்டாலும் சங்க இலக்கியங்களில் திணைவைப்பு முறைகள் நிகழ்ந்துள்ளதை அறியமுடிகிறது.

### 1.3 நெய்தல்திணைப் புலவர்கள்

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்கள் சாதி, சமயங்களைக் கடந்த பொதுமைப் பண்பில் பாடல்கள் பல இயற்றியுள்ளனர். மக்களின் வாழ்க்கை நிலைகளை அகம், புறம் என்ற இரு நெறிக்கண் பாடிய புலவர்கள் புறத்தைவிட

அகத்திற்கே முதன்மைக் கொடுத்துள்ளனர். இதற்குக் காரணம் ஒருவன் அகவாழ்க்கைச் சரியாக அமைந்தால்தான் அவனால் புறவாழ்க்கையில் சிறப்பாகச் செயல்படமுடியும் என்ற கருத்தாக்கம் கொண்டமையே ஆகும். சுருக்கமாகச் சொன்னால் அகத்தின் பிரதிபலிப்பே புறம் என்ற கருத்தாக்கம் புலவர்களின் சிந்தைகளில் தோன்றியிருக்கின்றது. இதைப்பற்றிக் கூறவந்த மு.சண்முகம்பிள்ளை, “பொதுவாகச் சங்க இலக்கியத்தைப் புனைந்த புலவர்களைக் காணும் போது இவர்கள் இயற்கையில் ஈடுபட்டு அவற்றுள் பொதிந்துள்ள உண்மைகளை நன்கு சித்தரித்துள்ள நிலையினை அறிய முடிகிறது. மிகைப்படக்கூறலான பகுதிகள் மிகமிகக் குறைவு அவர்கள் பாடுவதற்குத் தேர்ந்து கொண்ட தமிழ் அவர்கள் கருத்துக்களைத் தெளிவுற விளக்குகின்றன. அழகும் உணர்ச்சியும் ததும்பும் கருத்தொடு பிணைந்து செல்லும் சொற்களையும் தொடர்களையுமே எடுத்தாளுகின்றனர். மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் தத்தம் பாடல்களில் பொதிந்து வைத்துள்ளனர். பறவை, விலங்கு, தாவரம், குன்று, மலை, யாறு, இருசுடர் இயற்கைத் தோற்றங்கள் போன்றவற்றையும் இவர்கள் கூர்ந்து உணர்ந்து ஏற்ற இடங்களில் உவமை வாயிலாகவும் பொதிந்து வைத்துள்ளனர். இவற்றால் பண்டைய மக்களின் நிலவியலறிவு பூதபௌதிகம் பொருட்களைப் பற்றிய சிந்தனை இயற்கைப் பொருளின் இயல்புகளைக் கூர்ந்து அறிதல் போன்ற அறிவியல் வளர்ச்சிகளையும் காண்கிறோம். வீரமறவனின் பெயரையும் பெருமையையும் போர் பற்றிக் கல்லில் அவர் தம் செயலைப் பொறித்து வைத்த மரபினால் சிறந்த நினைவுகளையும் போற்றிக் காக்கும் பண்பும் புலப்படும். பண்டைய நாளில் சாசனச் சான்றுகள் இல்லாக் குறையைப் போக்கும் வகையில் இந்த இலக்கியப் பாடல்கள் சிறந்த பிரமாணங்களாக உள்ளன’’[43] என்கிறார். இந்த வகையில் சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழரின் வரலாற்றினை அறிந்து கொள்வதற்கும் பண்பாட்டின் சிறப்பினை எடுத்தியம்புவதற்கும் சங்கப் புலவர்களின் கவிமரபையும் தனித்திறனையும் அறிந்து கொள்வதற்கு முதன்மைச் சான்றாக அமைகின்றன.

நெய்தல் திணைப் பாடல்களை இயற்றிய 99 புலவர்களுள் அதிகமான பாடல்களை நெய்தலில் படைத்தவர்கள் மூவர் ஆவர். அவர்களுள் முதன்மையானவர் அம்மூவனார், அதற்கடுத்த நிலையில் நல்லந்துவனார் மூன்றாவது நிலையில் உலோச்சனாரும் உள்ளனர்.

### 1.3.1 அம்மூவனார்

அம்மூவன், அம்மூவனார் என்ற பெயருடைய இருவரும் ஒருவரேயாவர், ''மூவன் என்னும் இயற்பெயரே சிறப்புணர்த்தும் அகரத்தை முதற்கண்ணும் ஆர் விகுதியை ஈற்றிலும் பெற்று 'அம்மூவனார்' எனப்பாராட்டிக் கூறப்படுகிறது என்று கருதுவதுண்டு, ஆயினும், இவர்தம் பாடலில் தொண்டி, மாந்தை முதலிய சேரநாட்டு மேலைக் கடற்கரையில் இருந்தவரென்று கருதுவதற்கு இடமிருப்பதாலும் இக்காலத்தும் அந்நாட்டில் அம்மு, திம்மு, திப்பு என்னும் பெயர்கள் மக்களுக்கு இடப்பட்டு வழங்கி வருவதாலும் இவரது இயற்பெயர் 'அம்மு' வென்றும் இருக்கலாம்''[44] என்கிறார். பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர். மேலும் இவர் சேரன் பாண்டியன் என்னும் முடியுடைய வேந்தர் இவராலும் திருகோவிலூரை ஆண்ட காரி என்னும் வள்ளலாலும் ஆதரிக்கப்பெற்றவர் என்பது குறிக்கத்தக்கது. இவர் பாடியனவாக 123 நெய்தல் திணைப்பாடல்கள் உள்ளன.

#### 1.3.1.1. பாடல் சிறப்புகள்

நெய்தல் பாடுவதில் வல்லவரான அம்மூவனார் இந்நிலத்தின் வளங்கள் பலவற்றையும் வரலாற்றுச்செய்திகளையும் இவருடையப் படைப்புகளில் உள்ளன. சேரநாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய தொண்டியை (ஐங் 171 –180) பாடல்களிலும் சிறப்பிக்கின்றார். இதனை,

''திரை இமிழ் இன் இசை அளை இ, அயலது
முழுவு இமிழ் இன்இசை மறுகு தொறு இசைக்கும்
தொண்டி அன்ன பணைத்தோள்,
ஒன்தொடி, அரிவை –என் நெஞ்சு கொண்டாளே!''[45]

என்னும் பாடலில் தொண்டி நகரையும் இந்நகரில் நடைபெற்ற விழாக்களையும் இங்கு வசிக்கும் மக்களையும் சிறப்பித்துள்ளார். இக்காலத்தில் தொண்டி என்பதை ஆலப்புழையென்பர். உ.வே.சா இதனை அகலப்புழை என்பார். ஐங்குறுநூறு மட்டுமின்றி பிற இலக்கியங்களிலும் தொண்டித்துறைமுகத்தின் சிறப்புகள் இடம்பெற்றுள்ளன.

‘‘குலையிறைஞ்சிய கோட்தாழை
அகல் வயல், மலை வேலி
நிலவு மணல் வியன் கானல்
தெண் கழிமிசைத் தீப்பூவின்
தண் தொண்டி யோர் அடுபொருக !’’[46]

‘‘பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்
மோட்டு மணல் அடைகரைக் கோட்டு மீன் கெண்டி
மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளம் கெழு தொண்டி அன்ன இவள் நலனே’’[47]
‘‘திண்டேர்ப் பொறையன் தொண்டி அன்ன எம்’’[48]
‘‘திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுரை’’[49]
‘‘பல்லாபயந்த நெய்யிற் றொண்டி’’[50]
‘‘வெண் சோட்டு யானை விறற்போர்க்குட்டுவன்
தண்டிரைப் பரப்பின் தொண்டி’’[51]

என்னும் பாடலடிகள் தொண்டி நகரின் சிறப்பைப் புலப்படுத்துகின்றன. தொண்டி துறைமுகத்தை அடுத்து அம்மூவனார் மாந்தை துறைமுகத்தைக் குறிப்பிடுகின்றார். இதனை,

‘‘துறைகெழு மாந்தை யன்ன இவள்நலம்’’ [52]
‘‘கடல்கெழு மாந்தை அன்ன எம்

வேட்டளை யல்லையாம் நலந்தந்து சென்மே''[53]

என்னும் அடிகள் சுட்டுகின்றன.

பாண்டிய நாட்டுக் கடற்கரைப் பட்டினமாகிய கொற்கையை,

''அலங்கு இதழ் நெய்தல் கொற்கைமுன்துறை

இலங்கு முத்து உறைக்கும் எயிறு கெழுதுவர் வாய்''[54]

என்னும் அடிகளில் சுட்டுவதோடு பூழிநாட்டைப் பற்றியும் காட்சிப்படுத்துகின்றார். இதனை,

''யாரணங்குற்றனை கடலே பூழியர்''[55]

என்னும் அடிகள் சுட்டுகின்றன. மேலும் நெய்தல் நிலமாகிய பரதவர்களின் தொழில்களான மீன் பிடிக்கச் செல்லுதல், பிடித்து வந்த மீனைப் பகிர்ந்து கொடுத்து வாழ்ந்தமையை,

''மோட்டு மணல் அடைகரைக் கோட்டு மீன் கெண்டி

மணம் கமழ் பாக்கத்துப் பகுக்கும்

வளம் கெழு தொண்டி அன்னஇவள் நலனே''[56]

என்னும் அம்மூவனாரின் பாடல் சுட்டுகின்றது.

நெய்தல் பாடிய புலவர்களில் இருந்து அம்மூவனார் மாறுபட்டிருப்பதை அவரின் தலைவனும் தலைவியும் களவு கொண்டு கற்பு வாழ்க்கைக்குச் சென்ற நிலையில் அவர்கள் இருவரையும் தோழி பள்ளிடம் துய்த்து வாழ்த்துகின்றமையை,

''எக்கர் ஞாழல் இருந்து படுபெருஞ்சினை

வீ இனிது கமழும் துறைவனை

நீ இனிது முயங்குமதி, காதலோயோ''[57]

''அக்கர் ஞாழற் பூவின் அன்ன

சுணங்கு வளர் இளமுலை மடந்தைக்கு

அணங்கு வளர்த்து அகறல் வல்லாதீமோ''[58]

என்னும் பாடல்கள் விளக்குகின்றன. 'பள்ளிடம் துய்த்தல் ' என்பது இன்றைய கால கட்டங்களில் 'முதல் இரவு' நடைபெறும் சூழலைக்குறிக்கும் வகையில் உள்ளன. அதற்கடுத்த நிலையில் நெய்தல் நிலத்தில் பரத்தமைப் பண்பு காணப்படுவதாக மொழிந்துள்ளமையினை நோக்கம் போது இந்நிலத்தில் வாழ்கின்ற தலைவன் செல்வச் செழிப்புற்று இருந்திருக்கிறான் என்பதை உணரவைக்கிறது. அது மட்டுமின்றி அப்புறப் பெண்டிரைத் திருமணம் செய்து கொள்ளும் வழக்கமும் இருந்துள்ள தன்மையினைச் சுட்டிக் காட்டுகின்றன.

இதனை,

"வெள்ளாங் குருகின் பிள்ளை செத் தென,

காணிய சென்ற மடநடை நாரை

கையறுபு இரற்று கானல் அம் புலம்பந்

துறைவன் வரையும் என்ப ;

அறவன் போலும் ; அருளுமார் அதுவே''[59]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. அகநானூற்றில் அமைந்த அம்மூவனாரின் பாடல்களில் நெய்தல் நில உமணப் பெண்களின் காதலையும் பிற நிலங்களுக்குச் சென்று உப்பு விற்பதையும் காட்சிப் படுத்துகின்றார்.

இதனை,

"பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்

.....................................................

மதர்கயல் தலைப்பின் அன்ன கண் எமக்கு''[60]

என்னும் பாடலில் உப்பு விற்பதற்கு உமணப்பெண் சென்றதையும் நெல்லுக்கும் உப்பிற்கும் நிகராக விலை கூறியதையும் செல்லும் வழியில் நாய் குறைத்ததையும்

அதனால் அப்பெண் பயமுற்றதையும் இதனைக் கண்ட தலைவன் அப்பெண்ணிடம் காதல் கொண்டதையும் ஒன்றன் பின் ஒன்றாகக் காட்சிப்படுத்துகின்றார். மற்றொரு உமணப் பெண்ணின் காதலை,

''உவர்விளை உப்பின் கொள்ளை சாற்றி

அதர்படு பூழிய சேண்புலம் படரும்,

..................................................................

பல்மாண் பேதைக்கு ஒழிந்தது எண் நெஞ்சே''[61]

என்னும் அடியில் நெல்லும் உப்பும் ஒரே விலையாகும் என்று கூறிச் செல்கின்ற மூங்கில் போலும் தோளினையுடைய பெண்ணிடம் அந்நிலத் தலைவன் காதல் கொண்டதையும் அவர்களின் உள்ளம்படும் தவிப்பையும் அம்மூவனார் உணர்ந்தது போலவேக் காட்சிப்படுத்தியுள்ளார். மற்றப்புலவர்களின் எவரும் நெய்தல் நிலத்தையும் இந்நில மக்களின் செயல்பாடுகளையும் கூறவில்லை எனலாம். மேலும் நெய்தல் நிலத்தலைவியை மணம் செய்ய நினைக்கும் தலைவன் தலைவியின் தந்தையின் இசைவைப் பெறும் வகையில் செயல்பட்டதை, அகநானூற்றுப் பாடலொன்றில் காணலாம்.

இதனை,

''பொன் அடர்ந்தன்ன ஒள் இணர்ச் செருந்திப்

........................................................

கானல் அம் பெருந்துறைப் பரதவின் எமக்கே''[62]

என்னும் பாடல்மூலம் அறியலாம்.

ஈங்கு தந்தை முதன்மைப்படுத்தப்படுவதோடு மட்டுமின்றிப் 'பணிமணம்' என்ற ஒன்று அக்கால நெய்தல் நிலமக்களின் வழக்கில் இருந்தமையையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

அம்மூவனாரின் பாடல்களில் நெய்தல் நில மக்களின் வாழ்க்கைப்படி நிலைகள் உள்ளடக்கியதாகப் பாடப்பட்டுள்ளன.

### 1.3.2 நல்லந்துவனார்

கலித்தொகையில் நெய்தல் கலியில் 33 பாடல்களைப் பாடியவர் நல்லந்துவனார். அது மட்டுமின்றி அகநானூறு, நற்றிணை ஆகியவற்றில் ஒரு பாடலும் பரிபாடலில் 2 பாடலும் உள்ளன. இந்த வகையில் நெய்தலுக்கென்று அதிகமான பாடல்களைப் பாடிய இரண்டாவது புலவராக நல்லந்துவனார் கருதப்படுகிறார்.

#### 1.3.2.1 பாடல் சிறப்புகள்

நல்லந்துவனார் நெய்தல்கலியில் பல புதுமைகளைச் செய்திகளைப் பதிவுசெய்துள்ளார். பெருந்திணைச் சார்ந்த பத்துப்பாடல்களைப் பாடியுள்ளார். பெண்கள் மிக்க காமத்தை வெளிப்படுத்துதல் இயலாது என்கிற ஒரு நிலையினை மாற்றி அவர்களும் தங்களுடைய உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் பாடல் புனைந்திருப்பது சிறப்பிற்குரியதாகும். மற்ற அக நூல்களில் புனையப் பெற்றுள்ள நெய்தல் பாடல்களை விட இரங்கல் உணர்வு இதில் அதிகமாக வெளிப்படுத்தப்பெற்றுள்ளன. கடல், மேகம், நிலவு, காற்று, ஞாயிறு, புல்லாங்குழல் போன்ற உயிரில்லா அஃறிணைகளை விளித்துப் பேசவும் கேட்கவும் உணரவும் வல்லவை போலக் கருதி அவற்றுடன் உரையாடித் தன்னுடைய துயரத்தினைத் தீர்த்துக் கொள்ளுவதாக இயற்கைக்கும் மனிதனுக்கும் இடையேயான ஓர் உறவினை ஏற்படுத்திக் காட்டியுள்ளார். நெய்தல் நிலத் தலைவியை விரும்பும் தலைவன் ஒரு போர் வீரனாகப் படைக்கப்பட்டுள்ளான். இதனை,

“நீருள் நிழல் போல் கொளற்கு அரியள்–போருள்
அடல் மாமேல் ஆற்றுவேன் என்னை மடல் மாமேல்
மன்றம் படர்வித்தவள்–வாழி சான்றீர் !’’[63]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் தலைவனை விரைவில் வரைவு மேற்கொள்ளத் தூண்டும் வகையில் அறநெறிகள் பல இவருடைய பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

கடற்கரையில் வாழக்கூடிய நண்டுகளின் பண்புகள் கூடத் தலைவனுக்கு இல்லாமையையும் தலைவன் செய்த செயலுக்கு நாணி அத்துறையின் நண்டு வளைக்குள் சென்று மறைவதாகப் பாடுகிறார். இதனை,

"நாணின கொல், தோழி ? நாணின கொல், தோழி ?
இரவு எலாம் நல்தோழி நாணின—என்பவை
வாள் நிலா ஏய்க்கும் வயங்கு ஒளி எக்கர் மேல்
ஆனாப் பரிய அலவன் அளை புகூஉம்—
கானல் , கமழ்ஞாழல் வீ ஏய்ப்ப, தோழி ! என்
மேனி சிதைத் தான் துறை"[64]

என்ற பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. நெய்தல்நில மக்களின் வாழ்வியலைப் புலப்படுத்தும் வகையில் நல்லந்துவனாரின் பாடல்கள் அமைந்துள்ளன.

### 1.3.3. உலோச்சனார்

நெய்தல்திணை பாடல்களைப் பாடிய மூன்றாவது புலவர் உலோச்சனார். சமண சமயத்தில் தலைமுடியினைப் பறித்தகற்றும் சமயச் சடங்கிற்கு 'உலோச்சு' என்று பெயர். இதன் காரணமாக இப்புலவரைச் சமணசமயத் தொடர்புடையவராகக் கருதுவர். சங்க இலக்கியத்தில் இவருடைய பாடல்கள் 35 உள்ளன. இவற்றுள் 31 பாடல்கள் நெய்தல் திணைக்குரியதாகும்.

#### 1.3.3.1 பாடல்களின் சிறப்புகள்

நெய்தல் நில மக்களின் வாழ்வியலைப் பதிவு செய்த புலவர்களில் உலோச்சனார் தனிச்சிறப்பிற்குரியவராவார். நற்றிணையில் இடம்பெற்றுள்ள

இவருடைய நெய்தல் திணைப் பாடல்கள் பரதவர்களைப் பற்றிய நுண்ணிய குறிப்புகள் பலவற்றைத் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளன. பரதவர்களை,

'உவர் விளை உப்பின் உழா உழவர்

ஒகை உமணர் வருவதம் நோக்கி''[65]

என்று வேளாண் மக்கள் செய்யும் உழவுத் தொழிலோடு ஒப்புமைப்படுத்திக் காட்டுகின்றார். மேலும், நெய்தல் நிலத்தலைவனை,

''கண்டல் வேலிக் கழிசூழ் படப்பைத்

தெண் கடல் நன்னாட்டுச் செல்வன் யான் என''[66]

எனக் குறிப்பிடுவதிலிருந்து இத்தலைவன் ஒரு நாட்டிற்கே உரிமை உடையவர்களாகவும் ஆட்சியாளராகவும் இருந்திருக்கக் கூடும் என்று எண்ணுவதற்கு இடமளிக்கிறது. மேலும் நெய்தல் நில மக்கள் திமில்களில் மீன் பிடிக்கச் சென்று ஊர் திரும்புவதைக் கண்ட மழலைகள் திமில்களை எண்ணி விளையாடி மகிழ்கின்றன. இதனை,

''எந்தை திமில் இது நுந்தை திமில்என

வளை நீர் வேட்டம் போகிய கிளைஞர்

திண்டிமில் எண்ணும் தண்கடற் சேர்ப்ப''[67]

என்னும் அடிகளில் காட்சிப்படுத்துகின்றார். மேலும் திமிலில் உள்ள விளக்குகளை எண்ணியதை,

''திருங்கடல் துழவும் பனித்தலைப் பரதவர்

திண்டிமில் விளக்கம் எண்ணும்

கண்டல் வேலிக்கழி நல்லூரே''[68]

என்னும் பாடலடிகளில் உலோச்சனார் நெய்தல் நில மக்களின் செயல்பாடுகளைக் காட்சிப்படுத்துகின்றார். மேலும்

நெய்தல் நில மக்களின் குடியிருப்புகளைச் சுட்டும் போது,

“நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்,
புலால் அம்சேரி புல்வேய் குரம்பை,
ஊர் என உணராச் சிறுமையொடுந் நீர் உடுத்து
இன்னா உறையுட்டு ஆயினும், இன்பம்”[69]

என்னும் பாடல்அடிகளில் புல் வேய்ந்த குடிலையும் அக்குடியில் சிறிதாயின் இன்பமுடன் வாழ்ந்தமையும் காட்சிப்படுத்துகின்றார். மேலும் தழையாடை அணிந்தமை, குரவையாடல் நிகழ்த்தியமை, அலவன் ஆட்டி விளையாடியமை, ஊசல்கட்டி விளையாடிய நிகழ்வு என நெய்தல் நில மக்களின் செயல்பாடுகளைக் காட்சிப்படுத்துகின்றார். மேலும் குதிரை என்னும் விலங்கினத்திற்கு இலக்கண நூல் இருந்தமையை,

“நூல் அமை பிறப்பின் நீல உத்தி
கொய்ம்மயிர் எருத்தம் பிணர்ப்படப் பெருகி
நெய்ம்மிதி முனைஇய கொழுஞ் சோற்று ஆர்கை
நிரல் இயைந்து ஒன்றிய செலவின் செந்தினைக்”[70]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. இவ்வாறான பல பாடல்களில் உலோச்சனார் நெய்தல் திணைப் பாடல்களைப் பாடுவதில் சிறப்புற விளங்குகின்றார்.

### 1.4 திணையும் பொருளும்

தமிழரின் தனிச்சிறப்பான சிந்தனை முறையாகவும் தமிழ்மொழியின் அறிவுச் சிகரமாகவும் கருதத்தக்கது ஐந்திணைப் பாகுபாடு ஆகும். இதில் குறிப்பால் பொருள் தோற்றுவிக்கும் முறையாகத் தொல்காப்பியர் முன்வைக்கும் திணையியலின் பொருள் கொள்ளும் முறை அமைந்துள்ளது.

அதாவது, ஒவ்வொரு திணைக்கும் மூன்று விதப்பொருள் உண்டு. அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகும். ஐந்திணைகளின் இந்தப் பொருள் கொள்ளும் முறை குறியீட்டுப் பண்பை அடிப்படையாகக் கொண்டு கட்டமைக்கப்பட்டுள்ளது.

### 1.5 திணைப்பகுப்பு முறை

சங்க இலக்கியப் பாடல்கள் திணைக் கோட்பாட்டை வெளிப்படுத்துவன மட்டுமல்லாது அதனடிப்படையில் பகுக்கப்பட்டும் உள்ளன. இச்சங்க இலக்கியத்திலுள்ள ஒவ்வொரு நூலிலும் திணைத்துறை வகுக்கப்பட்டுள்ளன.

அகநானூறு அதன் வைப்புமுறை அடிப்படையில் நோக்கும் போது திணை வகுப்புச் செய்யப்பட்டே தொகுக்கப்பட்டுள்ளன. ஐங்குறுநூறும் குறிப்பிட்ட ஒரு திணைக்கு நூறுபாடல்களாக ஐந்நூறு பாடல்களைக் கொண்டுள்ளது. கலித்தொகையிலும் ஐந்திணைக்குரிய பாடல்கள் தொகுத்து அமைக்கப்பட்டுள்ளன.

குறிப்பிட்ட புலவர்கள் குறிப்பிட்ட திணையை எடுத்துக் கொண்டு பாடியமையை ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவற்றை நோக்குங்கால் தெளிவாகிறது. இவ்வாறாகப் பாடலுக்குத் திணை வகுத்தது பாடியோரா அல்லது தொகுத்தோரா என்பது தெளிவாகத் தெரியவில்லை எனினும் நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றிற்குத் திணைவகுக்கப்படாத தொகை நூல்களாகும்.

‘‘திணை வகுப்பு முதன் முதலில் ராஜம் பதிப்பிலேயே மேற்கொள்ளப்பட்டது என அதன் பதிப்பாளர் கூறுகிறார். நற்றிணைச் செய்யுட்களுக்குக் குறிஞ்சி, முல்லை முதலிய ஐந்திணைப் பாகுபாடு ஏட்டுப் பிரதிகளில் காணப் பெறவில்லை. அவை பதிப்பாசிரியரால் வாசித்துக் கொடுக்கப்பெற்றனவே என நற்றிணை முகவுரையிலும் **(1981)** பாடல்களின் தலைப்பில் இடம் பெற்றுள்ள திணைக் குறிப்புகள் பழமை யானவையல்ல நற்றிணைப் போல பதிப்பாசியர்களால் ஊகித்துக் கொடுக்கப்பெற்றனவே **(1987)** என்று குறுந்தொகை முகவுரையிலும்

கூறப்பட்டுள்ளது. ஆயின் நாராயணசாமி ஐயர் நற்றிணையை உரை வகுத்துப் பதிப்பித்தப் போது அதன் திணைப் பகுப்பிணைப் 1914ல் செய்துள்ளார். ஆயின் திணை வகுப்புத் தன்னால் செய்யப்பட்டதென்பதை அவர் கூறவில்லை. எனினும் திணைகள் அடைப்புக் குறியுட் கொடுக்கப்பட்டுள்ளதால் அவரால் வகுக்கப்பட்டதெனக் கொள்ளலாம்''[71] என்ற அம்மன் கிளி முருகதாசின் கருத்தாக்கம் சங்கத் தொகுதிகளுக்குத்திணை வகுப்பதிலிருந்த இடர்பாட்டினைத் தெளிவாக்குகிறது.

இதிலிருந்து பாடலுக்குப் புலவரால் திணைக்கூறப்படாத போது தொகுத்தோர் திணைக் கூறுவதற்கு இடர்ப்பட்டிருக்கிறார்கள் எனத் தெரிகிறது. மேலும் ஒரு பாடலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட திணை வகுத்திருப்பது இவ்விடர் பாட்டைப் புலப்படுத்துகிறது. குறுந்தொகைக்கு உ.வே.சாவும் நற்றிணைக்கு ஔவை சு.துரைசாமிப்பிள்ளையும், திணைகூறாமலேயே விடுத்திருக்கும் நிலையும் இங்கு குறிப்பிடத்தக்கது.

சங்க இலக்கியத்தை ஆய்வு செய்த தமிழண்ணல் நெய்தல் திணைப் பாடல்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், "நெய்தல் திணையில் குறிஞ்சித்திணையை விட பிறத்திணைப்பாடு பொருட்கலப்பு அடிக்கடி மிகவும் நிகழ்கிறது''[72] என்கிறார். மேலும் திணைகளின் வரலாற்றை ஆய்வு செய்த முனைவர் வெ.மு.ஷஜகான்கனி அவர்கள் நெய்தல் நில மக்களின் ஒழுக்கமான இரங்கல் உரிப்பொருளைப் பற்றிக் குறிப்படுகையில் தொல்காப்பியத்தில் நெய்தல் நில உரிப்பொருள் தெளிவாக விளக்கப்படவில்லை என்று கூறுவதோடு, "சங்க கால நெய்தல் திணைப்பாடல்களிலும் நெய்தலின் உரிப்பொருள் தெளிவுற விளக்கப்படவில்லை, குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய திணைகளுக்கு உரிய உரிப்பொருள்களும் விரவியே சங்ககால நெய்தல் திணைப்பாடல்கள் விளங்குகின்றன''[73] என்கிறார்.

மேற்க்கண்ட கருத்துக்கள் சங்க இலக்கிய நெய்தல் திணைப்பாடல்களில் இடம்பெற்றுள்ள திணைக்கலப்பை உறுதி செய்கின்றன. அதோடு நெய்தல் நில

ஒழுக்கமாகிய இரங்கல் உரிப்பொருள் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் இடம் பெறும் விதத்தை ஆய்வு செய்ய இடமளிக்கிறது. ஏன் எனில் தொல்காப்பியம்,

''முதல்கரு உரிப்பொருள் என்ற முன்றே
நுவலுங் காலைமுறைசிறந்தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை''[74]

என்று குறிப்பிடுகின்றது. சங்க அகப்பாடல்களை ஆராயும் இடத்து முதல் கரு உரி எனும் மூன்று பொருள்கள் அமைந்திருக்கும் அவற்றைப்பாடும் பொழுது அவை முறையே ஒன்றிலொன்று சிறந்தவை ஆகும். முதல்சிறந்தது, அதைவிடக் கருப்பொருள் சிறந்தது இரண்டையும் விட உரிப்பொருளே மிகச்சிறந்தது எனலாம். இச்சூத்திரத்திற்கு உரைஎழுதிய நச்சினார்கினியர் ''முதற்கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்து வரும்''[75] என்கிறார். இவர் கருத்துப்படி உரிப்பொருள் முதன்மைபெறுகிறது. மேலும், சோமசுந்தர பாரதியும், ''அகப் பாட்டுக்களில் உரிப்பொருளே தலையாயதென்பதும், அதற்குமுதலும் கருவும் சிறப்புதவுந் துணையாகச் சார்ந்து வருபொருள்களாம் என்பது வெளிப்படை''[76] என்ற நச்சினார்கினியரின் கருத்தையே வழிமொழிகிறார். பல அறிஞர்கள் உரிப்பொருளை முதன்மைப் படுத்தியுள்ளனர்.

முதற்பொருளையும், கருப்பொருளையும் காட்சிப்பொருளாகவும் உரிப்பொருளைக் கருத்துப் பொருளாகவும் கூறும் உ.வே.சா, ''இப்பொருளே (உரி) முதல், கரு என்னும் இரண்டைக் காட்டிலும் சிறந்தது; முதல், கரு என்னும் இரண்டும் உரிப்பொருளாகிய நாடக நிகழ்ச்சிக்கு நிலைக்களனாக உதவுகின்றன''[77] என உரிப்பொருளின் முதன்மையைக் கூறுகிறார்.

''உரிப்பொருளே உயிர்ப்பொருள், உரிப்பொருளை விளக்க வந்தனவே மற்றைய இரண்டும், அவை உடலுக்கு அணிகலன்களுமே திணை, துறை

குறித்தோர் முதற் பொருளுக்கும், கருப்பொருளுக்கும் தலைமை கொடுத்தனர். உரிப்பொருள் இல்லாப்பாட்டினைக் காட்டினவா! இல்லை அஃது ஒன்றே உரிப்பொருள்பாட்டின் உயிர்ப்பு என்பதைப் புலப்படுத்தும், எனவே உரிப்பொருளைத் தலைமையாகவும் பிற இரண்டை துணைமையாகவும் கொள்ளலே இலக்கிய நீதி''[78] என்று உரிப்பொருளின் சிறப்பை க.ப.அறவாணன் விளக்குகிறார்.

வ.சு.ப. மாணிக்கம், ''திணைமையாவது உரிப்பொருளைப் பற்றியது முதலும் கருவுமே அப்பொருட்த் துணைமையாம் அத்துணையே''[79] என்கிறார். இவரது கூற்றுப்படி, முதலும் கருவும் உரிப்பொருளுக்குச் சார்ந்து வரும் பொருள்கள் உரிப்பொருளே முதன்மையானப் பொருள் என்ற கருத்து தெளிவாகிறது. மேற்க்கண்டோரின் கருத்திலிருந்து இளம்பூரணர் வேறுபடுவதை அறியமுடிகிறது. இவர், ''யாதானும் ஒரு செய்யுட்கண் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் வரின் முதற்பொருளால் திணையாகும் என்பது உம், முதற்பொருள் ஒழிய ஏணை இரண்டும்வரின் கருப்பொருளால் திணையாகும் என்பதூஉம், உரிப்பொருள்தானே வரின் அதனால் திணையாகும் என்பதூஉம்ஆம்''[80] என்கிறார். இவரின் கருத்துப்படி,

1. முதற்பொருள் கருப்பொருளைவிடச் சிறந்தது
2. கருப்பொருள் உரிப்பொருளைவிடச் சிறந்தது என்பதாகும்.

தொல்காப்பிய அகத்திணையியலுக்கு ஆய்வுரை எழுதிய அருணாசலம் பிள்ளையும் இளம்பூரணரின் கருத்தையே வழிமொழிகிறார். மேற்கண்ட கூற்றுகளின் மூலம் தொல்காப்பிய உரையாசிரியர்களிடையே முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் இவற்றில் முதன்மையானது என்பதில் கருத்து முரண்பாடு இருந்தமையை அறியமுடிகிறது.

## 1.6 தொகுப்புரை

- தமிழின் மிகப் பழமையான இலக்கண நூலான தொல்காப்பியத்தில் அன்பின் ஐந்திணைகளை ஒருமித்த நிலையில் திணை வைப்புமுறைப் பின்பற்றப்படாமையையும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்று இந்த வரிசைமுறையில் தான் திணைகளைக் குறிப்பிட வேண்டும் என்ற நிலையை தொல்காப்பியர் வரையறுத்துக் கூறப்படவில்லை என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

- வீரசோழியம் திணைகளைக் குறிப்பிடும் போது முல்லைத்திணையை முதலில் கூறி நெய்தல் திணையை இறுதியாக வைத்து முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் எனத் திணை வைப்பு முறை செய்யப்பட்டுள்ளது.

- நம்பியகப்பொருள் குறிஞ்சியை முன்னிலைப்படுத்தி நெய்தலை இறுதியாக திணை வைப்புச் செய்துள்ளன. மாறனகப் பொருளும் இவ்வாறே செய்துள்ளன. தமிழ் இலக்கண நூல்களில் திணைவைப்புமுறை கடைபிடிக்கப்பட்ட நிலையினைஅறிந்து கொள்ள முடிகிறது.

- சங்க அக இலக்கியங்களில் கலித்தொகை, ஐங்குறுநூறு தவிர பிற நூல்களில் திணைவைப்புமுறை பின்பற்றப்படவில்லை எனலாம்.

- நற்றிணைப் பாடல்களுக்குத் திணைகள் பதிப்பித்தவர்களாலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. அதனால் மருதத்திணைப் பாடல்களில் மட்டும் ஒருமித்த திணை அமைப்பும் காணப்படுகின்றன. பிறத் திணைகளில் எவ்வித அமைப்பு முறையும் காணப்படவில்லை. ஆக நற்றிணையில் எவ்வித திணை வைப்பு முறையும் பின்பற்றப்படாமைத் தெளிவாகிறது.

- குறுந்தொகைப் பாடல்களுக்கும் திணையை நூலைப் பதிப்பித்தவர்களே கூறியுள்ளனர். எந்தவித திணைவைப்பு முறையும் இதில்

பின்பற்றப்படவில்லை. மேலும் **2008**ல் தமிழ்மண் அறக்கட்டளை வெளியிட்டுள்ள செவ்விலக்கியம் கருவூலம் **(6)** குறுந்தொகைப் பதிப்பில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற திணைவைப்புமுறைச் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

- அகநானூற்றில் பாலைத்திணையில் தொடங்கி நெய்தல் திணையில் முடியும் நிலையிலும் ஒவ்வொரு திணைப்பாடலுக்கு முன்னரும் ஒரு பாலைத்திணைப் பாடலை அமைத்து பாலைகுறிஞ்சி, பாலைமுல்லை, பாலைமருதம், பாலைநெய்தல் என அமைத்து பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் திணைவைப்பு முறைச் செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

- ஐங்குறுநூற்றில் திணைவைப்பு முறையானது மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற முறையில் திணைவைப்பு முறைச் செய்யப்பட்டுள்ளது. இத்திணை வைப்பு முறைக்குக் காரணம் தொகுத்தவர், தொகுப்பித்தவர்களின் அரசியல் சார்பேக்காரணம் என்பதைத் தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

- கலித்தொகையில் திணைவைப்பு முறையானது பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்ற முறையில் திணைவைப்பு முறைச் செய்யப்பட்டுள்ளது.

- அகநானூறு, கலித்தொகை இரண்டில் மட்டும் நெய்தல் திணை இறுதியில் வைத்துள்ளனர்.

- நெய்தல் திணையை தமிழ் இலக்கண இலக்கியங்கள் முன்னிலைப் படுத்தாமல் இறுதியாக வைத்துள்ளன.

- ❖ நெய்தல் திணைப் பாடல்களின் அமைப்பு என்பதில் மொத்தமுள்ள அகப்பாடல்களில் நெய்தல் திணைப் பாடல்கள் பெறுமிடம் பற்றியதான செய்திகள் வெளிப்படுத்தப்பெற்றுள்ளன.

- ❖ ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ள நெய்தல் திணைப்பாடல்களின் எண்ணிக்கை, பாடியப் புலவர்களின் எண்ணிக்கை, பெருந்திணை என்ற நிலையிலான பாகுபாடுகளின் எண்ணிக்கை எனப் பல்வேறு நிலைகளில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

- ❖ நெய்தலுக்குப் புலவர்களின் பங்களிப்பு என்பதில் நெய்தல் திணைப் பாடல்களை இயற்றிய புலவர்கள் பற்றிய செய்திகள் வெளிப்படுத்தப்பெற்றுள்ளன.

- ❖ உரிப்பொருள் பாடலின் உயிர்பொருளாகும். சங்க இலக்கிய நெய்தல்திணைப் பாடல்களில் உள்ள இரங்கல் உரிப்பொருளை அம்மூவனாரின் பாடல் சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றன.

- ❖ முதல் பொருள், கருப்பொருள், உரிப்பொருள் இம்மூன்றும் அடங்கியது திணை இலக்கியங்களாகும்.

## சான்றெண் விளக்கம்

1. பாவலரேறு, ச.பாலசுந்தரம், (உ.ஆ.), தொல்.பொருள்.அகத். சூ.1
2. மேலது, சூ.5
3. மேலது, சூ.6.
4. மேலது, சூ.7.
5. மேலது, சூ.9.
6. மேலது, சூ.10.
7. மேலது, சூ.11.
8. மேலது, சூ.14.
9. மேலது, சூ.58–3.
10. மேலது, சூ.63.
11. மேலது, சூ.66.
12. மேலது, சூ.71.
13. மேலது, சூ.75.
14. மேலது, சூ.79.
15. மேலது, சூ.82.
16. இளம்பூரணர் (உ.ஆ.), தொல். பொருள். அகத். ப.2
17. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல். பொருள். அகத். ப.1
18. இறையனார் அகப்பொருள், சூ.1, ப.20
19. வீரசோழியம், பொருளதிகாரம், பொருட்படலம், ப.66
20. மேலது, பொருளதிகாரம், பொருட்படலம், ப.67
21. நம்பியகப்பொருள் விளக்கம், அகத்திணையியல், நூ.6
22. மாறனகப்பொருள், நூ.7
23. ராஜன் எஸ்., நற். முன்னுரை, ப.4
24. வேங்கடராமன் (ப.ஆ), நற்றிணை நூல் ஆராய்ச்சிக்குறிப்பு, ப.18
25. சாம்பசிவசர்மா, குறுந்தொகைச் சொற்பொழிவு ப.8
26. ராஜன் எஸ். குறுந்தொகை, பதிப்புமுன்னுரை, ப.4

27. சண்முகம் பிள்ளை மு.(ப.ஆ) , குறுந்தொகை, முகவுரை ப.16

28. கோவிந்தன் க. (மொ.ஆ), தமிழர் வரலாறு, ப.244

29. சாமி.சிதம்பரனார், அ. குறுந்தொகைப் பெருஞ் செல்வம், முன்னுரை, ப.6

30. வேங்கடாசலம் ஆர்,அகநாநூற்றுச் சொற்பொழிவு முன்னுரை, ப.6

31. சுந்தர சண்முகனார், தமிழ் நூல் தொகுப்புக் களஞ்சியம், ப.240

32. சாமிநாதையர், உ.வே.ஐங்குறுநூறு, முன்னுரை, ப.7

33. எ.மே. இராணி.ந. சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.136

34. புலியூர் கேசிகன் (ப.ஆ) ஐங். முன்னுரை ப.7

35. சுந்தர சண்முகனார், தமிழ்நூல், தொகுப்புக் களஞ்சியம், ப.289

36. மாதையன் பெ. தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்களில் காலமும் கருத்தும், பக்.116–117

37. இளங்குமரனார், செவ்விலக்கியக்கருவூலம், கலித். முன்னுரை ப.5

38. அனந்தராமையர் இ.வை.(ப.ஆ) கலி. முன்னுரை ப.7

39. சோமசுந்தரனார், பெ.வே. (உ.ஆ) கலி. முன்னுரை, ப.7

40. ஆறுமுகம் .நா கலித்தொகை ஓர் அகழ்வாய்வு, ப.2

41. மாணிக்கம் வ.சுப. சொல்லியமுறை சிந்தனைக் களங்கள், ப.41,

42. மேலது, ப.48

43. சண்முகம் பிள்ளை, மு சங்கத்தமிழர் வாழ்வியல் பக்.41–42

44. துரைசாமிப் பிள்ளை, ஔவை சு. ஐங். தொகுதி–1 , ப.287

45. அம்மூவனார், ஐங். பா.171

46. குறுங்கோழியூர்கிழார், புறம்.பா.17 :9–14

47. அம்மூவனார், அகம்.பா. 10:10–14

48. குடவாயிற் கீரத்தனார், மேலது, பா.60–7

49. பரணர், குறுந். பா.128–2

50. காக்கை பாடினியார், மேலது, பா.210–2

51. நக்கீரர், அகம்.பா.290:13–14

52. அம்மூவனார், நற். பா.35–1

53. மேலது, பா.393 :9–10

54. மேலது, ஐங். பா.185:1–2

55. மேலது, குறுந். பா.163–1

56. மேலது, அகம்.பா.10:11–13

57. மேலது, ஐங். பா.148

58. மேலது, ஐங். பா.149

59. மேலது, ஐங். பா.152

60. மேலது, அகம். பா.140:1–10

61. மேலது, அகம். பா.390

62. மேலது, அகம். பா.280

63. நல்லந்துவனார் கலித். பா.141:8–10

64. மேலது கலித். பா. 131 :15–20

65. உலோச்சனார் நற். பா. 313: 1–2

66. மேலது, நற். பா. 363: 1–2

67. மேலது, நற். பா. 31: 6–8

68. மேலது, நற். பா. 372 :11–13

69. மேலது, அகம்.பா. 200:1–4

70. மேலது, அகம்.பா.400:5–8

71. அம்மன்கிளி முருகதாஸ், சங்ககவிதையாக்க மரபும் மாற்றமும், பக்.12–13

72. தமிழண்ணல் சங்கமரபு ப.206

73. முனைவர் வெ.மு.ஹஜகான்கணி, திணைவரலாறு, ப.134

74. இளம்பூரணர், (உ.ஆ.) தொல்.பொருள், அகத். சூ.3

75. நச்சினார்க்கினியர் (உ.ஆ) தொல்.பொருள்.அகத்., ப.52

76. மேலது, ப.63

77. டாக்டர் உ.வே.சா குறுந்தொகை மூலமும் உரையும், ப.14

78. க.ப.அறவாணன், அற்றைநாள் காதலும் வீரமும், ப.99

79. வ.சுப . மாணிக்கம், தமிழ்க்காதல், ப.35,

80. இளம்பூரணர் , (உ.ஆ) தொல்,பொருள்.அகத், ப.51

# முதற்பொருளமைவு

## 2.0 முன்னுரை

சங்க இலக்கியங்கள் முதல், கரு, உரி என்ற மூன்றினால் கட்டப்பட்ட திணை இலக்கியங்களாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து நிலத்தில் வசிக்கும் மக்களின் காதல் ஒழுக்கத்தைக் குறிப்பிடுவதற்குத் தொல்காப்பியர் பயன்படுத்திய கவிதையியல் கோட்பாடே முதல், கரு, உரி எனும் முப்பொருளாகும். முதற்பொருள் என்பது நிலமும் பொழுதுமாகும். நிலம், பொழுது என்பவைக்குள் மனிதன் அல்லது மனித உணர்வுகள் வசப்பட்டுக்கிடப்பதைச் சங்க இலக்கியங்கள் உறுதிபடுத்துகின்றன. தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ள நெய்தல் நிலமுதற்பொருளைச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் பொருந்தும் மாற்றையும் இம்முதற்பொருள் நெய்தல் நில ஒழுக்கமான இரங்கல் உரிப்பொருளுக்கு உயிரோட்டமாக அமைவதையும் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.1 இயற்கையும் மக்களும்

மனிதன் வேறு இயற்கை வேறு என்று சொல்லி விட முடியாது, இயற்கையிலிருந்தே மனிதன் ஒவ்வொன்றையும் கற்றுக் கொள்கிறான். அவனது தேவைகளின் பிறப்பிடமாக நிலமும் பொழுதும் அமைந்திருப்பதை உணர்ந்தே இருக்கிறான். அப்புரிதலே பின்னாளில் இலக்கியங்களில் மனவுணர்வின் வெளிப்பாட்டிற்கான வாயில்களாக அமைவதை சங்கக்கவிதைகள் தெளிவுபடுத்துகின்றன. நேரடியாகக் கூறமுடியாத அகஉணர்வுகளை இம்முதற்பொருள்மூலம் வெளிப்படுத்தும் உத்திமுறையை அல்லது கோட்பாட்டைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. சங்கப் பாடல்களின் புரிதலுக்கு நிலம் மற்றும் பொழுதின் பண்புகள் உதவுகின்றன.

“திணைப் பாடல்கள் புலவர்களின் இயற்கை மீதான நுண்ணிய அறிவையும் அவர்களது மானுட வாழ்க்கையின் உண்மை அனுபவத்தையும், உளவியலைச் சரியாகப்புரிந்து கொண்ட தனித்திறனையும் காட்டுவன. சுருங்க உரைப்பதெனின் கூர்ந்த நோக்கு தெளிந்த கருத்துப் புலப்பாடு ஆகியன திணைச் செய்யுளின் உயிரெனலாம்”[1] என்பார் தமிழண்ணல். சங்க அகப்பாடல்களில் மக்களின் காதல் உணர்வினையும் முதல், கரு, உரி என்ற முப்பொருள் கூறுகள் அமைந்து பாடலைச் சிறப்புடையதாக ஒவ்வொரு நிலத்திற்குரியதாக ஆக்குகின்றன. இயற்கையின் சூழலுக்கு ஏற்ப வாழ்க்கைக் கூறுகள் மட்டுமின்றி உணர்வுகளும் மாறுபாடு அடையக்கூடியன என்பதை இம் முப்பொருள்கள் விளக்குகின்றன.

“மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இயைபுறச் செய்தது பண்டைத் தமிழிலக்கிய மரவு அதோடு மட்டுமின்றி காதல் உணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட்ட நிலப்பகுதிகளுக்கும் பருவங்களுக்கும் நேரங்களுக்கும் வகுத்தனர். இம்மரவு பண்டைத்தமிழிலக்கியத்தில் காணப்படுகிறது. மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சி, காடும் காடுசார்ந்த இடமுமான முல்லை, வயலும் வயல்சார்ந்த இடமுமான மருதம், கடலும் கடல்சார்ந்த இடமுமான நெய்தல், வளமற்று வறண்ட இடமுமான பாலை என்பன அவ்வைந்துமாம். அவ்வகை நிலங்களும் உரியனவாய்த் தனித்தனியே பயிரினங்களும் ஏனைஉயிரினங்களும் பிறவும் உண்டு. அவையாவும் அவ்வத்திணைக்குரிய கருப்பொருள்களில் அடங்கும். ஒவ்வொரு நாளிலும் ஒவ்வொரு குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட நிலப்பகுதி மிக்க எழில் படைத்து விளங்குவதோடு மக்களின் வாழ்வையும் பிணிக்க வல்லதாய் உள்ளது. என்னும் உண்மையைப் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் தெரிந்து கொண்டனர். இயற்கை வழங்கும் காட்சிகள் குறிப்பிட்ட சில பருவங்களிலும், இடங்களிலும் எல்லையற்ற சிறப்புடையனவாய் மனிதனுடைய நாடி நரம்புகளையும் இயல்செயல்களையும் கட்டுப்படுத்துகின்றன என்று அவர்கள் கண்டுணர்ந்துள்ளனர். இவ்வகையில் பற்பல சூழ்நிலைகளோடு தொடர்புபடுத்தப்பெற்றுள்ளன”[2] என்பார் மு.வ. இந்நிலையினை மனதிற்கொண்டே சங்கப்புலவர்கள் இலக்கியம் படைத்துள்ளனர்.

**2.2 நிலம்**

இவ்வுலக உயிர்களின் தோற்றத்திற்கும் இயங்குவதற்கும் ஏற்றதாக அமைந்த நிலத்தினையும் பொழுதினையும் முதற்பொருள் என்று அழைத்துள்ளனர், இதனைத் தொல்காப்பியம்,

''முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி
இயல்பென மொழிப இயல் புணர்ந்தோரே''[3]

என்கிறது. நிலம், பொழுது ஆகிய இரண்டும் ஒரு திணையின் முதற்பொருளினை விளக்கிக்காட்டும் கூறுகளாகும். அக இலக்கியங்களை நோக்கும்போது அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளை நிர்ணயிக்கக் கூடிய காரணியாக இயற்கை சார்ந்த நிலம் அமைந்துள்ளது.

முதற்பொருளாகிய நிலம், பொழுது ஆகியவற்றின் தோற்றம் குறித்து, ''நிலம், நீர், தீ, வளி, விசும்பொடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம் என்பது தொல்காப்பியர் கருத்து. இவ்வைந்தினுள்ளும் முதன்மையாவது நிலம் ஆதலின் இதனை முதற்பொருள் என்று கூறுவது பண்டைய மரபு''[4] என்று விளங்கிக் கொள்ளலாம்.

இயற்கைச் சூழலையும் மண்ணின் தன்மையையும் நோக்கி நிலத்திணைக்குறிப்பிடும் தொல்காப்பியர்,

''மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லைகுறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையான் சொல்லவும் படுமே''[5]

காடும் காடுசார்ந்த இடமும் முல்லை, மலையும் மலைசார்ந்த இடமும் மருதம், மணலும் மணல் சார்ந்த இடமும் நெய்தல் என்று நான்காக வகைப்படுத்துகின்றார்.

நிலம் மனிதன் தோன்றுவதற்கு முன்பே உருவானதாகும். உலகத்து மக்கள் உருவாகி நிலைபெற ஆதாரமாக அடிப்படையாக இருப்பது இவ்வியற்கை மக்களின் வாழ்க்கையில் கலந்துள்ளதை, ''இயற்கைப் பின்னலுக்குள் தான் மனிதன் தோன்றினான். இயற்கை முன்னிருந்து மனிதன் பின் வந்தான். மூன்றாவதாக வந்தது தான் இலக்கியம்''[6] என்பார். தனிநாயக அடிகள்.

### 2.2.1 நிலத்தின் சிறப்பு

ஒரு நாட்டின் அனைத்து வளங்களையும் நிலம் தான் தீர்மானிக்கிறது. ''ஒரு நாட்டு நிலவமைப்பும் இயற்கைக் கூறுகளும் அந்நாட்டு வரலாறு, நாகரிகம், பண்பாடு போன்றவற்றை உருவாக்கும் அடித்தளமாக இருக்கின்றன. எனவே ஒரு நாட்டு வரலாற்றை அஃதாவது அந்நாடு வளர்ந்து வந்த முறையை நாம் நன்கு தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் முதற்கண் அந்நாட்டு நிலவமைப்புகளைத் தெளிவாக ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும்''[7] என்பதிலிருந்து நிலத்தின் இன்றியமையாமையை உணர்ந்து கொள்ளலாம். எனவே நிலம் என்பது வாழ்க்கையின் பிரதிபலிப்பாக இலக்கியங்களில் முக்கியத்துவம் பெறுகிறது.

நிலமும் மொழியும் பிரிக்க வியலாத பிணைப்பைக் கொண்டவை காரணம், ''ஒரு மொழியின் இறுதி இலக்கு மனிதனை நிலத்துடன் பிணைப்பதே மொழியின் முதல் வினை வெளியே (புறத்தை–இயற்கையை) மனிதவயமாக்குவதே (அகமாக்குதல்– மனம்); அதாவது புறவெளியை அகவெளியாக்குவதன் மூலம் மனத்தையும் அதன்மூலம் மனிதனையும் கட்டமைத்தல்''[8] என்னும் ஜமாலன் கருத்து நிலத்தை முதன்மைப்படுத்துவதாக உள்ளன.

### 2.2.2 நெய்தல் நிலம்

இலக்கணமரபில் முதற்பொருளாகக் கருதப்படுகிற நிலமே மக்களின் வாழ்க்கை நிகழ்வுகள் தொடர்வதற்கும், பயணிப்பதற்கும் அடிப்படையாக அமைந்துள்ளது. இதன்காரணமாக இம்முதற்பொருளான நிலமும் பொழுதும் மிகவும் பொருத்தமுடையதாக உள்ளது. நெய்தல் நிலம் என்பது கடலும் கடல் சார்ந்த பகுதியுமாகும். இதனை,

''வருணன் மேய பெருமண லுலகமும்''[9]

எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இந்நூற்பாவிற்கு விளக்கம் தரும் நச்சினார்க்கினியர்.

''கருங்கடற்கடவுள் காதலித்த நெடுங்கோட்டெக்கர்''[10]

அதாவது, வருணனைத் தங்கள் தெய்வமாக வழிபடும் மக்கள் வாழ்கின்ற கடல் கொழித்த மணல்மேடுகள் மல்கிய கடற்கரைப்பகுதி எனப் பொருளுரைக்கிறார். மேலும், நெய்தல் நில தெய்வத்தைக் குறிப்பிடுகையில்,

''சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழி மாந்தியும்
புன்றலை இரும் பரதவர்''[11]

நெய்தல் நிலத்தின் நுளையர்க்கு வலை வளர்ந்தப் பின் அம்மகளீர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக்கடன் கொடுத்தலின் ஆண்டு வருணன் வெளிப்படும் என்கிறார். வருணனை வழிபடும் மக்கள் வாழ்கின்ற கடற்கரைப் பகுதியே நெய்தல் நிலம் என்பது தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியரின் கருத்தாகும்.

சங்கப் புலவர்கள் நெய்தல் நிலம் என்பதற்கான முதற்பொருளினைக் குறிக்க கடல்நீர், கடலில் எழக்கூடிய அலைகள், கடற்கரைப் பகுதிகளில் காணப்படக்கூடிய மணல், எக்கர் பகுதி, கழிமுகப்பகுதி, தலைவனின் பெயர் சார்ந்த சொல்லாடல்கள் எனப் பல நிலைகளில் பதிவு செய்துள்ளதை சங்கப்பாடல்களில் அறியமுடிகிறது.

### 2.2.3 நெய்தல் நிலத்தின் பெயர்க்காரணம்

முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற இப்பகுதிகள் அவ்வந் நிலங்களில் மிகுதியாய்க் காணப்படும் பூக்களால் பெயர் பெற்றன என்றும் புணர்தல், இருத்தல், பிரிதல், ஊடல், இரங்கல் என்ற ஒழுக்கங்களால் பெயர் பெற்றன என்றும் கூறுகின்றனர்.

மேலும் தொல். பொருள். அகம்.நூ.5 இந்நூற்பாவிற்கு உரைஎழுதிய இளம்பூரணர், ‘‘முல்லை, குறிஞ்சி யென்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறியென்று கொள்ளப்படும். என்னை காரணம் எனின், ‘நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை யரும் பவி முலரி தூஉய்’ (முல்லைப்பாட்டு) என்றமையால் காடுறை யுலகிற்கு முல்லைப்பூச்சிறந்த தாகலானும் ‘கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே (குறுந்.3) என்ற வழிமைவரை யுலகிற்குக் குறிஞ்சிப் பூச்சிறந்த தாகலானும். ‘ஆரலருந்தியசிறு சிரல் மருதின், தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூரன் ’ (அகம்) என்ற வழித் தீம் புனலுலகிற்கு மருது சிறந்தமையானும் , ‘பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல், இனமீனிருங்கழியோத மல்குதொறும், கயமூழ்கி மகளிர் கண்ணின் மானும், (குறுந். 9) என்ற வழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டாரென்று கொள்ளப்படும்’’[12] என நிலத்தின்கண் சிறந்து விளங்கும் பூக்களின் காரணமாகவே அந்நிலத்திற்கு அப்பெயர் வழங்கலாயிற்று என்று சங்கப்பாடல்களை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

தொல்காப்பிய மற்றொறு உரையாசிரியரான நச்சினார்க்கினியர், ‘‘இனி இவ்வாறின்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன. இவ்வொழுக்கங்களெனில், அவ்வந்நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றாற் பெயர் கூறலும் உரியவெனக் கடாயினார்க்கு விடை யின்மை உணர்க’’[13] என்கிறார். நிலம் பூக்களால் பெயர் பெற்றன என்னும் இளம்பூரணரின் கருத்தை மறுத்து மக்களின் ஒழுக்கங்களால் தான் அந்நிலம் பெயர்பெற்றன என்கிறார். மேலும் குறிஞ்சிக்குரியதாகப் புலனெறி வழக்கம் செய்யப்பட்ட ஒழுக்கம், புணர்தல் என்பது. இப்புணர்ச்சியொழுக்கத்திற்கே குறிஞ்சி என்பது ஒரு பெயர். இங்ஙனமே, இருத்தலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் முல்லை. ஊடலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் மருதம், பிரிதலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் பாலை, இரங்கலாகிய ஒழுக்கத்திற்கு மறுபெயர் நெய்தல். இவ்வாறு அவ்வவ் ஒழுக்கம் நிகழ்ந்த நிலம் அவ்வப்பெயரினைப் பெற்றது என்பது நச்சினார்க்கினியரின் கருத்தாகும்.

இவ்விரண்டு உரையாசிரியர்களிடையேயும் கருத்து முரண்பாடு உள்ளதை அறியமுடிகிறது. மேலும் ‘‘ஐந்து நிலங்களும் குறிஞ்சி முதலாகப் பெயர்பெற்றதன் காரணமும் நாம் ஆராய்ந்து கொள்ளற்பாலதாம். இப்பெயர்கள் மரம் அல்லது பூ விசேடங்கட்கு உரியன என்பதும் , முல்லை முதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப் பற்றி அந்நிலங்கட்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதும் எளிதில் புலப்படும். ‘கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு’ (மதுரைக்காஞ்சி), ‘மருதஞ் சான்ற மருதத் தண்பனை’ ( சிறுபாண்– 186), ‘முல்லை சான்ற முல்லையம் புறவு’ (சிறுபாண்.169), ‘பாலை சான்ற சுரம்’ (சிறுபாண்–314), எனப் பூ அல்லது அதன் முதற்பொருளின் சிறப்புப் பற்றி அந்நிலங்கள் கூறப்படுதல் நோக்குக’’[14] என்னும் மு.இராகவையங்காரின் கருத்து நிலத்தை முதன்மைப்படுத்துவதாக உள்ளது.

‘‘குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் இத்திணைக்கு எய்திய பெயரே’’[15]

குறிஞ்சியும் பாலையும் மருதமும் நெய்தலும் என்னும் பெயர்கள் அவ்வந் நிலத்துக்குச் சிறந்தனவாதலான் அவற்றாற்பெற்ற பெயர் என நம்பியகப் பொருளின் கருத்தும் இவ்விடத்தில் குறிப்பிடத்தக்கதாகும்.

நமது நாட்டில் பூவுக்கும், மாலைக்கும் மிகுந்த சிறப்பு அளிக்கப்படுகிறது. மன்னர்களும், செல்வர்களும் மலர் மாலையும் கண்ணியும் அணிந்திருந்தமையும் மாலை சூட்டிப் பெருமைப்படுத்துதல் நம்மில் பெருவழக்காக இருப்பதையும் தெய்வத்தை வழிபடுங்காலையும் மாலை சூட்டிப் பூக்களைவைத்து வழிபடுதலும் நம் மரபாகவும் உள்ளன.

“மலர்களில் கொன்றை, ஆத்தி, கொக்குமந்தாரை, தாமரை இவை சிவமூர்த்திக்கு உகந்தன. விநாயகருக்கு வெட்சி, ஆறுமுகத்திற்குக் கடம்பு, குருந்து, தாமரை, அலரி இவை விஷ்ணுவிற்காம். பார்வதியார்க்கு நீலமலர், சூரியனுக்குத் தாமரை, திருமகட்குச் செந்தாமரை. நெய்தல் சரஸ்வதிக்கு வெண்டாமரை, துஷ்ட தேவதைகளுக்குச் செம்மலர்களுமாம். மலர்களுள் அரவிந்தம், மாம்பூ, அசோக மலர், முல்லை, நீலம் இவை மன்மதனுக்குரிய பாணங்களாகும்’’[16] என்று கூறுகிறது அபிதான சிந்தாமணி. மேலும், பழந்தமிழ் மன்னர்களில் சேரர்க்கு பனம்பூவும், பாண்டியர்க்கு வேம்பும், சோழர்க்கு ஆத்தியும் மாலைகளாக இருந்தமையை,

“இரும் பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே’’[17]

என புறநானூற்றுப் பாடல் அடையாளப்படுத்துகின்றது.

“தொல்காப்பியர் காலத்திற்குப் பன்னூற்றாண்டு கட்கு முற்படத் தமிழ் மக்கள் மலை நாட்டிற்குக் குறிஞ்சி நிலம் எனப் பெயரிட்டார்கள். காந்தள், வேங்கை, ஆரம், அகில் என்ற இவற்றில் ஒன்றின் பெயரால் அதனைக் கூறியிருத்தல் கூடாதோ? குறிஞ்சிப்பூவே சிறப்புப்பூவாதலால் குறிஞ்சியென

மலையையும் மலைசார்ந்த இடத்தையும் குறித்தார்கள். அவ்வாறே பிற நிலங்கட்கும் முல்லை, பாலை, மருதம், நெய்தல் எனப் பெயர் வைத்ததற்கும் சிறந்த காரணங்கள் உள்ளன''[18] எனத் தனிநாயக அடிகள் கூறுவது குறிப்பிடத்தக்கன. ஐவகை நிலங்களுள், ''கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப் பெறும். இந்நிலப் பகுதியிலே நெய்தல் மலர் மிகுந்திருப்பது கொண்டு இப்பெயர் வந்ததென்பர்''[19] என்னும் கருத்தும் குறிப்பிடத்தக்கது.

சங்க அகப்பாடல்களில் மக்களின் வாழ்க்கை நிகழ்வுகளைப் பதிவுசெய்த புலவர்கள் அவற்றினை இயற்கைப் பின்னணியோடு புனைந்துள்ளமை ஒவ்வொரு நிலமக்களையும் தனித்துவப்படுத்தும் போக்கில் அமைந்துள்ளன. ''திணைப்புலவர்கள் தாம் பாடும் பாடல் இன்ன திணைக்குரிய தெனக் காட்டுவது போல அத்திணைக்குரிய மலரின் பெயரை ஏதோ ஒரு வகையில் அப்பாடலுக்குள் அறிமுகப்படுத்தியுள்ளனர். அவ்வாறு ஒரு மலரின் பெயரைப்பாடலுக்குள் அறிமுகப்படுத்தும் மரபு குறிஞ்சியிலும், மருதத்திலும் பாலையிலும் சிறிதளவு கடைப்பிடிக்கப்பெற்றுள்ளது. ஆனால் முல்லையிலும் நெய்தலிலும் இவ்வழக்கம் மேலோங்கியுள்ளது''[20] என்கிறார் தமிழண்ணல். பல்வேறு மலர்கள் ஒரு நிலத்தில் இருந்தாலும் இதில் மிகுதியாகவும் சிறப்பாகவும் இடம் பெற்றுள்ள பூவின் பெயராலேயே அந்நிலத்தின் பெயர் அடையாளப்படுத்தப்பட்டுள்ளதை மேற்கண்ட தரவுகள் தெளிவுபடுத்துகின்றன. நெய்தல் நிலத்தில் தாழை, புன்னை, ஞாழல், செருந்தி, அடும்பு போன்ற எண்ணற்ற பூக்கள் உள்ளன எனினும் மிகுதியாக இந்நிலத்தில் நெய்தல் பூவே காணப்படுகிறது. நெய்தற்பூவின் சிறப்பினாலேயே அந்நிலம் நெய்தல் எனப்பெயர் பெற்றது என்பது தெளிவாகிறது.

**2.2.4 நெய்தல் பெயர்**

சங்க இலக்கியத்தைப் பொருத்தவரை நெய்தல் என்பது அன்பின் ஐந்திணைகளுள் ஒன்றாகும். பொதுவாக நிலத்தினைச் சுட்டும் தன்மையில்

கடலும் கடல்சார்ந்த பகுதியினைக் குறிக்கும் வகையில் உள்ளன. இதுஒரு தாவரத்தின் பெயராகும். இந்நிலத்திற்கு இப்பெயரினை இடுவதற்குக் காரணம் கடற்கரைக் கழிமுகப்பகுதிகளில் அதிகமாக வளரும் தகவமைப்பைப் பெற்றுள்ளமையே ஆகும். இதன் மலர் நீலமணி போன்ற நிறமுடையதாகவும், நீரின் அளவிற்கு ஏற்பத் தண்டு வளரும் தன்மை கொண்டதாகவும் காணப்படுவதாகச் சங்கப் பாக்களில் காட்டப்பட்டுள்ளன. எட்டுத் தொகை அக இலக்கியங்களில் உள்ள நெய்தல் திணைப்பாடல்களைப் பொருத்தவரை நெய்தல் என்ற சொல் (நற். 17,23, 27, 78,96,138,183,195,239,275,283,287,349,372,382) ஆகிய 16 பாடல்களிலும், (குறுந்: 9,114,227,296,336,397,401) ஆகிய 7 பாடல்களிலும், (ஐங் : 101,109,135,151,155,170,173, 181,182,183,184,185,187,188,189,190) ஆகிய 17 இடங்களிலும் (அகம். 10,70,10,120,130, 150,160,170,230,240,290,350,360,370,400) ஆகிய 15 இடங்களிலும் (கலி. 131,142,143,145) ஆகிய பாடல்களிலும் என 58 பாடல்களில் நெய்தல் என்னும் தாவரத்தின் பெயரைக் குறிக்கும் வகையில் இடம் பெற்றுள்ளன.

### 2.2.5 நெய்தல் நிலத்திணைக் குறித்தல்

நெய்தல் மலரின் பெயர் கடலும் கடல் சார்ந்த பகுதியைக் குறிப்பதற்காகப் பொன்னாகன் என்னும் புலவர் தலைவனுக்குக் குறியிடம் காட்டும் பொருட்டு,

“நெய்தற் பரப்பிற் பாவை கிடப்பி

நின்குறி வந்தனெ னியறேர்க் கொண்க’’[21]

என்று நெய்தற் பரப்பினைக் காட்சிப்படுத்துகின்றார். மேலும்,

“நெய்தலிருங்கழி நெய்தல் நீக்கி

மீனுண் குருகினங் கானலல்கும்’’[22]

என்னும் அம்மூவனாரின் பாடலடிகள் நெய்தல் நிலமான கழிமுகப் பகுதியில் பூத்த நெய்தல் என்ற நிலத்தினையும் நெய்தல் கொடியில் பூத்த மலரினையும் குறிப்பதாக உள்ளன.

### 2.2.6 நெய்தல் நிலம் அமைந்த வகை

நெடுங்கடலில் வெண்மையான நுரைகள் பொங்க சிதறும் அலைகள் மோதிக் குவிந்த மணல் மேடுகளும் நிரைந்த கரையே நெய்தல் நிலப்பகுதியாகும். கடற்கரைப்பகுதி மிக மென்மை வாய்ந்த நிலமாகவே கொள்ளப்படுகிறது. குறிஞ்சியும் பாலையும் வன்னிலமாகவும் நெய்தலும் மருதமும் மென்னிலமாகவும் கருதப்பட்டுள்ளன. இளமணல் எக்கர் (அகம். 250:4) நுண்மணல் அடைகரை (ஐங். 115:2), பூமணல் அடைகரை (நற். 11:6) , மெல்லம்புலம்பு (ஐங். 120:4), எனக் கடற்கரையின் மென்மைத்தன்மை கூறப்படுகிறது. மேலும் மணல்நிறைந்தப் பகுதியினை வெண்மணல், (குறு. 320:3), அடைகரை (நற். 11:6), எக்கர் (நற். 15:1), புலம்பு, (ஐங்.120:4), பரப்பு, (குறுந்.114:1), சேர்ப்பு (நற்.354:7) எனக் குறிப்பிடப்படுகிறது.

வெண்மணல் என்பதோடு அல்லாமல் கடலின் ஆழம், உப்புநீர், அலைகள் எழுவது, மழை தருவது என்பன பற்றி இவற்றின் பண்பு நலன்களைக் கொண்டு பலவாறான பெயர்களால் சுட்டி அழைத்துள்ளமையைக் காணமுடிகிறது. அழுவம் (அகம். 210), ஆழி (அகம்.8) பௌவம் ( ஐங். 121), பரவை (நற்.378), புணரி. (நற்.335, திரை (குறுந்.163), தெண்கடல் (நற்.49)உரவுக்கடல் (நற் .63), பணிகடல் (நற்.91) , பெருங்கடல் (குறுந்.320), மலிகடல் (நற்.154), நெடுங்கடல்( நற்.175), குணகடல்(நற். 215), நரிகடல் (நற்.219) , திரைச்சுரம் (நற். 111) ,மாநீர்(நற்.3,1), வளைநீர் (நற். 54), முந்நீர் (நற். 283), இலங்கு நீர் (குறுந். 318) , இருநீர் (குறு. 334), உரவுநீர் (நற். 35), புலவுநீர் (நற். 94), துறைநீர் (நற்.58), மலிநீர் (குறு. 324) தீம்நீர் (குறு. 5) என்றும் கடற்கரைப் பகுதியில் காணப்படக்கூடிய மணலின் தன்மையைப் புலவர்கள் பூமணல் (நற். 11), வெண் மணல் (குறு. 123), நிலவு மணல் (நற். 31), வார்மணல் (நற்.35), புலவு மணல் (நற். 239) , குலவு மணல் (நற். 207), தூமணல் (குறு. 51), திணி மணல் (குறுந். 175), விரவு மணல் ( குறு.316), மோட்டு மணல்(அகம். 10), விழுமணல் (அகம்.190) கானல் (ஐங். 136) என்றும் குறிக்கப் பெற்றுள்ளன. மேலும்,

‘‘அன்பிலன் மன்ற பெரிதே
மென்புலக் கொண்கன் வாரா தோனே’’[23]

“அன்பில கடிய கழறி

மென்புலக் கொண்கனைத் தாரா தோயே’’[24]

என வரும் பாடலடிகள் மென்புலம் என்பது நெய்தல் நிலத்தினைச் சுட்டும் வகையில் பாடப்பட்டுள்ளது.

“மெல்லம் புலம்பின் பிரிந்தெனப்

பல்லிதழுண்கண் பாடொல் லாவே’’[25]

என்ற பாடலடிகள் தலைவன் மென்மைத் தன்மை வாய்ந்தவன் என்பதோடு நிலத்தையும் குறிப்பதாக வந்துள்ளது.

“நெய்தலிருங்கழி நெய்தல் நீக்கி

மீனுண் குருகினங் கானலல்கும்’’[26]

என்பன போன்ற அடிகளுக்குக் ‘கானல்’ என்பது கடற்கரையருகினில் உள்ள சோலையினைக் குறிக்கும் தன்மையில் உரையாசிரியர்களால் பொருளுரைக்கப்பட்டுள்ளன. அதேபோல் ‘கழி’ என்பது கடற்கரையருகினில் காணப்படக்கூடிய உப்புவிளையுமிடமுமான கழிமுகப் பகுதியினைக் குறிக்கின்றது. மேற்கண்ட பாடலடியில்வரும் ‘நெய்தல்’ என்பது நிலத்திணையும் அடுத்துவரும் ‘நெய்தல்’ மலரினையும் குறிப்பதாக வந்துள்ளது. மேற்கண்ட தரவுகளின் வாயிலாக கானல், கடற்கரைச் சோலை, கடல், மணல், இருங்கழி, அடைக்கரை, புணரி, முழங்குதிரை, எக்கர், உரவுநீர், கழி, துறை, வெண்மணல், பெருங்கடல், பெருநீர், படுதிரை, திரை, தெண்கடல், மெல்லம், ஓதம், தண்கடல், குவவுமணல் என்னும் சொல்லாடல்கள் வழி நெய்தல் நிலத்தினைக் குறித்து வந்துள்ளன.

**2.3 காலம்**

அக இலக்கியத்தில் நிலச்சிறப்பும் , பொழுதுகளின் மாறுதல்களும் இடம் பெற்று அவை அந்நிலத்தில் கருக்கொள்ளும் பொருள்களின் தோற்றத்திற்குக்

காரணமாகியும் அமைகின்றன. ஒருசெயலைப் பற்றிக் குறிப்பிடுகையில் எங்கு ?எப்போது ? என்கிற வினாவிற்கு இந்த இடம் இந்த நேரம் பதிலளிக்கிறோம். எனவே ஒரு செயல் நடைபெற காலம் முதன்மையாகிறது. மக்கள் வாழ நிலம் முக்கியம் அந்நிலம் விளையப்பருவகாலம் தேவையாகிறது. எனவே இவை ஒன்றோடொன்று கலந்து மக்களின் வாழ்க்கைக்கு அடித்தளமாகின்றன. ''நிலமேயன்றி எல்லாவற்றிலும் இயைந்து நிற்பது காலமாதலின் நிலமும் பொழுதும் முதற்பொருளாம்''[27] என்ற கருத்து மெய்பிக்கிறது.

### 2.3.1. பொழுது

அகப்பொருள் நிகழ்ச்சிக்குரிய பொழுதினைப் பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகையாகப் பிரித்துக் கூறுவர். ஓர் ஆண்டின் ஆறு கூறுபாடுகள் ஒருவருடச் சுற்றில் வரும் மாதங்கள், தட்ப வெப்பப் பிரிவு பெரும் பொழுது எனவும், ஒரு நாளின் ஆறு கூறுபாடுகள் ஒரு நாட்சுற்றில் வரும் காலப்பகுப்பு சிறுபொழுது எனவும் பகுக்கப்படும். காலச்சுழற்சியால் ஓர் ஆண்டுக்கு மழைக்காலம், பனிக்காலம், வேனிற்காலம் என்ற மூன்று பருவங்களும் அமையப்பெறுகின்றன. இவற்றுள்



என ஒவ்வொரு பருவங்களையும் பழந்தமிழர் இரு கூறுகளாக்கினர். இதனைத் தொல்காப்பியர், (தொல். பொருள்.அகம்.சூ.6,7,8,9,10,11) போன்ற சூத்திரங்களில், ஐந்திணைகளுக்கும் உரிய சிறுபொழுதினையும் பெரும்பொழுதினையும் சுட்டுகிறார். உரையாசிரியர்கள் சிறுபொழுது, பெரும்பொழுது ஆகிய இரண்டையும் ஆறுவகையாக பிரிக்கின்றனர்.

| காலம் | மாதம் | நிலம் |
|---|---|---|
| கார் | ஆவணி, புரட்டாசி | முல்லை |
| கூதிர் | ஐப்பசி, கார்த்திகை | குறிஞ்சி |
| முன்பனி | மார்கழி, தை | குறிஞ்சி |
| பின்பனி | மாசி, பங்குனி | பாலை |
| இளவேனில் | சித்திரை, வைகாசி | பாலை |
| முதுவேனில் | ஆனி, ஆடி | பாலை |

ஆறுவகை காலமும் பன்னிரு மாதங்களும் மருதம், நெய்தல் நிலத்திற்குரியவை. அகப் பாடல்களில் பொழுது பதிவு செய்யப் பெற்றுள்ள நிலையினைப் பல நிலைகளில் கூறியுள்ளனர். ‘‘நிலம் என்ற முதற்பொருள் பருவச்சூழலில் பயன் நல்குவது பருவம் வாய்க்கின்ற போதுதான் அது தாவரங்களின் வளர்ச்சிக்கு ஆதாரமாக அமைந்து உணவு எனும் கருப்பொருள் உருவாகக் காரணமாவது, ‘உணவெனப்படுவது நிலத்தொடு நீரே’ என்னும் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுவதைப் போன்று நிலமும் நீரும் இணைவதற்குப் பருவகாலமே ஏற்றதாகிறது. முதலெனப்பட்ட நிலத்துடனான பருவ மாற்றங்களின் இணைவு அதன் வளர்ச்சிக்கும் செழுமைக்கும் ஆதாரமாக அமைந்து மனித வளர்ச்சிக்கும் அடிப்படையாகின்றது. வாழ்க்கைக்காக இருப்பிற்கான இடமும் காலமும் மனித வாழ்வின் எல்லா நிகழ்வுகளுக்கும் ஆதாரமாக அமைவதால் இவை இரண்டும் முதற் பொருள்கள் எனப் பெற்றுள்ளன’’[28] மேலும் ஈங்கு, காலம் அல்லது பொழுது என்பது உலகில் உள்ள எல்லா நிலத்தவர்க்கும் பொதுவானவையே ஆகும்.

எல்லா நிலத்திலும் எல்லாப் பொழுதுகளும் ஏற்படும். இருப்பினும் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிட்ட நிலத்திற்குக் குறிப்பிட்டக் காலங்களைப் பாகுபடுத்திக் குறிப்பிட்டுள்ளனர். ''குறிப்பிட்டக் காலங்களை, காலக்கூறுகளைக் குறிப்பிட்ட திணைகளுக்கு உரிமைப்படுத்திக் கூறியிருப்பது ஆண், பெண் உறவில் எழும் காதலை, காமத்தை முதன்மைப்படுத்தியதாகவே, மையப்படுத்தியதாகவே உள்ளது''[29] என்கின்றார் பெ. மாதையன் மேலும் இவர், 'பொழுது' என்பது என்ன என்பதான வரையறையினைக் தொல்காப்பியம் சுட்டவில்லை நேரடியாக பொழுதுகளைக் குறித்து விட்டு அடுத்த நூற்பாக்களில் மருதம், நெய்தல் திணைக்குரிய சிறுபொழுதுகளையும் அடுத்து பாலைத்திணைக்குரிய இருவகைப் பொழுதுகளையும் சுட்டிச் செல்கின்றார்.

### 2.3.2 சிறுபொழுது

சிறுபொழுது என்பது ஒரு நாளில் நிகழும் காலங்களை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்படுவதாகும். குறிப்பாகத் தலைவன் தலைவிக்கிடையே நிகழும் இன்ப துன்ப நிகழ்வுகளின் அடிப்படையில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. நெய்தலுக்குறிய சிறுபொழுதாக,

''நெய்தல்

எற்பா டாதல் மெய்பெறத் தோன்றும்''[30]

என்று 'எற்பாடு' என்பதைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இந்நூற்பாவிற்கு உரை எழுதிய சிவஞான முனிவர், எற்பாடு என்பதனைக் கதிரவன் மறையும் பிற்பகலாகக் கொள்ளாமல், கதிரவன் எழும் காலைப் பொழுதாகக் கூறுவர். படு– பாடு என்பதற்குத் தோன்றுதல் எனப் பொருளுரைக்கின்றார். நெய்தல் திணையின் சிறுபொழுதாகிய எற்பாடு என்று கூற வந்த க.பா அறவாணன், ''எற்பாடு என்பதை கதிர் தோன்றும் காலைப்போதாகக் கொள்ளுதல் சொற்பொருள் மரபு அன்று, கதிரவன் மறை பொழுதைக் குறித்தலே மரபு. சேர நாட்டார், பிற்பகலைப் 'படு

ஞாயிறு' (படி ஞாயிறு) என்றே வழங்குவர்''[31] என்கிறார் மேலும் சங்க இலக்கியங்கள்,

''பகல்வாய் அந்திப்படுசுடர் அமையத்து''[32]

''பல்கதிர் வாங்கிய படுசுடர் அமையத்து''[33]

என்ற பாடலடிகள் எற்பாடு என்பதை எல்–கதிர், படு–மறை, கதிர்மறைபொழுது எனப் பொருள் கொள்ளும் விதமாக அமைந்துள்ளன. நெய்தல் திணைப் பாடல்களில் 'எற்பாடு' 'எற்படு' என்பதாகப் பாடப்படவில்லை. நெய்தல் திணையில் கதிரவன் மறையும் நேரம் அதிகமான செய்யுட்களில் புனையப்பெற்றுள்ளன. இதனை,

''பல்கதிர் ஞாயிறு பகல் ஆற்றிமலை சேர''[34]

''அகன் ஞாலம் விளக்கும் தன் பல்கதிர் வாயாகப்
பகல் நுங்கியது போலப் படுசுடர் தலிசேர''[35]
''அருள் தீர்ந்த காட்சியான், அறன் நோக்கான், நயன் செய்யான்
வெருவுற உய்த்தவன் நெஞ்சம் போல், பைய
இருள் தூர்பு புலம்பு ஊர, கனைசுடர்கல்சேர''[36]

''படுசுடர் மாலையொடு பைதல் நோய் உழப்பானை
குடிப்புறங் காத்தோம்பும் செங்கோலான் வியன் தானை''[37]

என வரும் நெய்தற்கலிஅடிகள், நெய்தல் இரக்கம், காலைப் பொழுதினும் மாலைப் பொழுதுடன் தொடர்புடையது என்பதையும், மாலைவரப் போகிறதே வந்து விட்டதே என எற்பாட்டுப் பொழுதில் தலைவி துடிப்பதையும் எடுத்துரைக்கின்றது. மேலும்

‘‘காலை அரும்பிப் பகல் எல்லாம் போதாகி

மாலை மலரும் இந் நோய்’’[38]

என்ற குறள் காதலி மாலை வரவு கண்டு மயங்கி வருந்துவதாகக் குறிப்பிடுகிறது.

நெய்தல் நிலக்காதலி, தன் காதலன் கடற்சேர்ப்பனைத் தேடுபவளாய், கானல் வரியில் இசைப்பதை,

‘‘வளை நெகிழ எரிசிந்தி, வந்த இம்மருள் மாலை ?

கதிரவன் மறைந்தனனே ; கார் இருள் பரந்ததுவே ;

எதிர்மலர் புரை உண்கண் எவ்வநீர் உகுத்தனவே ;

புதுமதி புரைமுகத்தாய் !போனார் நாட்டு உளதாம் கொல்

மதி உமிழ்ந்து ; கதிர் விழுங்கி, வந்தஇம் மருள்மாலை ?’’[39]

என மனம் கலங்குவாதாகப் பாடப்பட்டுள்ளது.

மேற்கண்ட தரவுகளைக் கொண்டு பார்க்கையில் ‘எற்பாடு’ என்பதைப் பகலின் பிற்கூறாகக் கொள்ளுதல் பொருத்தமாகும்.

### 2.3.3 நெய்தல்திணைப் பாடல்களில் பெரும்பொழுதுகள்

பெரும்பொழுது என்பதனைக் காலம், பருவம், ஆண்டின் பகுதி என்ற சொல்லாடல்களில் மூலம் சுட்டியுள்ளனர். நெய்தல் நிலத்திற்குரிய பருவம் பற்றிய வரையறையினைக் தொல்காப்பியம் சுட்டவில்லை. இதற்குப் பின்வந்த இலக்கணநூல்களே ஆறு பெரும்பொழுதுகள் உள்ளமையையும் அவை ஆறும் நெய்தலுக்குரித்தானது என்றும், இவை ஓராண்டில் நிகழும் பருவ மாற்றங்களைக் கொண்டு கணக்கிடப்படுவதையும் முன்னிறுத்துகின்றன. நெய்தல் திணைப் பாடல்களில் பெரும்பொழுதுகள் நேரடியாகச் சொல்லாமல் அப்பருவங்களில் உண்டாகக்கூடிய காற்று, மழைப்பொழிவு, மலர்கள் பூக்கும் நிலை, வினை நிகழ்வுகள் போன்ற செயல்பாடுகள் வழியாக ஒவ்வொரு பருவத்தையும் புலவர்கள் பதிவுசெய்துள்ளனர்.

### 2.3.3.1 கார்காலம்

கார்காலம் என்பது மழைக்காலத்தைக் குறிக்கக்கூடியது. இக்காலத்தில் குளிரும் அதிகமாகக் காணப்படும். கார்காலத்தில் நிகழும் காட்சிகளை நெய்தல் திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இதனை,

''தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்

வாரார் போல்வர், நம் காதலர்

வாழேன் போல்வல் தோழி யானே''[40]

எனவரும் வாயிலான் தேவன் கூற்று, கார்காலத்தில் வீசக்கூடிய வாடைக்காற்றானது தலைவியை வருத்துகின்றமையைக் காட்சிப்படுத்தி நிற்கிறது.

கார்காலத்தில் மழைபொழியும் நேரத்தில் வீசுகின்ற குளிர்ந்த காற்றானது தலைவனைப் பிரிந்து தனிமையில் இருக்கும் தலைவிக்குக் கூதிர் காலத்தில் வீசும் கடுங்குளிரானது கூற்றுவனைப் போன்று வருத்த வருவதனை எண்ணி இரங்குவதைப் புலப்படுத்தி நிற்கின்றன. ஈங்கு கார்கால மழையும் கூதிர் கால ஊதைக் காற்றும் தலைவியின் துயரினை மிகுதிப்படுத்தும் பொழுதாக பெரும்பொழுது பாடப்பட்டுள்ளன.

### 2.3.3.2 கூதிர் காலம்

ஊதைக்காற்று என்று சொல்லக்கூடிய குளிர்ந்த ஊதைக்காற்றானது கூதிர் காலத்தில் வீசும் தன்மை வாய்ந்தது. அக்காலம் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு வேட்கை மிகுதி எழுதலால் தாங்கொணாத் துயரத்தை எழுப்புகின்றது. இதனை

''மாக்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப்

பொங்கு பிதிர்த் துவலையொடு மங்குறைஇக்

கையற வந்த தைவர லூதையொ

டின்னா வுறையுட் டாகும்

தின்னாட் டம்மவிச் சிறுநல்லூரே’’[41]

என்ற பாடலில் கூதிர்காலத்தில் கழியிடத்திலுள்ள நீலமணி பூ பூக்கும் இயல்பினையும், அங்கு எழுகின்ற ஊதைக் காற்றானது துன்பத்தைத் தருவதாகவும் தலைவன் விரைவில் வரையாவிடில் தலைவி வாழமாட்டாள் என்பதையும் தெளிவுறுத்திக் காட்டுகிறது. ஆகவே கூதிர்காலமானது தலைவியின் துயரினை மிகுதிப்படுத்தும் காலமாக நெய்தல் திணைப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

**2.3.3.3 பனிக்காலம்**

பனிக்காலம் முன்பனிக்காலம், பின்பனிக்காலம் என்று இரு நிலைகளில் பகுக்கப்பட்டுள்ளது. இவற்றுள் முன்பனிக்காலம் குறிஞ்சிக்கும், பின்பனிக்காலம் பாலைக்கும் உரியதாகவும் இலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளன. பனிக்காலம் கடுங்குளிரினைக் கொண்டு விளங்குவதால் இக்காலம் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு வருத்தத்தை ஏற்படுத்துகின்றன. இதனை,

‘‘பனிபுலந்து உறையும் பல்பூங் கானல்

இரிநீர்ச் சேர்ப்பன் நீப்பின் ஒருநம்

இன்உயிர் அல்லது பிறிது ஒன்று

எவனோ – தோழி நாம் இழப் பதுவே’’[42]

என்னும் பாடல் உணர்த்துகிறது. மேலும்

‘‘எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்

துவலைத் தண்டுளி வீசிப்

பயலை செய்தென பனிபடு துறையே’’[43]

பனிப்படர்ந்துக் காணப்படுகின்ற துறையானது தலைவிக்கு ஆற்றாமையை ஏற்படுத்துவதைக் காட்சிப்படுத்துகின்றன. இதேபோல்,

“புலம்பு தந்தன்றே புகன்றுசெய் மண்டிலம்

எல்லாம் தந்ததன் தலையும் பையென

வடந்தை துவலை தூவ குடம்பைப்’’[44]

என்னும் பாடல் வாடைக்காற்றானது பனித்துளியைத் தூவுதல் என்பது தலைவனுக்குக் கையறவு நிலையாக இருப்பதை உணர்த்துகின்றன. இவ்வாறாகப் பனிக்காலம் என்பது நெய்தல் நிலமக்களுக்குக் குறிப்பாகக் தலைவன் தலைவிக்கு ஆற்றாமையை உண்டாக்கும் பருவமாக அமைகின்றன.

**2.3.3.4 வேனிற் காலம்**

வேனிற்காலம் என்பது மிகவும் வெப்பமுடையதான கோடை காலமாகும்.

“அதுவரல் ன்மையோ அரிதே அவன்மார்பு

உறுக என்ற நாளே குறுகி

ஈங்கு ஆகின்றே தோழி கானல்

ஆடுஅரை புதையக் கோடை யிட்ட

அடும்புஇவர் மணற்கோடுஊர நெடும்பனை

குறிய ஆகும் துறைவனைப்

பெரிய கூறி யாய்றிந்தனனே’’[45]

என்று கோடை காலத்தில் வீசக்கூடியக் காற்றானது அங்கு நிற்கக்கூடிய பனைமரத்தின் அருகினில் மணலினைக் கொண்டு வந்து சேர்த்தமையால் நெடிய பனை குறுகிய வாயின தன்மையினைப் புலப்படுத்துகின்றன. வேனிற்காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றமுடியாத அடைந்ததையும் அதனைத் தோழி மொழிந்து ஆற்றமுற்படுகின்ற இயல்பினையும் காட்சிப்படுத்துவதாக உள்ளன. ஈங்கு வேனிற் காலமும் தலைவியின் ஆற்றாமையை வெளிப்படுத்தும் பருவமாகக் காணப்படுகிறது.

இவ்வாறாக நெய்தல் திணைப் பாடல்களில் கார்காலம், கூதிர்க்காலம், பனிக்காலம், வேனிற்காலம் ஆகியப் பருவங்கள் குறித்த செய்திகள் இடம்பெற்று அதன் வழியாக நெய்தல் நிலத்தலைவன் தலைவியின் மன உணர்வுகளை வெளிப்படுத்தும் வகையில் வந்துள்ளன.

**2.4. முதற்பொருள்களின் வழி திணைசார் ஒழுக்கம்**

**2.4.1 தலைவிகாதல்**

நெய்தல் நிலத்தலைவி அந்நிலத்தலைவனைக் கண்டு காதல் கொள்கிறாள். இதன் காரமணாக அவள் மேனி வேறுபாடைகிறது. அதனை அறியாத செவிலி வருத்தமுற்று தலைவியின் பசலையை நீக்க இடர்படுகிறாள். அதனைக் கண்ட தோழி தலைவியின் தீராக் காதலை,

‘‘அன்னை, வாழி! வேண்டு, அன்னை! – என்தோழி
சுடர் நுதல் பசப்பச் சாஅய், படர்மெலிந்து
தண் கடற்படு திரை கேட்பொறும்
துஞ்சாள் ஆகுதல் நோ கோ யானே’’[46]

களவினை வெளிப்படுத்த நெய்தலின் முதற்பொருளான கடல் பெரும் பங்குவகிக்கின்றது. குளிர்ச்சிப் பொருந்திய கழியினையும், கடற்கரைச் சோலையினையும் காணுந்தோறும் அக்கடலின் கண் எழும் அலைகளின் ஒலியினைக் கேட்குந் தோறும் தலைவி தன் துயிலினை இடிக்கிறாள் என்று தலைவி நெய்தல் நிலத் தலைவன் மேல் கொண்ட காதலை அத்தலைவனது நாட்டின் முதற்பொருளான கடலினைக் கொண்டே தன் தாய்க்கு தோழி உணர்த்துகிறாள்.

**2.4.2 குறியிடம் சுட்டல்**

களவு காலத்தில் தலைமக்கள் இருவரும் பகலிலும் இரவிலும் யாவரும் அறியா வண்ணம் சந்திப்பு நிகழ்த்துவர். இதே போன்று நெய்தல் நிலத்

தலைவனும் தலைவியும் பகற்பொழுதில் சந்தித்ததை ஊரார் கண்டு அலர் தூற்றினர் இதனால் இனி தலைவனைக் காண இயலாது. என கவலையுற்ற தலைவியிடம் தோழி,

''படு திரை கொழீஇய பால்நிற எக்கர்த்
தொடியோர் மடிந்தெனத் துறை புலம்பின்றே;
முடி வலை முகந்த முடங்கு இறாப் பரவைப்
படு புள் ஓப்பலின் பகல் மாய்ந்தன்றே;''[47]

''சேய் விசும்பு இவர்ந்த செழுங் கதிர் மண்டிலம்
மால் வரை மறைய துறை புலம்பின்றே''[48]

''இனிப்புலம் பின்றே !கானலும் நளிகடல்
திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்
பல்மீன் கூட்டம் என் ஐயர்க் காட்டிய
எந்தையும் செல்லுமார் இரவே! அந்தி''[49]

''கொடுங் கழி வளை இயகுன்று போல், வால் எக்கர்
நடுங்கு நோய்தீர, நின்குறிவாய்த்தான் என்பதோ
கடும்பனி அறல் இரு கயல் ஏர் கண் பனி மல்க''[50]

என்று கூறுகிறாள். அதாவது பெரிய அலைகள் கொழிக்கின்ற வெண்மையான நிறம் கொண்ட எக்கராகிய மணல் மேடானது, யாவருமின்றி தனிமை கொண்டது என்று கூறித் தலைவனுக்குக் கடற்கரையிடத்து தான் இரவுக்குறி இசைந்ததைத் தலைவிக்கு உணர்த்துகிறாள் தோழி. இவ்வாறு தலைமக்களின் காதல் சந்திப்பு நிகழும் குறியிடமாக நெய்தல் திணையின் முதற்பொருளான நிலம் (கடற்கரை) அமைந்துள்ளதை மேற்காட்டிய பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

### 2.4.3 தலைவி சினம் கொள்ளுதல்

களவில் பலநாளும் தலைவனின் இன்பத்திற்குக் காரணமானத் தலைவி தலைவனின் பிரிவினைத் தாங்க மாட்டாது துன்பத்தில் தவிக்கிறாள். பலகாலும் தங்களின் காதல் வளர கடற்கரைச்சோலையும், உப்பங்கழியும் காரணமாயிருந்தாலும் இன்று தான் துன்பமிகுதியினைக் தலைவனுக்கு எடுத்துக் கூறாமல் அமைதியாகவே உள்ளன என்று அவற்றின் மேல் சினம் கொள்கிறாள். இதனை,

''கானலும் கழறாது, கழியும் கூறாது,
தேன் இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது,
ஒரு நின் அல்லது பிறிது யாதும் இலனே,
இருங்கழி மலர்ந்த கண் போல், நெய்தல்
கமழ் இதழ் நாற்றம் அமிழ்து என நசைஇ
..................................................................
தன் உறு விழுமம் நீந்துமோ எனவே''[51]

என்னும் பாடலடியிலிருந்து தலைவன் மேல் கொண்ட வேட்கை மிகுதியாள் அவன் நாட்டுக் கடலும் தலைவியின் சினத்திற்கு உள்ளானது வெளிப்படுகிறது. இதில் தலைவயின் சினம் நெய்தல் நிலத்தினால் வெளிப்படுகிறது. தலைவி நெஞ்சிலிருந்த துயரமே அவருற்ற சினத்திற்குக்காரணமாதலை நெய்தல் நிலம் ஆகிய முதற்பொருள் அமைகிறது.

### 2.4.4 கடல் சாட்சியாதல்

தலைவன் தலைவியை மணந்து கொள்ளும் குறிப்பின்றி காலந்தாழ்த்தியமையால் தலைவியடைந்த துயரினைக் கண்ட தோழி, அன்று கடலைச் சாட்சியாக வைத்து தலைவியிடம் நீ உரைத்த சூளுரைகள் பொய்யாகிவிடுமோ எனத் தலைவனிடம் கூறி வரைவு கடாவுகின்றாள். இதனை,

"நடுங்கு அயிர் போழ்ந்த கொடிஞ்சி நெடுந்தேர்
வண்டல் பாவை சிதைய வந்துநீ
தோள் புதிது உண்ட ஞான்றே,
சூளும் பொய்யோ! கடல் அறிகரியே''[52]

"பெருங்கடற் தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என்
திருந்திழை மென்தோள் மணந்தவன் செய்த
அருந்துயர் நீக்கவேன் போல்மன்–பொருந்துபு
பூக்கவின் கொண்ட புகழ் சாரல் எழில் உண் கண்
நோக்குங்கால் நோக்கின் அணங்கு ஆக்கும், சாயலாய் ! தாக்கி ''[53]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. நெய்தலின் முதற்பொருளான கடல் தலைமக்களின் உன்னதக் காதலுக்குச் சான்றாகியதுடன், தலைவியைத் தலைவன் விரைவில் மணப்பதற்கான தூண்டு கோலாகியதையுள்ளதையும் அறியமுடிகிறது.

### 2.4.5 தலைவியின் ஆற்றாமை வெளிப்படல்

தலைவன் தலைவியை மணம் புரியும் பொருட்டுப் பொருளீட்டப் பிரிந்தான் அதனால் தலைவி கடுமையான கதிர்களையுடைய கதிரவனும் மேற்கே மறைகின்றது மாலையின் முதற்பகுதியாகிய எற்பாடும் வந்தது. தலைவனைக் காணாமல் நான் இனி உயிர் வாழ்வது கடினம் என்று ஆற்றாமையை தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். இதனை,

"எல்லை பைப்பயக் கழிப்பிடக்குடவயின்
கல் சேர்ந்தன்றே பல்கதிர் ஞாயிறு
மதர் எழில் மழைக்கண் கலுழ இவளே''[54]

என்ற பாடலடிகள் தலைவியின் ஆற்றாமையை வெளிப்படுத்தும் வாயிலாக நெய்தலின் சிறுபொழுதான எற்பாடு முதன்மை பெறுகின்றது.

மனிதன் பொழுது வயப்பட்டவன் என்பதை உணர்த்தும் வகையில் நெய்தலின் சிறுபொழுதான எற்பாடு தலைவியின் ஆற்றாமைக்குக் காரணமாவதை,

''நெய்தல் கூம்ப, நிழல் குணக்கு ஒழுக
கல்சேர் மண்டிலம் சிவந்து நிலம் தணிய
..........................................................
இன் நகை மேவி, நாம் ஆடிய பொழிலே''[55]

''கடுங்கதிர் ஞாயிறு மலை மறைந்தன்றே;
அடும்பு கொடி துமிய ஆழி போழ்ந்து, அவர்
நெடுந்தேர் இன் ஒலி இரவும் தோன்றா ;
இறப்ப எவ்வம் நலியும் நின்நிலை''[56]

என்ற பாடலடிகள் நெய்தல் நிலத் தலைவியின் ஆற்றாமையை உணர்த்துகின்றன.

### 2.4.6 தலைவி பருவம் கண்டு புலம்பல்

இளவேனிற் பருவத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் அப்பருவம் வந்த பின்னரும் வாராமையால் தலைவி, தலைவன் பிரியும் போது தம்பால் ஈத்துக் கொள்ளாத தன் உள்ளம் பின்னர்த் துணிந்த தறுகண்மையால் உயிருடன் வாழ்வதாகப் புலம்புவதை,

''சினைஇனிது ஆகிய காலையும், காதலர்
பேணார் ஆயினும், பெரியோர் நெஞ்சத்துக்
கண்ணிய ஆண்மை கடவது அன்று என
வலியா நெஞ்சம் வலிப்ப
வாழ்வேன்– தோழிஎன்வன் கணானே ''[57]

என்னும் பாடல் தலைவியின் உள்ளத்து உணர்வுகளை பருவத்தின் வாயிலாக உணர்த்துகின்றது.

### 2.4.7 தலைவி மனம் கலங்குதல்

கார்காலத்தின் பின்னதாகிய கூதிர்ப்பருவமழை குளிரைத் தரும் வாடைக் காற்றோடு கலந்து பெய்தது. கார் காலத்தில் வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் இல்லாமையால் உடல் வேறுபட்டு உள்ளம் மயங்கிய தன்னைக் கொள்வதையே நோக்கமாகக் கொண்டு இக்கூதிர் காலமும் வந்ததாகத் தலைவி கூறுகிறாள். இதனை

''யாது செய்வாம் சொல்–தோழி ! –நோதக
நீர் எதிர் கருவிய கார் எதிர் கிளைமழை
ஊதை அம் குளிரொடு பேதுற்று மயங்கிய
கூதிர் உருவின் கூற்றம்
காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே ?''[58]
''ஒன்று இல் காலை அன்றில் போலப்
புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை
யானும் ஆற்றேன், அது தானும் வந்தன்று
..............................................
தண்ணீர் ததைஇ நின்ற பொழுதே''[59]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. நெய்தலின் பெரும் பொழுதான கார்காலமும் கூதிர்க்காலமும் தலைவியின்பிரிவுத் துன்பம் அதிகப் படுவதற்குக் காரணமாக அமைந்துள்ளன.

### 2.4.8 முதற்பொருளும் உணர்வுவெளிப்பாடும்

நெய்தல் திணைப்பாடல்களில் கடல் முதன்மைப் படுத்தப்படுவதோடு பல்வேறு நிலைகளில் பல்வேறு கருத்துப் புலப்பாட்டிற்குறியதாக இடம் பெறுகிறது.

நெய்தல் நில அக மாந்தர்களின் உணர்வு வெளிப்பாட்டிற்கு முதற்பொருளானகடல் வாயில்களாக அமைகின்றது. இதனை,

''மண்டு நீர் ஆரா மலிகடல் போலும் நின்
தண்டாப் பரத்தை தலைக்கொள்ள''[60]

''காதல் தானும் கடலினும் பெரிதே''[61]

''யாமம் கொளவரின் கனைஇ காமம்
கடலினும் உரைஇ கரை பொழியும் மே''[62]

''கடல் அணிந்தன்று, அவர்ஊரே ;
கடலினும் பெரிது, எமக்கு அவருடை நட்பே''[63]

என்னும் பாடலடிகளில் தலைவனின் பரத்தமைக்கும், தலைவி, தலைவன் மேல் கொண்ட காதல், காமம், நட்பு ஆகிய உணர்வுகளின் வெளிப்பாட்டிற்கு நெய்தலின் முதற்பொருளான கடல் துணைபுரிகிறது. மேலும்,

''குறி இறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறி உளி பொருத ஏமுறு பெருமீன்
புண் உமிழ்க்குருதி புலவுக்கடல் மறுப்பட''[64]

மீன்களை வேட்டையாடும் பரதவர்கள் குறுகிய சிறிய குடிசையில் வாழ்பவர்கள் அவர்களால் எறியப்பட்ட புண்பட்ட மீன்கள் கடல் நீரின் தன்மை மாறுபடுமாறு புலால் நாற்றம் கொள்ளக் கடலில் உள்ள மீன்கள் வானவில்லைப் போன்று வானில் தாவி கடலில் பாயும் அத்தகு துறைமையுடையவன் என் தலைவன் எனத் தோழியிடம் தலைவிக் கூறுகிறாள். ஆக தலைவனின் உணர்வு வெளிப்பாட்டிற்கு கடல் துணைபுரிவதை அறியமுடிகிறது.

நெய்தல் நில முதற்பொருளான கடல் மட்டும் அல்லாமல் கடலில் தோன்றும் அலையும் அதில் உண்டாகும் துறையும் கூட தலைவன், தலைவி சாதல் உணர்வு வெளிப்பாட்டிற்கு காரணமாக அமைவதை,

“காமம் தாங்குமதி—என் போர் தாம் அஃது

அறியலர் கொல்லோ—அனை மதுகையர் சொல் ?

யாம், எம் காதலர்க் காணேம் ஆயின்

செறிதுனி பெருகிய நெஞ்சமொடு, பெருநீர்க்

கல்பொரு சிறுவரை போல

மெல்ல மெல்ல இல்லாகுதுமே”[65]

“அரும் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான் போல்

பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டு இமிர் நறுங் கானல்”[66]

என்ற பாடலடிகள் நெய்தல் நிலத் தலைவன் காதலுற்றுப் பிரிந்த காலத்தில் தலைவியின் துயரினை உணர்த்த கல்லில் மோதிய கடல் நுரையின் மூலமாக புலவர் உணர்த்துகிறார். நெய்தல் நில மாந்தர்களின் மன உணர்வுகளுக்கு அவனைச் சுற்றியுள்ள நிலமும் காலமும் முக்கியப் பங்குவைப்பதை நெய்தல்திணைப் பாடல்கள் உணர்த்துகின்றன.

### 2.5 திணை மயக்கம்

ஒரு திணையின் எல்லைக்குட்பட்ட சில கூறுகள் பிறிதொருதிணையின் கட்டுக்கோப்போடு கலந்து வருவது திணை மயக்கமாகும். தொல்காப்பியர் திணை என்னும் ஒழுக்கத்திற்குப் புறனடையாகத் திணை மயக்கம் என்னும் பிறிதொரு வரையறையையும் கூறுகின்றார்,

“திணை மயக்குறுதலும் கடிநிலை யிலவே

நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப

புலன்நன் குணர்ந்த புலமை யோரே”[67]

இந்நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் பலவாறு விளக்கம் கூறுகின்றனர். இளம்பூரணர், “ஒரு திணைக்கு உரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய

முதற்பொருளோடு சேர நிற்றலும் கடியப்படாது, ஆண்டு நிலம் சேர நிற்றல் இல்லை என்று சொல்லுவர். எனவே காலம் மயங்கும் என்றவாறாயிற்று''[68] என விளக்குகிறார். நிலம் மயங்காது காலம் மயங்கும். மேலும்,

ஆ.சிவலிங்கனார், ''ஆசிரியர் நிலத்தொடர்பாகவே 'திணை மயக்குறுதலும்' என்னும் இச்சூத்திரம் கூறினார் என்க, அதாவது, நிலமும் பொழுதும் என்னும் முதற்பொருள் தொடர்பாகவே கூறினார். அதனால் திணைமயக்குறுதல் என்பது நிலமும் பொழுதும் மயங்குதலையே குறிக்கும். ஆனால் நிலன் ஒருங்கு மயங்குதல் இன்று என்றதால் திணை மயக்குறுதல் என்பது பொழுது மயங்குதலையே குறிக்கும்''[69] என இளம்பூரணரைப் போலவே திணை மயக்குறுதல் என்பதற்குக் காலம் மயங்குதல் எனப் பொருள் கொண்டுள்ளார். நச்சினார்க்கினியர், 'திணை என்பதற்கு ஒழுக்கம் என்று பொருள் கொண்டு ஒழுக்க வடிவங்கள் மாறுபடும் என்றும் நிலங்கள் தம்முள் மயங்காது''[70] என்கிறார். இதன்படி திணைக்குரிய ஒழுக்கங்கள் மயங்கி நிகழ்தல் என்பது நீக்கப்பட முடியாத ஒன்று. ஆனால் முதற்பொருளான நிலம், பொழுது இவற்றுள் நிலங்கள் தம்முள் மயங்குதல் இல்லை. பொழுது மட்டுமே மயங்கும் என்பதை அறியலாம். மேலும் கருப்பொருள்களில் பூவும், புள்ளும் ஒரு நிலத்திற்குரியன வாய் இருந்தாலும், வேறொரு நிலத்தில் வந்தால் அவை அந்த நிலத்திற்குரியனவாகவே கொள்ளப்படும்.

''எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்''[71]

எனும் நூற்பாவில் தொல்காப்பியர் கருப் பொருள்கள் திணை மயக்கம் பெறும் என்கிறார். மேலும்,

''உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே''[72]

என்ற சூத்திரத்தில் தொல்காப்பியர் உரிப்பொருள் மயங்காது என்கிறார். இதில் உரிப்பொருள் அல்லாத கரு, முதற்பொருள் மயங்கி வரும் என்பது பெறப்படுகிறது. எனவே உரிப்பொருள் என்பது பாடலின் மையம் என்பதும் அதனை விளக்க உதவும் கருப்பொருள், முதற்பொருள் ஆகியன மயங்கி வரலாம் என்பது பெறப்படுகிறது. எனவே உரிப்பொருள் என்பது பாடலின் மையம் என்பதும் அதனை விளக்க உதவும் கருப்பொருள், முதற்பொருள் ஆகியன மயங்கி வரலாம் என்பதும் அறியப்படுகிறது. எனினும் உரிப்பொருள் தான் அக இலக்கியங்களின் பாடுபொருளாக அமைவதால் ஒரு நிலத்தில் நிகழும் ஒழுக்கம் மற்றொரு நிலத்திலும் நிகழ்தல் தவறெனக் கூற இயலாது. மேலும் முதல், கருப் பொருள்களைப் போன்று அல்லாமல் உரிப்பொருள் அரிதாக மயங்கும்.

''ஓர் உரிப்பொருள் அல்லது வாழ்க்கை ஒழுக்கம் ஒரு குறிப்பிட்ட நிலத்தில் ஒரு குறிப்பிட்ட கருப்பொருள் சூழலில் நிகழும் என்றால் ஒரு கற்பனைப் படைப்பாகும். இஃது உலகியலில் அடங்கிய ஓர் உண்மை அன்று ஆகவே வெவ்வேறு திணைக் கூறுகள் கலந்து வரப்பாடுதல் என்பது. அதாவது, திணைமயக்கம் என்பது கற்பனைப் பாகுபாடாகிய திணை உணர்ச்சிக்குக் கூறப்படும் புறநடையே திணை மயக்கமாகும்''[73] என்று சுப்பு ரெட்டியார் கூறும் விளக்கம் மிகவும் ஏற்புடையதாகும். மேலும், ''முன் குறிப்பிட்ட முதல், கரு, உரி எனப்பட்ட பொருள்கள் அடங்கியது திணைப்பாட்டு. இவை மயங்கிவருதல் தவிர்க்க வொண்ணாது உலகியல் நடைமுறையில் எல்லா நிலத்திலும் அனைத்து ஒழுக்கமும் நிலவும், ஆயினும் இலக்கியப் படைப்பு என வரும் போது நிலம் மட்டும் ஒரு பாடலில் ஒன்றே வரும். இரு நிலங்கள் மயங்கி வராது''[74] என்று தமிழண்ணல் மிகத் தெளிவாகத் திணைமயக்கம் பற்றிக் கூறுகின்றார்.

திணை ஒழுக்கத்தில் புறநடையே இந்தத் திணை மயக்கம் என்பதும், நிலங்கள் தவிர பொழுது, கருப்பொருள், உரிப்பொருள் ஆகியன திணை மயக்கம் பெற்று வரும் என்பதும் இலக்கியங்களில் இவை நீக்கப்பட முடியாது என்பதும்

தெளிவாகின்றது. மேலும் இத்திணை மயக்கம் என்பது இலக்கிய மரபு மீறலுக்கான வரையறை என்றும் கொள்ளலாம்.

### 2.5.1 நெய்தலில் மருதம்

களவு காலத்தில் இரவு நேரத்தில் மட்டுமே தலைவனின் தேர் தலைவியைக்காண வந்து கொண்டிருந்தது. ஆனால் இன்று அத்தேர்க் குதிரைகள் விரைந்தோடி மறைய மறைவேதுமின்றி இளையரோடு அலர் தூற்றுவதும் பெண்கள் காணுமாறு பகல் நேரத்தில் வந்ததாகத் தோழி உரைப்பதை,

''இரவந்தன்றால் திண்தேர் கர வாது,
ஒல்லென ஒலிக்கும் இளைய ரொடு வல்வாய்
அரவச் சீறூர் காணப்
பகல் வந்தன்றால் பாய் பரிசிறந்தே''[75]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன. அதாவது தலைவியைத் திருமணம் செய்து கொள்வதற்காகப் பலரும் காண தலைவன் தேரேறிவந்த செய்தி மருதத்திணையின் சிறுபொழுதான பகல்பொழுதின் வாயிலாக வெளிப்படுகிறது.

### 2.5.2 நெய்தலில் பாலை

தலைவியின் கண்ணுறக்கத்தைக் கைக்கொண்டு அவளை நினையாத அவள் காதலன் தந்த காதல் நோய்க்குக் கடும் பகலும் கூடவேது கொள்வது போல் உள்ளதாகத் தலைவி எண்ணுகிறாள். இதனை,

''பண்பு தர வந்த என் தொடர்நோய் வேது
கொள்வது போலும் கடும் பகல் ? ஞாயிரே''[76]

பாலையின் சிறுபொழுதான கடும் பகல் நெய்தல் திணைத் தலைவியின் அளவிடமுடியாத காதல் நோயினைப் புலப்படுத்தும் வகையில் பாடலில் அமைந்துள்ளது. மேலும் பொருள் வயிற் பிரிந்த தலைவனையும் அவன் கடந்து

செல்வதற்கு அரிய பாலை வழியையும் வெயில் சுட்டெரிக்கும் கோடைக் காலத்தையும் எண்ணித் தலைவி ஆற்றாமை மிகுந்து காணப்படுவதை,

''விசும்பு உற நிவந்து சுழலும் , விலங்கு அரு வெஞ்சுரம்

இறந்து தாம் எண்ணிய எய்துதல் வேட்கையால்

அறம் துறந்து ஆயிழாப் ! ஆக்கத்தில் பிரிந்தவர்''[77]

எனும் பாடலடிகள் சுட்டுகின்றன. இவ்வாறு கலித்தொகையின் நெய்தல்கலிப் பாடலில் பாலையின் முதற் பொருளான வெஞ்சுரம், கோடைக்கால இயல்பும் சுட்டப்பெற்று முதற்பொருளான பொழுது மயக்கம் பெற்றுவந்துள்ளன.

### 2.5.3 நெய்தலில் முல்லை

பொருள் வயிற் பிரிந்த தலைவனை நினைத்து வருந்தும் தலைவி, நேற்றுப் பிரிவு நோயினால் துன்புற்ற மாலை இன்றும் வருவதாயின் நான் எவ்வாறு தாங்குவது என அறியேன் என்பதை,

''அரும்பு வாய் அவிழும் பெரும்புன் மாலை

இன்றும் வருவது ஆயின் நன்றும்

அறியேன் வாழி– தோழி !''[78]

என்னும் பாடலடிகளில் மாலையின் கொடுமை தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஏற்படுத்தும் மனவருத்தத்தை முல்லை நிலத்தின் முதற்பொருளான மாலைப் பொழுது நெய்தல்திணை பாடலில் வந்து தலைவியின் இரங்கல் உணர்வு வெளிப்பாட்டிற்கு வாயிலாக அமைகிறது.

நீலநிறம் கொண்ட பெரிய உப்பங்கழியில் வளரும் நீலமலர் குவியக் கூடியது மாலைக்காலம் கூற்றுவனைப் போல தென்றல் காற்றை விடுத்து வந்துவிட்டது என மாலை நேரத்தின் துன்பத்தைத் தோழியிடம் கூறுகிறாள் தலைவி. இதனை,

‘‘அம்மா வாழி தோழி !நாம்ஆழ

நீல இருங்கழி நீலம் கூம்பும்

மாலை வந்தன்று, மன்ற

காலை அன்ன காலை முந்துறுத்தே’’[79]

என்னும் நெய்தல் திணைப் பாடலில் முல்லையின் சிறுபொழுதான மாலை இப்பொழுது வந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும் தலைவனின் பிரிவாள் வாடும் தலைவி மாலைப் பொழுதின் கொடுமையினைத் தோழியிடம் கூறுகிறாள். இதனை,

‘‘மாவதி சேர மாலை வாள் கொள

அந்தி அந்தணர் எதிர் கொள, அயர்ந்து

செந்திச் செல்வழல் தொடங்க– வந்ததை

வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்

காலை ஆவது அறியார்–

மாலை என்மனார் மயங்கி யோரே’’[80]

என்னும் பாடலடிகளில் மாலைப்பொழுதின் நிகழ்வான விலங்குகள் தாம் தங்கும் இடத்திற்குச் செல்கின்றன. அந்தணர் தம் முறைப்படி அந்திக் காலத்தை எதிர் கொண்டனர். மகளிர் செந்தீயால் விளக்குகளை ஏற்றினர். ஒளிபொருந்திய அணிகலன்கள் அணிந்த மகளீர் மாலைப்பொழுது விளக்கம் கொள்ளவந்ததை உயிரை அவர்தம் உடம்பினின்று பிரிக்கும் கொடுமையான காலம் என்பது அறியாராய், அறிவு மயங்கி மாலை என்று கூறுகின்றனர் என்று தலைவி தோழியிடம் கூறுகிறார்.

முல்லையின் முதற்பொருளான மாலை நெய்தல் திணைப் பாடல்களில் வந்து முதற்பொருள் மயக்கம் பெற்றுள்ளது. மேலும்

‘‘கூற்று நக்கது போலும், உட்குவரு கடுமாலை!

மாலைநீ–உள்ளம் கொண்டு அகன்றவர் துணை தாராப்பொழுதின் கண்’’[81]

என்னும் பாடலடிகளில் முல்லையின் சிறுபொழுதான மாலைப்பொழுதுவந்து தலைவனைப் பிரிந்து வாழும் தலைவியின் துன்பத்தை மிகுதிப் படுத்துவதாக தலைவி தோழியிடம் கூறுகின்றாள் பிறத்திணையின் பொழுதாயினும் நெய்தல் திணையின் ஒழுக்கத்திற்குக் துணைபுரியும் வகையில் அமைந்துள்ளன.

### 2.5.4 நெய்தலில் குறிஞ்சி

களவொழுக்கத்தில் ஈடுபட்டத் தலைவன் தலைவியைக் கூடுவதற்காக இரவுக் குறியிடத்தே வந்து செல்கின்றான். இதனை,

‘‘கொடுந்தாள் முதலையொடு கோட்டு மீன் வழங்கும்
இருங்கழி இட்டுச் சுரம் நீந்தி இரவின்
வந்தோம்! மன்ற தண்கடல் சேர்ப்ப’’[82]

என்னும் பாடலடிகளில் குறிஞ்சி நிலத்தின் முதற்பொருளான இரவு நெய்தல் திணைப் பாடலில் வந்து நெய்தல் நிலத் தலைவனின் களவொழுக்கத்தை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. மேலும் களவொழுக்கத்தில் பகற்பொழுதிலேயே தலைவியைக் கூடி மகிழ்ந்து பிரிந்த தலைவனின் நினைவில் வாடும் தலைவியை விட்டுப் பிரியாதே எனத் தோழி தலைவனிடம் கூறுகிறாள். இதனை,

‘‘பைங்காற் கொக்கினம் நிரைபறை உகப்ப
எல்லை பைப்பயக் கழிப்பிக்குடவயின்
கல் சேர்ந்தன்றே பல்கதிர் ஞாயிறு’’[83]

என்னும் பாடலடிகள் குறிஞ்சித் திணையின் களவு கால நிகழ்வு நெய்தல் திணைப் பாடலில் வந்துள்ளன. மேலும் களவொழுக்கத்தில் தலைவியைக் கூடி மகிழ்ந்த தலைவன் பகற்பொழுதில் பிரிந்து செல்கின்றான். தலைவனின் பிரிவைத் தாங்காது தலைவி மனவருத்தம் கொள்வதை அறிந்தத் தோழி தலைவனை இரவுபொழுதும் தங்கிச் செல்லுமாறுக் கூறுகிறாள். இதனை,

“இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்உறை நல்விருந்து அயர்தல்,
ஒல்லுதும் பெருமநீநல் குதல் பெரினே’’[84]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் (அகம், 340) பாடலும் கரிய உப்பங்கழி வழியே தலைவன் செல்லும் இரவு நேரத்து ஏதம் எண்ணி நெய்தல் நிலத் தலைவிபடும் துன்பத்தை குறிஞ்சி நிலமுதற்பொருளான யாமத்தைக் கொண்டு புலவர்கள் பாடியுள்ளனர். பாலை, முல்லை, மருதம், குறிஞ்சி ஆகிய திணைகளின் முதற்பொருள்களில் ஒன்றான சிறுபொழுதுகள் நெய்தல் திணைப் பாடல்களில் முதற்பொருள் மயக்கமாக வந்துள்ளன.

இவ்வாறு மயக்கம் பெற்ற பாடல்களில் முதற்பொருளமைவு தலைவன், தலைவியின் அகமன உணர்வுகளின் புலம்பலாக வந்துள்ளது. பிறத் திணைகளின் முதற்பொருளான காலம் நெய்தல் திணைப் பாடல்களில் பயின்று வந்து நெய்தல் நிலத் தலைவன், தலைவி ஆகியோரின் காதல் ஒழுக்கத்திற்கு வலு சேர்க்கும் வகையில் வந்துள்ளன.

## 2.6. தொகுப்புரை

- ❖ மனித இனத்தின் மன உணர்வுகளுக்கு நிலமும் பொழுதும் காரணமாக அமைவதை நெய்தல் திணைப் பாடல்கள் உணர்த்துகின்றன.

- ❖ ஒழுக்கமே நிலங்களின் பெயர் வைப்பிற்குக் காரணம் என்று நச்சினார்க்கினியரும், கருமப்பொருளேஎன்று இளம்பூரணரும் கருதுகின்றனர்.

- ❖ தமிழர்களின் அகத்திணை மரபு முதல், கரு, உரி என்ற முப்பொருள்களைக் கொண்டு கட்டமைக்கப்பட்டுள்ளது.

- ❖ ஒரு திணையின் எல்லைக்குட்பட்ட சில கூறுகள் பிறிதொருதிணையின் கட்டுக்கோப்போடு கலந்து வருவது திணை மயக்கமாகும்.

- ❖ நெய்தல் திணையானது தனக்குரிய தம் பாடல்களில் குறைவாகவும், முல்லைத் திணைக்குரிய சிறுபொழுதுதான மாலைப் பொழுதினை அதிகமாகவும் (திணைமயக்கமாக) பெற்று வந்திருப்பதை நெய்தல் திணைப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

- ❖ முதற்பொருள் மயக்கமானது அதிக அளவில் நெய்தல் திணைப் பாடல்களில் மயங்கி வந்துள்ளன.

- ❖ நெய்தல் திணையின் நிலமாக கடல் தலைவன் மேல் தலைவி கொண்ட காதலைத் தாங்கு வெளிப்படுத்தவும் தலை மக்கள் காதல் சந்திப்பு நிகழும் குறியிடமாகவும், தலைவியின் சினத்தை வெளிப்படுத்தவும் தலை மக்களின் காதலுக்குச் சான்றாகவும் பாடல்களில் வந்துள்ளன.

- ❖ நெய்தலின் சிறுபொழுதான எற்பாடு மற்றும் அறுவகைப் பெரும் பொழுதுகளும் தலைவன் பிரிவால் தலைவி கொண்ட ஆற்றாமையைப் புலப்படுத்தும் வாயிலாக அமைந்துள்ளன.

❖ நெய்தல் திணையின் முதற்பொருள் மயக்கத்தின் வழி, நடும்பகல் (மாலை) நேரம் கூட தலைவிக்கு வேது கொள்வதாக இருத்தல், பகல் நேரத்தில் (மருதம்) அணைவரும் காண தலைவியைத் தலைவன் திருமணம் செய்து கொள்வதால் தலைவன் சென்ற கடத்தற்கரிய (பாலை) நில வழியையும், வெயில் சுட்டெரிக்கும் கோடைக்காலத்தையும் எண்ணித் தலைவி கொண்ட ஆற்றாமை போன்றவற்றையும் உணர்த்துவதாகப் பாடல்களில் வந்துள்ளன.

❖ நெய்தல் திணையின் முதற்பொருள் மயக்கமானது சிறுபொழுது, அடிப்படையில் நிகழ்ந்துள்ளதைப் பாடல்களில் காணமுடிகிறது.

❖ குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை ஆகிய திணைகளுக்குரிய சிறுபொழுது, நெய்தல் நிலத் தலைவன், தலைவி ஆகியோரின் காதலுக்கு வலுசேர்க்கும் வகையிலேயே பாடல்களில் இடம்பெற்றுள்ளன. அதாவது நெய்தல் திணையின் உரிப்பொருளான இரங்கலும் மற்றும் இரங்கல் நிமித்தமும் ஆகிய உணர்வுக்கு வலுசேர்க்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. தமிழண்ணல், சங்க மரபு, பக். 12–13
2. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.25
3. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), தொல்.பொருள் (தொகுதி. 3, பகுதி–1) அகத்.சூ.4
4. இல.செ. கந்தசாமி, இலக்கியத்தில் வேளாண்மை ப.22
5. பாவலரேறு ச.பாலசுந்தரம் (உ.ஆ.), மு.கா.நூல், சூ.5
6. தனிநாயகஅடிகள், பேராசிரியர் பூரணசந்திரன்(மொ.ஆ) நில அமைப்பும் தமிழ் கவிதையியலும், ப.19
7. பொ. சுந்தரம், தமிழக நில அமைப்பும் வரலாற்று வளர்ச்சியும், ப.603
8. ஜமாலன், மொழியும் நிலமும், ப.155
9. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), தொல். பொருள். அகத் சூ. 5
10. மேலது, ப.13
11. கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட்டினப்பாலை, பாடலடி, 86–90
12. இளம்பூரணர், (உ.ஆ.), தொல். பொருள். அகத். சூ.5, ப.6
13. நச்சினார்க்கினியர் (உ.ஆ) மு.கா.நூல்.அகத்.சூ.5 பக். 16
14. மு.இராகவையங்கார், தொல்.பொருள். ஆராய்ச்சி .பக்.24, 25
15. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள் விளக்கம், சூ.5, ப.15
16. சிங்காரவேலு முதலியார் அபிதானசிந்தாமணி, ப.180
17. கோவூர்கிழார், புறம்.பா. 45
18. அறிஞர் தனிநாயக அடிகள், தமிழ்த்தூது (கட்டுரைக்கொத்து), பக். 54–55
19. கலைக்களஞ்சியம் தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு, தொகுதி–6, ப.539
20. தமிழண்ணல், சங்க மரபு, ப.199
21. பொன்னாகன், குறுந்.பா.14:1–2
22. அம்மூவனார் , ஐங். பா.184 :1–2
23. மேலது, ஐங். பா.119 :3–4

24. மேலது, ஐங். பா.138 :2–3
25. நரிவெருஉருத்தலையார், குறுந்.பா.5 :4–5
26. அம்மூவனார், ஐங். பா.184 :1–2
27. இல. செ. கந்தசாமி இலக்கியத்தில் வேளாண்மை, ப.23
28. பெ. மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.26
29. மேலது, ப.27
30. பாவலரேறு ச.பாலசுந்தரம் (உ.ஆ.), மு.கா.நூ. சூ.8
31. க.பா. அறவாணன், அற்றை நாட்காதலும் வீரமும், ப.103
32. தாங்கால் முடக் கொற்றனார், அகம்.பா.48–23
33. தாயங்கண்ணனார் மேலது,பா. 213:12
34. நல்லந்துவனார், கலித். பா.181:4
35. மேலது, பா.119:1–2
36. மேலது, பா.120 :1–3
37. மேலது, பா.130 :18–19
38. திருவள்ளுவர், திருக்குறள், 1227
39. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், கானல்வரி, பா.40
40. வாயிலான் தேவன், குறுந்.பா.103:4–6
41. நெய்தல் கார்க்கியார், மேலது, பா.55
42. இளம்பூதனார், குறுந்.பா.334
43. அம்மூவனார், ஐங். பா.141
44. ஆலம்பேசி சாத்தனார், நற்.பா.152:4–6
45. உலோச்சன் , குறுந். பா.248
46. அம்மூவனார், ஐங். பாடல் 107
47. நெய்தல் தத்தனார், நற். பா.49 :1–4
48. பேரிசாத்தனார், மேலது, பா.67 :1–2
49. எழூஉப்பன்றி நாகன் குமரனார், அகம்.பா. 240 :4–7

50. நல்லந்துவனார், கலி., பா. 127:5–7

51. மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார், அகம்.பா.170

52. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மேலது, பா. 320:11–14

53. நல்லந்துவனார், கலித். பா.131 :1–5

54. நக்கீரனார், அகம். பா.120: 4–6

55. ஔவையார், நற். பா. 187

56. மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்வேரி சாத்தனார், மேலது, பா.338 :1–4

57. மினைகிழான் நல்வேட்டன், குறுந்.பா. 341

58. கச்சிப்பேட்டு நன்னாகையார், மேலது, பா.197

59. மோரிகண்ணத்தனார், நற்., பா124

60. நல்லந்துவனார், கலித். பா.73 :20– 21

61. ஆ.பெ.இ., நற்.பா. 166–10

62. கபிலர், அகம்.பா.128 : 3–4

63. அம்மூவனார், ஐங்.பா.184 :3–4

64. உலோச்சனார், அகம்.பா.210 :1–3

65. கல்பொரு சிறுநுரையார், குறுந்.பா.290

66. நல்லந்துவனார், கலித். பா.123:3–4

67. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), மு.கா.நூல்., சூ.14

68. இளம்பூரணர், (உ.ஆ.), தொல்.பொருள்.அகத். ப.141

69. ஆ.சிவலிங்கனார், தொல்காப்பிய உரைவளம், அகத். ப.117

70. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.பொருள், அகத். ப.177

71. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), மு.கா.நூல். சூ.21

72. மேலது, சூ.15

73. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப.32

74. தமிழண்ணல், சங்க மரபும் மாற்றமும், ப.36

75. குழழிஞாழலார் நப்பசலையார், அகம்.பா.160 :15–18

76. நல்லந்துவனார் , கலித். பா.145:24–25

77. மேலது, பா.150 :6–8

78. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார், நற். பா. 369 :4–6

79. அம்மூவனார் ஐங். பா.116

80. நல்லந்துவனார் கலித். பா.119 :10–16

81. மேலது, பா.120 :9–10

82. மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார், அகம்.பா.80:1–3

83. நக்கீரனார், மேலது, பா.120 : 3–5

84. உலோச்சனார், மேலது, பா.300 :20–23

# கருப்பொருளமைவு

## 3.0. முன்னுரை

முதற்பொருளான நிலத்தில் கருக்கொண்ட பொருள் கருப்பொருளாகும். நிலத்தின் சூழ்நிலை, வாழும் மனிதர்கள், அவர்களின் தொழில்கள், குடியிருப்புகள், அந்நிலத்தின் விளைச்சல்கள், வாழும் உயிரினங்கள், விலங்குகள், பறவைகள் மற்றும் பிற உயிரினங்கள் மனிதவழிபாடு, மரம், செடி, மலர், நீர்நிலைகள் என்ற இயற்கையின் செழிப்புகளைச் சுட்டுவதும் கருப்பொருள்களின் முக்கியக் கருதுகோளாகும். இத்தகைய கருப்பொருளின்றி மனிதன் தன்வாழ்வினை முழுமைப்படுத்துதல் என்பது இயலாத ஒன்றாகும். அதுபோன்று இலக்கியத்தில் உயிரோட்டத்தைக் கொடுப்பதற்கு இன்றியமையாத உத்தியாக அமைவதும் இக்கருபொருள்களாகும். நெய்தல்திணை அடிப்படையில் பகுக்கப்பட்டுள்ள இக்கருப்பொருள்களின் அமைவினைப் பற்றியும் அகமாந்தர்களின் கருத்துப் புலப்பாட்டிற்கு உயிரோட்டமாக இருப்பதைப் பற்றியும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1. கருப்பொருள்விளக்கம்

முதற்பொருளாகிய நிலமும் காலமும் பற்றித் தோன்றி இயங்கும் இயற்கை, செயற்கைப் பொருள்கள் அனைத்தும் கருப்பொருள்கள் எனப்படும். கரு என்பதற்கு கருப்பம், முட்டைக்கரு, உடம்பு, குழந்தை, குட்டி, உட்பொருள் அடிப்படை என்று பலவகையில் பொருள்கூறுவர். ஓர் உயிர் உருவாவதற்கு கரு எத்தனை முக்கியமோ அதனைப் போன்று மக்களின் வாழ்க்கை உருவாவதற்குக் கருப்பொருள் முதன்மையானதாக அமைகின்றன. மக்களின் ஒழுகலாறுகள் நடைபெறுவதற்கு அடிப்படைக் காரணமாக அமைவதால் கருப்பொருள் என்று பெயர் பெற்றது. ‘‘கருப்பொருளே உரிப்பொருளுக்கு அடிக்கல் உரிப்பொருள் கருப்பொருள் மேல் கட்டப்பட்ட கட்டடமே’’[1] என்கிறார் க.ப.அறவாணன்.

### 3.1.1. கருப்பொருளின் முக்கியத்துவம்

கருப்பொருளின் முக்கியத்துவத்தை, ‘‘அந்நிலகாலவியல்பிற்கேற்பச் செழித்து ஓங்கும் மரம், செடி, கொடி, மலர் போன்றன இயற்கையின் இயல்பாக

பருவகால மாற்றவிளைவுகள் போன்ற இயற்கையின் கூறுகள் என ஒரு பெரிய உலகமே காணப்படுகிறது. இவ்வகைப் பொருள்கள் மனிதனின் வினை நிகழ்ச்சிக்குத் துணை போவதனாலும் மேற்கூறிய நிலம் பொழுதென்னும் இரண்டின் இயைபினால் தோன்றுவனவாதலும், படைக்கப்பெறும் மானிட நிகழ்ச்சியை விளக்குவனவாதலும், படைக்கப்பெறும் மானிட நிகழ்ச்சியை விளக்குதற்கு உரிய வாயில்களாதலாலும் இவற்றைக் கருப்பொருள்கள் என்று கூறுவர்''[2] என்கிறார் அ.அ.மணவாளன்.

மக்களின் வாழ்வாதரங்களில் அடிப்படையானது கருப்பொருள். ''நிலம் வெவ்வேறு பட்ட பருவச் சூழல்களுக்கு ஏற்ற மாற்றங்களை உடையது. நிலமும் பொழுதும் இயைந்த இயைவில் ஏற்படும் சூழல் குறிப்பிட்ட தாவரங்கள் வளருவதற்கும் குறிப்பிட்ட வகை விலங்குகள் வாழ்வதற்குமான வாய்ப்பானதாக அமைகின்றது. இந்த இயற்கைச் சூழலைப் பயன்கொண்டு மக்கள் தங்களுக்குரிய வாழ்வியல் ஆதாரங்களைக் கட்டமைத்துக் கொள்ளும் இயல்புடையவராக உள்ளனர். தெய்வம், யாழ், பண் போன்றவை அவ்வவ் நிலச் சூழலுக்கு ஏற்பப் படைத்துக் கொள்ளப்பட்டவையாக உள்ளன''[3] என்று பெ.மாதையன் அவர்கள் கருப்பொருள்களின் முக்கியத்துவத்தைக் குறிப்பிடுகிறார்.

### 3.2. தமிழிலக்கணங்களில் கருப்பொருள்

கருப்பொருளாவது இடத்தினும் காலத்தினும் தோன்றும் பொருள் ஆகும். இளம்பூரணரின் கருத்துப்படி கருப்பொருள் என்பது நிலம். அந்நிலத்திற்கான பெரும்பான்மையாக நிலவும் காலநிலை ஆகியவற்றால் தோன்றும் என்பது விளங்கும்.

''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப''[4]

என்று எண்வகைக் கருப்பொருள்களின் பட்டியலைத் தருகிறது தொல்காப்பியம்.

"மீனே கடல்பனி கொண்கன் றிமிலம் விளரிநிலாக்

கானேதரும் புன்னை கண்டலன்னஞ்சுறாக் காதலுப்பு

வானோர் வருணன் முதலைநுளைய ரிரங்கல்கைதை

தேனேதருமொழி யாயந்திநெய்த றெளிந்தறியே"[5]

என்று வீரசோழியமும் நெய்தல்நிலக் கருப்பொருள்களை அடையாளப்படுத்துகின்றன.

"ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு

ஊர்நீர் பூ மரம் உணாப்பறை யாழ்பண்

தொழில் எனக் கரு ஈர்ரெழு வகைத்தாகும்"[6]

என்று நம்பியகப்பொருளும்,

"தெய்வம்செல்வர் சேர்குடியுள் விலங்கு

பூ நீர் ஊர் மரம் உணாப்பறை யாழ்பண்

தொழில் எனக் கரு ஈர்எழு வகைத்தே"[7]

என்று தொன்னூல் விளக்கமும்,

"தெய்வம் மானிடம் செய்தி உணவொடு

எய்திய இசைவிலங்கு இன்ன பிறவும்

பொய்தீர் கருவெனப் புகன்றனர் கொளலே"[8]

என்று தமிழ்நெறி விளக்கமும் கருப்பொருளைக் குறிப்பிடுகின்றன. தொல்காப்பியர் 'அவ்வகைப் பிறவும்' எனக் கூறிச் செல்வதைப் பின்வந்த இலக்கண ஆசிரியர்கள் உயர்ந்தோர், அல்லோர், பூ, ஊர், நீர், பண் ஆகியவற்றையும் சேர்த்துக் கொண்டனர். இவற்றிலிருந்து தெய்வம், உயர்ந்தோர், தாழ்ந்தோர், பறவை, விலங்கு, ஊர், நீர், மரம், பூ, உணவு, பறை, யாழ், பண், தொழில் என்ற பதினான்கும் கருப்பொருள்களாக அமைகின்றன.

| வ. எண் | கருப்பொருள்கள் | தொல்காப்பியம் | இறையனார் அகப்பொருள் | வீரசோழியம் | நம்பியகப் பொருள் | தமிழ்நெறி விளக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 1 | தெய்வம் | வருணன் | வருணன் | வருணன் | வருணன் | வருணன் |
| 2 | உணவு | உப்பு, மீன் விலைப்பொருட்கள் | மீன்விலைப் பொருட்கள் | மீன் | மீன் உப்பு விற்று பெற்றப் பொருட்கள் | விலைக்கோள் |
| 3 | மா | கரா, சுறா | சுறா, முதலை | திமிலம், சுறா, முதலை | சுறாமீன் | கராம் |
| 4 | மரம் | புன்னை, கைதை | புன்னை, ஞாழல் | புன்னை, கண்டல் | புன்னை, கண்டல், ஞாழல் | – |
| 5 | புள் | கடற்காக்கை | அன்னம், அன்றில் | அன்னம் | கடற்காகம் | கம்புள் |
| 6 | பறை | நாவாய்ப்பறை | மீன்கோட்பறை | – | மீன்கோட்பறை, நாவாய் பறை | மழப்பறை |
| 7 | செய்தி | மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல் | மீன்விற்றல் உப்புவிற்றல் | – | மீன்பிடித்தல், உப்பு மடுவிற்றல், மீன் | திரைக்கடல் சேறல் |
| 8 | யாழ் | செவ்வழியாழ் | விளரியாழ் | விளரி | உணக்கல், விளரியாழ் செவ்வழிப்பண் | செவ்வழி |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 9 | பூ | நெய்தல் | நெய்தல், வெள்ளிதழ் கைதை | கைதை | நெய்தல், தாழை, முண்டகம், அடம்பம் | கைதை |
| 10 | நீர் | கேணி, கடல், நீர் | – | – | உவர் நீர்க்கேணி | – |
| 11 | தலைமகன் | – | துறைவன், கொண்கன் சேர்ப்பன் | கொண்கன் | சேர்ப்பன், புலம்பன் | சேர்ப்பன் |
| 12 | தலைமகள் | – | நுளைச்சி, பரத்தி | – | பரத்தி, நுளைச்சி | – |
| 13 | ஊர் | – | பட்டினம், பாக்கம் | – | பட்டினம், பாக்கம் | – |
| 14 | மக்கட்பெயர் | – | பரதர், பரத்தியர் | நுளையர் | நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர் | பரதவர் |

தமிழ் இலக்கண நூல்களில் தொல்காப்பியத்தை தவிர பிற இலக்கண நூல்கள் கருப்பொருள்களை பதினான்கு வகைகளாகப் பாகுபடுத்தியுள்ளன. இந்நூல்களில் கூறப்பட்டுள்ள கருப்பொருள்களை ஒருங்கிணைத்துப் பார்க்கையில் ஒரு வளர்ச்சி நிலையைக் காணமுடிகிறது.

உரிப்பொருளை நேரடியாகச் சொல்ல முடியாவிடத்து கருப்பொருளின் மேல் ஏற்றிச் சொல்லுதலும் இக்கருப்பொருளின் பின்புலத்தில் உரிப்பொருளைச் சிறப்பித்துப் பாடுதலும் உண்டு. தலைமகனின் அகவுணர்வுகளையும் போராட்டங்களையும் வெளிப்படுத்தும் சூழலியல் திறன் வாய்ந்த இக்கருப்பொருள்களால் அகப்பாடல்கள் பொருட்செறிவும் கற்பனை வளமும் நிறைந்து காணப்படுவதைச் சங்கப்பாடல்கள் உணர்த்துகின்றன.

நெய்தல் திணைக்குரிய கருப்பொருள்கள் இவையிவையெனத் தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. இதற்குப்பின் தோன்றிய இலக்கண நூல்கள் மற்றும் உரையாசிரியர்கள் என இந்நிலத்திற்குரித்தான கருப்பொருட்களை அடையாளப்படுத்தியுள்ளனர். கருப்பொருள்கள் என்பன. “இந்நிலைக்களத்தே நிகழும் நிகழ்ச்சியில் பங்கு கொள்ளும் மனிதன், அவனது தொழில், அதனால் விளையும் பொருட்கள், அதற்குத்துணை போகும் அல்லது தொல்லைதரும் விலங்குகள், பறவைகள், பிற உயிரினங்கள், அவனை மருட்டி நின்று வழிபாடு கொள்ளும் பிற மீவியற்கைப் பொருட்கள் என்னும் உயிர்க்குலம். அந்நில காலவியற்பிற்கேற்பச் செழித்து ஓங்கும் மரம், செடி, கொடி, மலர் போன்றன”[9] ஆகும்.

### 3.2.1. தெய்வம்

கருப்பொருட்களில் முதன்மையாகச் சுட்டப்படுவது தெய்வமாகும். தலைவன், நீரையுடைய பெரிதாகிய தெய்வத்தை நோக்கி உன்னைப் பிரியேன் என்று கூறி, உன்னுடைய அழகான மென்மையான தோள்களைக் சூடினான். இன்றுவரை உனக்கு அவன் அருள் செய்யவில்லை. நான் அவனிடம் சென்று உன் அறிய வருத்தத்தைத் தீர்ப்பேன் என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள். இதனை,

“பெருங்கடற்தெய்வம் நீர் நோக்கித் தெளித்து, என்

திருந்திழை மென் தோள் மணந்தவன் செய்த

அருந்துயர் நீக்கவேன் போல் மன்”[10]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. இப்பாடலடிகள் நெய்தல் கலியில் தெய்வத்தைக் குறித்தது. கடற்தெய்வம் என்பதனால் வருணன் பெறப்பட்டது. மக்களுக்குரியவன் அவனே! என அன்னை அறியினும் அறிக! அலர் கூறும் வாயினையுடைய அழகியச் சேரிப் பெண்டிர் கேட்பினும் கேட்க! இதனைத் தவிரப் பிறிதொன்றும் இல்லை என்பதை நீ அறிந்து தெளியும் வண்ணம், வளைந்த சுழிகள் பொருந்திய புகாரிலுள்ள தெய்வத்தை நோக்கி அதன் முன் உனக்கு கடிய சூளும் நான் செய்து தருவேன் எனத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள். இதனை,

“அன்னை அறியினும் அறிக! அலர்வாய்

அம்மென் சேரி கேட்டினும், கேட்கப்

பிறிது ஒன்று இன்மை அறியக் கூறிக்

கொடுஞ் சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்

கடுஞ் சூள் தருகுவன் நினக்கே! கானல்”[11]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. இப்பாடலடிகள் தெய்வத்தைக் குறித்தது. புகாஅர்த் தெய்வம் நோக்கி என்பதனால் நெய்தல்நிலத்தெய்வமாகிய வருணன் பெறப்பட்டது.

### 3.2.1.1. சுறாகோடு வழிபாடு

கடலில் உள்ள மீனினங்களுள் மிகவும் வலிமை வாய்ந்தது சுறாமீன் ஆகும். இது விலங்கினத்திற்கு மட்டுமல்லாது மனித இனத்திற்கும் பெரும் துன்பத்தைத் தரக்கூடியதாகும். இதனைப் பிடிப்பதற்கென்று தனிவலைகளும், கொடுந்திமில்களும் பயன்படுத்தப்பட்டுள்ளதைச் சங்கப்பாடல்கள் உணர்த்துகின்றன. சுறாவின் தலையில்

இருமருங்கும் நீண்ட கூரிய பற்கள் உள்ள கொம்புகளும் காணப்படுகின்றன. இதனை,

"முடிவலை முகந்த முடங்கு இறாப் பறவைப்
படுபுள் ஓம்பலின் பகல் மாய்ந்தன்றே
கோட்டு மீன் எறிந்த உவகையர் வேட்டம் மடிந்து"[12]

"கோட்டு மீன் வழங்கும் வேட்டம் மரபரப்பின்
வெள் இறாக் கனவும் நள்ளென் யாமத்து"[13]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும்,

"யிருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப
எழில் பயம் குன்றிய சிறை அழிதொழில்"[14]

என்னும் உலோச்சனாரின் பாடலடிகள் கழித்துறை முகத்தே வலிய சுறாமீன், குதிரை உடம்பில் பொருந்தத்தாக்கியதால் தேர்ப்பாகன் செலவினை நிறுத்திய செய்தியைக் காட்சிப்படுத்துகின்றது. மேலும் தலைவியின் தந்தை சுறாவினால் தாக்குதலுக்கு உள்ளாகி, புண்பட்டு வீட்டில் ஓய்வு எடுத்த பின்பு, புண்தணிந்த நிலையில் மீண்டும் மீன்வேட்டத்துக்குச் சென்ற நிகழ்வினை,

"வயச் சுறா எறிந்த புண் தணிந்து எந்தையும்
நீல் நிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்"[15]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. நெய்தல்நிலமக்கள் சுறாவின் தாக்குதலில் இருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்கும் அதன்மேல் உள்ள அச்சத்தைப் போக்கிக் கொள்வதற்கும், சுறாமீனின் கொம்பினை நட்டு வழிபாடு செய்துள்ளனர். இதனை,

“சினைச்சுறவின் கோடுநட்டு

மனைச் சேர்த்திய வல்லணங்கினான்”[16]

எனவரும் பாடலடிகள் தெளிவிக்கின்றன.

### 3.2.1.2. நீர்த்துறை வழிபாடு

நெய்தல் நிலமக்கள் நீர்த்துறையின் கண்ணும் தெய்வங்கள் உறைவதாக நம்பிக்கை கொண்டிருந்தனர். ஏனெனில் இவர்கள் அடிக்கடி கடலில் மீன்பிடிக்கச் செல்லும்போது புயல், மழை, கடல் கொந்தளிப்பு போன்ற நிகழ்வுகளின் போது ஏற்பட்ட அனுபவத்தின் காரணமாகவும், பயத்தின் காரணமாகவும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு தெய்வத்தை வணங்களாயினர். இதனை, அணங்கு, தெய்வம் என்ற பல சொற்களால் குறித்துள்ளனர்.

“பெருங்கடற் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ

இருங்கழி மருங்கு நிலைபெற்றனை யோ”[17]

“அணங்குடைப் பணித்துறை கைதொழுதேத்தி

யாயும் ஆயருமா டயரு நீயும்

தேம்பாய் ஓதி திருநுதல் நீவித்”[18]

“கடல் கெழு செல்விகரை நின்றாங்கு

நீயே கானல் ஒழிய யானே”[19]

போன்ற பாடலடிகள் நெய்தல் நில மக்கள் குடும்பத்தோடு சென்று துறையின் கண் வீற்றிருக்கும் தெய்வத்தை வழிபட்ட நிகழ்வுகளையும் அணங்கு, தெய்வங்களிடம் சூளுரைத்த செய்திகளையும் சுட்டுகின்றன.

### 3.2.1.3. மரபுவழிபாடு

விலங்குகளின் கொம்புகள், நீர்த்துறைகள் மட்டுமின்றி மரங்களிலும் தெய்வங்கள் உறையும் என்ற நம்பிக்கை இம்மக்களிடையே இருந்துள்ளன.

அதனால்தான் பரதவர்கள் பனைமரத்தில் தெய்வம் உறைந்துள்ளதாக எண்ணி வழிபாடு செய்துள்ளனர். இதனை,

> ‘‘தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை
> மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
> துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்பொறும்’’[20]

என்னும் பாடலடிகள் பழமைத்தாகிய கடவுள் சேர்ந்து உறையும் ஊர் மன்றத்தின்கண் நிற்கும் பருத்த அடியையுடைய பனைமரத்தில் தெய்வம் உறைந்திருக்கிற கருத்தினை மெய்ப்பிக்கிறது. நெய்தல்நில மக்களின் வழிபாட்டு முறையானது இயற்கைச் சார்ந்த நிலையில் காணப்படுகின்றன.

### 3.3. மக்கள்

சங்கயிலக்கிய ஐந்திணைப் பாடல்களிலும் அந்நிலங்களுக்குரிய மக்களை குடிமக்கள், தலைமக்கள் என்ற நிலையில் பாடப்பட்டுள்ளன.

#### 3.3.1. குடிமக்கள்

கடற்கரைச் சோலையில் உள்ள சிறுகுடியிலிருந்து கடலுக்குள் மீன் பிடிக்கச் செல்லும் பரதவர்கள் நீலநிறப் புன்னை மர நிழலிலே தங்குவர். இதனை,

> ‘‘கானல்அம்சிறுகுடிக் கடல் மேம்பரதவர்
> நீல்நிறப் புன்னைக் கொழு நிழல் அசைஇ
> தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி’’[21]

என்னும் பாடலடிகள் நெய்தல் நிலத்திற்குரிய குடிமக்களை பரதவர் என குறிப்பிடுகிறது. சங்கயிலக்கிய நெய்தற்பாடல்களில் கடலில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், கடலில் மூழ்கி முத்து எடுத்தல், சங்கறுத்தல், கடற்மேல் சென்று வாணிகம் மேற்கொள்ளுதல் போன்ற தொழில்களைச் செய்த அனைவரையும் பரதவர் என்ற பொதுச் சொல்லால் அழைத்துள்ளனர்.

**3.3.2. தலைமக்கள்**

நெய்தல் நிலத் தலைமக்களை கொண்கன், துறைவன், சேர்ப்பன், புலம்பன் என்று அழைத்துள்ளனர். இப்பெயர்கள் அனைத்தும் முதற்பொருளான நிலத்தை அடையாளப்படுத்தும் வகையில் உள்ளன.

**3.3.3. கொண்கன்**

நெய்தல் திணைப் பாடல்களில் ‘கொண்கன்’ என்ற சொல்லால் அதிகமாக நெய்தல் நிலத்திற்குரிமையுடைய தலைவனைக் குறிக்க,

“பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய
திணைதொறு மரீஇய திணை நிலைபெயரே”[22]

என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர். நெய்தற்கு நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர், ஏனைப்பெண் பெயர் வருமேனும் உணர்க எனக் கூறியுள்ளார். மேலும் இனி, உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன. பெயர்ப்பெயரும் நாடாட்சி பற்றி வரும் பெயருமாம்” என்று தொடங்கி, நெய்தற்குக் கொண்கன் துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன், தலைவி பெயர் வந்துழிக் காண்க என்று கூறுகின்றார். மேலும்,

இளம்பூரணர் இச்சூத்திரத்திற்கு உரை கூறுகையில், “குலப்பெயரும் தொழிற்பெயரும் என அவ்விரு வகைப்படும். திணைதொறும் மருவிப்போந்த திணை நிலைப் பெயர் என்றுரைத்துப் பின்னும், திணைநிலைப் பெயர் என்றதனால் அப்பெயருடையார் பிற நிலத்து இலர் என்று கொள்ளப்படும். அதனானே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை ஒழித்து நிலம் பற்றி வாழும். கீழ்மக்களையே குறித்து ஓதினார் என்று கொள்க”[23] என்று உரை விளக்கம் தருகின்றார்.

“சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும அல்குல் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவர் அளத்தியர்”[24]

என்று நம்பியகப் பொருள் நெய்தல்நில மக்களைக் குறிப்பிடுகிறது.

திவாகர நிகண்டு,

“பரதவர் நுளையர் கடலர் வலையர்
கலவர் திமிலர்”[25]

என்றும்,

“கொண்கன் துறைவன் மெல்லம் புலம்பன்
தண்கடல் சேர்ப்பன்”[26]

என்று நெய்தல்நிலத் தலைமக்கன் பெயர்களையும்,

“நுளைச்சியர் பரத்தியர்”[27]

என்று நெய்தல் நிலப் பெண்களின் பெயர்களையும் குறிப்பிடுகிறது.

பிங்கலநிகண்டு, நெய்தல் நில மக்களைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

“மெல்லம் புலம்பன் தண்கடற் சேர்ப்பன்
துறைவன் கொண்கன் நெய்தல் தலைமகன்”[28]

என்றும்,

“கடலர் திமிலர் சலவர் நுளையர்
பரதவர் வலையர் அந்நில மாக்கள்”[29]

என்றும் குறிப்பிடுகிறது. மேற்கண்டத் தரவுகளைக் கொண்டு பார்க்கையில் நெய்தல்நில மக்களின் பெயர்களாக நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர், நுளைச்சியர் என்றும் நெய்தல்நிலத் தலைமக்களின் பெயர்களாக கொண்கன். துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன், புலம்பன் என்றும்

தொல்காப்பிய உரையாசிரியர்களும், இலக்கண நூல்களும் குறிப்பிட்டுள்ளனர். குறிக்கும் வகையில் உள்ளன. இதனை,

''நெய்கனி பசுங்காய் தூங்கும் துறைவனை

இனி அறிந் திசினே கொண்கன் ஆகுதல்''[30]

என வரும் பாடலடிகளில் உள்ள கொண்கன் என்பது கணவன் என்ற பொருளைத் தருவதாக உள்ளது.

''வளைபடு முத்தம் பரதவர் பகரும்

கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்''[31]

இப்பாடலடிகளில் தலைவியின் தந்தையைக் குறிக்கும் வகையில் கொண்கன் பொருளுரைக்கப்படுகிறது.

**3.3.4. சேர்ப்பன்**

சேர்ப்பன் என்ற சொல்லாடலும் நெய்தல் நிலத்திற்குரிய தலைவனை குறிக்கும் வகையில் உள்ளன.

கடலும் நிலமும் சேரும் இடம் 'சேர்ப்பு' என்பதால் அதற்கு உரிமையுடையவன் சேர்ப்பன் என்று கருத இடமுள்ளது. இதனை,

''தூங்கல் அம்பித் தூவல்அம் சேர்ப்பின்

கடுவெயில் கொதித்த கல்விளை உப்பு''[32]

என்ற பாடலடிகளும்,

''கருங்கால் வெண்குருகு வெருஉம்

இருங்கழிச் சேர்ப்பின்தம் உறைவினூர்க்கே''[33]

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

### 3.3.5. துறைவன்

துறைவன் என்பது கடற்கரையில் உள்ளத் துறைமுகத்திற்கு உரிமையுடையவன் என்ற பொருளில் வந்துள்ளன. இதனை,

''அம்கண் அரில் வலை உணக்கும் துறைவனொடு''[34]

''தண்ணம் துறைவன் முன்நாள், நம்மொடு

பாசடைக்கலித்த கணைக்கால் நெய்தல்''[35]

என்ற பாடலடிகள் உறுதிபடுத்துகின்றன. மேலும்

''குறுங்கணவ்வலைப் பயம்பா ராட்டிக்

கொழுங்க ணயிலை பகுக்குந் துறைவன்''[36]

என்னும் பாடலடிகளில் மீன்களை அதிகமாகப் பிடித்து பரதவர்களுக்கு பகுத்துக் கொடுத்த தன்மையினை வெளிப்படுத்துகின்றன. இச்செயலினால் கடல்துறைக்கு இவன் தலைவனாகக் கருதலாம்.

### 3.3.6. புலம்பன்

புலம்பன் என்பது கடற்கரைப் பகுதியில் ஓயாது அலைகள் எழுந்து புலம்பிக் கொண்டு இருக்கும் தன்மையின் அடிப்படையில் இவனை புலம்பன் என்று அழைத்துள்ளமைக்கு வாய்ப்பு உண்டு. இதனை,

''ஆர்கலி யாணர்த்து ஆயினும், தேர் கெழு

மெல்லம் புலம்பன் பிரியின் புல்லெனப்

புலம்பு ஆகின்றே''[37]

என்ற பாடலடிகளைச் சான்றாகக் குறிப்பிடலாம். மேலும்,

''மெல்லம் புலம்பன் பிரிந்தென

பல் இதழ் உண்கண் பாடு ஒல்லாவே''[38]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. நெய்தல் நிலத் தலைவர்கள் செல்வவளம் மிக்கவர்களாக நெய்தல் திணைப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

நெய்தல் நிலத்தலைவர்கள், தலைவி தங்கியிருக்கும் ஊருக்கு அருகாமையிலிருந்து வந்து செல்வதாகப் பாடல்களில் காட்டப்பட்டுள்ளது. இத்தலைவர்கள் உள்ஊரைச் சார்ந்தவர்கள் என்பது புலப்படுகிறது. மேலும் தலைவன் ஒரு சில பாடல்களில் தலைவிக்காக நாட்டையே வழங்கக் கூடிய செல்வவளம் மிக்கவனாகப் பாடப்பட்டுள்ளன. இதனை,

"எக்கர் ஞாழல் மலரின் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கினன் நாடே"[39]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும்,

"தண்கடற்சேர்ப்பன் பிரிந்தென– பண்டையின்
கடும்பகல் வருதி– கையறு மாலை!
கொடுங்கழி நெய்தலும் கூம்பக்
காலைவரினும் களைஞரோ இலரே"[40]

என்ற பாடலடிகள் நானில வளமுடையவனாகக் காட்சிப்படுத்துகின்றன. இவ்வாறாக நெய்தல் நிலத்திற்குரிய தலைவர்கள் செல்வவளம் மிக்க நாட்டை ஆளக்கூடிய துறைக்கு உரியவர்களாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

### 3.4. நெய்தல்நில மக்களின் உணவுகள்

கடலும் கடல் சார்ந்த பகுதியினை வாழிடமாகக் கொண்ட நெய்தல்நில மக்களான பரதவர்கள் அந்நிலம் சார்ந்த உற்பத்திப் பொருட்களாக அல்லது கடல்பாடு வழி கிடைத்த உணவுப்பொருட்களாக இருந்துள்ளன.

### 3.4.1. மீன்

நெய்தல் நில மக்களின் முதன்மையான உணவுப் பொருள்மீன் ஆகும். பரதவர்களின் தொழில் கடற்மேல் சென்று மீன் வேட்டம் செய்வதினால் உணவில், மீன் இன்றியமையாதவை எனலாம். மீனினைக் குழம்பு வைத்தும், சுட்டும் உண்டிருக்கின்றனர். இதனை,

''கொழுமீன் சுடு புகை மறுகினுள் மயங்கி
சிறுவீஞாழல் துறையுமார் இனிதே''[41]

என்னும் பாடலடிகளில் மீனினைச் சுட்டமையால் உண்டாகிய புலால் நாற்றம் அப்பகுதி முழுவதும் பரவிய நிலையினைக் குறிப்பிடுகிறது. இதிலிருந்து பரதவ மக்கள் மீனைச் சுட்டு உண்டமையை அறியமுடிகிறது.

### 3.4.2. உணங்கல்

பரதவ இன மக்கள் பிடித்துவந்த பலவகையான மீனினங்களில் சிலவற்றை உணங்கல் செய்து சேமித்து வைத்துள்ளனர். இதனை,

''பெருநீர் அழுவத்து எந்தை தந்த
கொழுமீன் உணங்கற் படுபுள் ஓப்பி
எக்கர்ப் புன்னை இன்நிழல் அசைஇ''[42]

''பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கலின்
இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு''[43]

''கானல் இட்ட காவற்குப்பை
புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி
மடநோக்கி ஆயமொடு உடன் ஊர்பு ஏறி''[44]

என்ற பாடலடிகள் பரதவர்கள் கொழுமீன், இறால், சுறா போன்ற மீனினங்களை உலர்த்தி, பின்பு அதனைக் காயவைத்துக் கருவாடாகப் பயன்படுத்தியுள்ளனர்.

### 3.4.3. நெல்சோறு

நெல்விளையும் வேளாண் பகுதி மருதநிலமாகும். நெய்தல்நிலமக்கள் நெல்சோறு உண்டமைக்குக் காரணம் இவர்கள் நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பிற்கு மாற்றாக மருதநிலத்தில் விளைந்த நெல்லினைப் பண்ட மாற்றாகப் பெற்றுமையே ஆகும்.

“நெடுந்திமிற் றொழிலொடு வைகிய தந்தைக்
குப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோ
றயிலை துழந்த வம்புளிச் சொரிந்து
கொழுமீன் றடியொடு குறுமகள் கொடுக்கும்”[45]

என்ற பாடலடிகளில் பண்டமாற்றாகப் பெற்ற நெல்லினைக் குற்றி அரிசியாக்கிப் பின் சோறு செய்து இதனோடு புளி விட்டாக்கிய அயிலை மீன் கறியோடு கொழுத்த மீன் கருவாட்டையும் சேர்த்து குழம்பு வைத்து உண்டுள்ளச் செய்தியினைக் குறிப்பிடுகிறது.

### 3.4.4. தயிர் உணவு

மீனைவிற்று அதற்குப் பதிலாகப் பெற்ற நெல்மாவில் தயிர்விட்டு செய்த மிதவையினை உணவாக உட்கொட்டுள்ளனர். இவ்உணவினைத் தலைவனுக்குத் தருவதாகத் தோழிக் கூறுகின்றாள். இதனை,

“பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்
தயிர்மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே”[46]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றது.

### 3.4.5. தேறல்

சங்ககாலத்தில் அரசர் முதல் குடிமக்கள் வரை பலரும் கள் அருந்தும் பழக்கம் உடையவர்களாய் இருந்துள்ளனர். கள்ளானது தென்னை, பனை ஆகிய மரங்களில் இருந்து பெறப்பட்டிருக்கிறது. இதனையே தேறல் என்று அழைத்துள்ளனர். நெய்தல் நில மக்கள் பனைமரத்திலிருந்து எடுக்கப்பட்ட தேறலை உண்டு மகிழ்ந்ததை,

''நடுநாள் வேட்டம் போகி வைகறைக்
கடல்மீன் தந்து கானற் குவைஇ
ஓங்கு இரும் புன்னை வரிநிழல் இருந்து
தேங்கமழ் தேறல் கிளையொடு மாந்தி''[47]

என்ற பாடலடிகள் பரதவர்கள் கள்ளுண்டு மகிழ்ந்த செய்தியைத் தெளிவுறுத்துகின்றது.

### 3.4.6. நுங்கு

நெய்தல் நில மக்கள் பனை மரத்திலிருந்து விளையக் கூடிய நுங்கினை உணவாக உட்கொண்டுள்ளனர். இதனை,

''மனை அழுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்
துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்
பனைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்''[48]

என்ற பாடலடிகள் சின்னஞ்சிறு குழந்தைகள் நுங்கினை உண்ட செய்தியைக் காட்சிப்படுத்துகிறது.

### 3.4.7. பால்

சங்ககாலத்தில் பால் ஒரு முக்கிய உணவுப் பொருளாக மக்கள் உட்கொண்டுள்ளனர். நெய்தல்நில மக்களிடம் பெரும்பாலும் வசதியான

குடும்பங்களில் மட்டும் பால் உணவுப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

பெருங்கடற்கரையானது சிறுவெண்காக்கை

துறைபடி அம்பி அகமனை ஈனும்

தண்ணம் துறைவன் நல்சின்

ஒண் நுதல் அரிவை பால் ஆரும்மே''[49]

என்ற பாடல் தலைவன் தண்ணளி செய்தால் மட்டுமே தலைவி பால் அருந்துவாள் என்று தோழிகூறுகின்றாள். நெய்தல்நில மக்களின் உணவுகளையும் உண்ணும் முறைகளையும் காணும்போது இவர்கள் நெய்தல் நிலத்தில் கிடைத்த உணவினையும் பிற நிலங்களில் கிடைத்த உணவுப் பொருட்களையும் சமைத்து உட்கொண்டுள்ளனர்.

### 3.5.நெய்தல்நில விலங்குகள்

கருப்பொருளில் விலங்கினங்களின் செயல்பாட்டினைக் கொண்டு அந்நில தலைமக்களின் செயல்பாட்டினை உணர்த்துவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

'தெய்வம், உணாவே மாமரம் புட்பறை' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை கூற வந்த நச்சினார்க்கினியர், ''நெய்தற்குமா உமண் பகடு போல்வன, முதலையும் சுறாவும் மீனாதலின் மா வென்றல் மரபன்று''[50] என்கிறார். இளம்பூரணரோ, ''நெய்தற்கு... மா கராவும் சுறவும்''[51] என்கிறார்.

இறையனார் அகப்பொருள் ''நெய்தற்கு மா,சுறாவும், முதலையும்''[52] எனச் சுட்டுகிறது. வீரசோழியம்,

''கானே தரும்புன்னை கண்டலன்னஞ்சுறாக்காதலுப்பு

வானோர் வருணன் முதலை''[53]

என்று நெய்தற்கு விலங்கு சுறா, முதலை என்று குறிப்பிடுகிறது.

“சுறவம் பாக்கம் பெறலரும் பட்டினம்”[54]

நெய்தல் நிலத்திற்கு சுறாமீனை விலங்காக நம்பியகப்பொருள் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் முதலை, சுறா, உமன்பகடு, குதிரை போன்றவற்றை நெய்தல் நிலத்திற்குரிய விலங்குகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

### 3.5.1. சுறா

சுறாமீன் கடலில் வாழும் மீனினங்களில் குறிப்பிடத்தக்கது. ஒருவகைச் சுறா மீன்களின் தலையில் இரண்டு பக்கமும் நீண்ட கூர்மையான பற்கள் உள்ள கொம்புகள் காணப்படும். எனவே இச்சுறாமீன் கோட்டுமீன் என்றும் வாள்சுறா என்றும் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இவை மனிதர்களையும் விலங்குகளையும் தனது கூரிய கொம்பினால் தாக்கும். எனவே எறிசுறா எனப் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளது. சுறா வலிமை வாய்ந்தது என்பதனால் வயச்சுறா என்றும் இது கொல்லும் தன்மை உடையது என்பதால் கோட்டுசுறா மற்றும் கடுஞ்சுறா என்றும் குறிப்பிடப்படுகின்றன. இதனை,

“கோட்டுமீன் வழங்கும் வேட்டம் மடி பரப்பின்”[55]

“வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறை”[56]

“கோட்சுறா கிழிந்த கொடுமுடி நெடுவலை”[57]

“கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்”[58]

“கடுமுரண் எறிசுறா வழங்கும்”[59]

“வயச்சுறா எறிந்த புண் தணிந்து”[60]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.5.2. முதலை

சங்க இலக்கியங்கள் முதலையை கரா என்று குறிப்பிட்டுள்ளன. வளைந்த கால்களையுடைய ஆண் முதலை பிற உயிர்களை அழிக்கும் தன்மையுடையது. இதனை,

''கொடுந்தாள் முதலைக்கோள் வல் ஏற்றை
வழிவழக்கு அறுக்கும் கானல் அம் பெருந்துறை''[61]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. முதலைதான் பெற்றெடுத்த பார்ப்பினை உண்ணும் தன்மை உடையது. இதனை,

''தன் பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலையோடு''[62]

என்ற பாடலடி தெரிவிக்கின்றது. மேலும்

''புலவு நீர் அடைகரை யாமைப் பார்ப்போடு
அலவனும் அளைவயிற் செறிந்தன, கொடுங்கழி''[63]

என்ற பாடலடிகள் தன் குட்டிகளோடு கடலுக்குள் சென்றதையும் காட்சிப்படுத்தியுள்ளது. பெரிய கழிப்பகுதியில் வளைந்த கால்களை உடைய முதலையும் கொம்பினை உடைய சுறாவும் வாழும். இதனை,

''கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்
இருங்கழி இட்டுச் சுரம் நீந்தி இரவின்
வந்தோய்! மன்ற தண்கடல் சேர்ப்ப''[64]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.5.3. உமண்பகடு

உப்பு வண்டியில் பூட்டப்பட்ட எருது உமண்பகடு என நெய்தல்திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. ''சங்க காலத்தில் இடம்விட்டு இடம் பெயர்ந்து, ஊர்

ஊராகத் திரிந்து உப்பு வாணிபம் செய்த ஒரே குடியாக உமணக்குடி காணப்படுகிறது. இக்குடிகளின் முழுநேரத் தொழில் உப்பு வியாபாரம் ஆகும். உப்பங்கழியில் பரதவர் உண்டாக்கிய உப்பை மொத்தமாகத் தங்கள் மாட்டு வண்டிகளில் ஏற்றி ஊர்களில் நெல்லுக்கு மாற்றாக விற்று வாழ்ந்தது அவர்களின் மொத்த வாழ்க்கையாகும்''[65] என ராஜ்கௌதமன் உமணக்குடிகளைப் பற்றியும் உமண்பகடு பற்றியும் குறிப்பிடுகிறார்.

உமணர்கள் வெண்ணிற உப்பை வலிய எருதுகள் பூட்டிய வண்டியில் கொண்டு சென்று அண்டை நாடுகளில் விற்றதை,

''உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ''[66]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.5.4. குதிரை

இலக்கியங்களில் பரி, புரவி எனக் குறிப்பிடப்படுகின்றன. பெரிய உப்பங்கழிகளைக் கொண்ட துறை முகத்தே வலிமை பொருந்திய சுறாமீன் தாக்கி புண்பட்ட காரணத்தினால் குதிரையின் பூட்டவிழ்த்துத் தேர்பாகனும், தேரினை நிறுத்தினான். கழுத்தில் அழகிய மணிகளையுடைய விரைந்தோடும் குதிரைகள் எழுச்சியற்று நடை தளர்ந்து மேற் செல்லாது தங்கின. இதனை,

''இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப
எழில்பயம் குன்றிய சிறை அழிதொழில்
நிரைமணிப் புரவி விரைநடை தவிர''[68]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.5.5.ஆமை

இலக்கியங்கள் யாமை என்று குறிப்பிடுகின்றன. கடல், கழி, நன்னீர் நிலை போன்ற பகுதிகளில் யாமை வாழும். ஆண் யாமைக்கும் பெண்யாமைக்கும் உள்ள அரிய நட்பை குமுழிஞாழலார் நப்பசலையார் அழகுபட கூறியுள்ளார்.

சூழ் கொண்ட யாமை கடற்கரையில் நன்றாகத் தழைத்திருக்கும். அடும்பங் கொடிகளை இழுக்கின்றது. அவற்றை வளைந்த கழியிடத்தில் கொண்டு சேர்க்கின்றன. அங்கே மறைவான இடத்தில் முட்டைகள் இடுகின்றன. அம்முட்டைகள் யானைக் கொம்பினால் செய்த வட்டின் வடிவம் போன்று இருக்கின்றன. அங்கோமுட்டைகளில் புலால் நாற்றம் வீசுகின்றன. குஞ்சுகள் வெளிப்படும் வரைக்கும் அம்முட்டைகளை ஆண் யாமை பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன. இதனை,

''அடும்பு கொடி சிதைய வாங்கிக் கொடுங்கழிக்
குப்பை வெண்மணல் பக்கம் சேர்த்தி
நிறைச்சூழ் யாமை மறைத்து ஈன்று புதைத்த
கோட்டு வட்டு உருவின் புலவு நாறுமுட்டை
பார்ப்பு இடன் ஆகும் அளவை பகுவாய்க்
கணவன் ஓம்பும் கானல் அம் சேர்ப்பன்''

என்ற பாடல் தெரிவிக்கின்றன.

### 3.5.6. அலவன்

இலக்கியங்களில் அலவன் என்றும் ஞெண்டு என்றும் வழங்கப்படுகிற இக்கரைவாழ் உயிரினம் இப்போது நண்டு என்றே வழங்கப்படுகிறது. நண்டு என்னும் சொல் தொல்காப்பியத்தில் கையாளப்பட்டுள்ளது. செவியுணர்வு ஒழிந்த

நான்கு உணர்வும் உள்ள உயிரினங்களைப் பற்றிக் கூறும் பொழுது தொல்காப்பியம்,

“நண்டும் தும்பியும் நான்கறிவினவே”[69]

என்கிறார்.

நெய்தல் திணைப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளவை எல்லாம் கடற்கரையிலும் கழிக்கரையிலும் வளையமைத்து வாழும் நண்டுகள் ஆகும். நண்டுகளுக்குப் பத்து கால்கள் உண்டு. முதலில் உள்ள கால்கள் பெரியதாகவும் வலிமையானதாகவும் இடுக்கி போன்ற கொடுக்கினை உடையதாகவும் காணப்படும். இதனை,

“துறையே! மருங்கின் போகிய மாக்கவை மருப்பின்

இருஞ்சேற்று ஈர் அளை அலவன் நீப்ப”[70]

“நொச்சி மா அரும்பு அன்ன கண்ண

எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொகுதி”[71]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

**3.5.7. சங்குகள்**

கடல், கழி, ஏரி, ஆறு, குளம் போன்ற பகுதிகளில் சங்குகள் வாழும். இதனை சங்க இலக்கியங்களில் வளை, வலம்புரி என்று வழங்கப்பட்டுள்ளன. சங்குகள் பல வகைப்படும். “சங்குகளில் சிறந்தவற்றை இடம்புரி, வம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்னியம் என நால்வகைப்படுத்தி இப்பிஆயிரம் சூழ்ந்து இடம்புரி, இடம்புரி ஆயிரம், வலம்புரி, வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம். சலஞ்சலம் ஆயிரம் சூழ்ந்தது பாஞ்சசண்ணியம்”[72] எனக கலைக்களஞ்சியம் கூறுகின்றது.

சங்குகளில் பல வகையுண்டு. இவற்றில் வலம்புரிச் சங்கே விசேட மானது”[73] என்கிறது அபிதானசிந்தாமணி. வலம்புரி மிக உயர்ந்தது. தூய்மையானது என்பதனை,

‘‘மாசு அறு பொன்னே! வலம்புரிமுத்தே’’[74]

என்று குறிப்பிடுகிறது சிலப்பதிகாரம்.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் திணைமாலையில்,

‘‘பெருங்கடல் வெண்சங்கு காரணமா, பேணாது

இருங்கடல் மூழ்குவார்’’[75]

என்ற அடிகளில் சங்கு என்ற சொல் குறிப்பிடப்படுகின்றது. மேலும் பணிலம் என்ற சொல்லே முழங்குகின்ற சங்கினைக் குறித்துள்ளது. இதனை,

‘‘வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவர்

ஒருதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்’’[76]

‘‘பறைபட பணிலம் ஆர்ப்ப’’[77]

‘‘இருதலைப் பணிலம் ஆர்ப்ப’’[78]

‘‘பணிலம் கலி அவிந்து அடங்க’’[79]

‘‘முரசியம்பின முருடதிர்ந்தன

முறையெழுந்தன பணிலம்’’[80]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவை கடலில் வாழும் சங்குகளே ஆகும். கடலில் வாழும் சங்குகள் அடிக்கடி கரையின் மேல் மேய்ந்து செல்லும் என்பதை,

‘‘வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறை’’[81]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

சங்குகள் மிக வெண்மையாக இருப்பதால் சில சமயம் அன்னங்கள் அவற்றைத்தம் பெடையென மயங்கி மிதிப்பதுண்டு. இதனை,

‘‘அன்னை, வாழி வேண்டு அன்னை! அவர் நாட்டுத்

துதிக்கால் அன்னம் துணைசெத்து மிதிக்கும்

தண்கடல் வளையினும் இலங்கும் இவள்

அம்கலிழ் ஆகம் கண்டிசின் நினைந்தே''[82]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

சங்குகளிலிருந்து பெண்கள் அணியும் அழகிய வளையல்களைச் செய்துள்ளனர். இதனை,

''வலம்புரி உழுத வார் மணல் அடைகரை

இலங்கு கதிர் முத்தம் இருள் கெட இமைக்கும்

துறைகெழு கொண்க, நீ தந்த

அறை புனல் வால் வளை நல்லவோதாமே **?**''[83]

என்னும் பாடல் குறிப்பிடுகிறது.

பாணர்களின் இனிய இசை போன்று வலம்புரிச் சங்கின் முழக்கம் இருந்தது. பரதவர்கள் வலம்புரிச் சங்குகளைக் கடலுக்குள் மூழ்கி ஒன்று திரட்டி எடுத்து வருவர். மேலும் சங்குகள் ஈன்ற முத்துக்களைப் பங்குபோட்டு பகிர்ந்துள்ளனர். இதனை,

''விருந்தினர் பாணர்விளர் இசைகடுப்ப

வலம்புரி வான் கோடு நரலும் இலங்குநீர்த்''[83]

''இலங்கு குரும் பரப்பின் ஏறிசுறா நீக்கி

வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்''[84]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.5.8. முத்துச்சிப்பிகள்

கடலிலே உண்டாகின்ற முத்துசிப்பி என்னும் ஒருவகை கிளிஞ்சல்களில் முத்து உண்டாயிற்று. முக்கியமாக ஆறுகள் கடலில் கலக்கின்ற பகுதிகளில்

முத்துச்சிற்பிகள் அதிகம் உண்டாகின்றன. முத்துக்குப் பாண்டியநாடு பெயர் பெற்றதாகும்.

“முத்து சிப்பியின் உள்ளுடல் மெல்லிய தசையால் ஆனது கடினமானகச் சிறுமண் துகள்களைச் சீரணிக்கச் செய்யும் சக்தி அதற்கில்லை. சிப்பிகளின் வயிற்றில் மண் துகள் புகுந்து கொண்டால் உள்ளுடலில் அதனைச் சுற்றி கடினமான தசை வளரும். அது காலப்போக்கில் கடினமான பொருளாகிவிடும். முத்துச்சிப்பி ஒரு வகை உயிர். ஆகவே உள்ளேபுகுந்த மண் தூளைச் சுற்றிலும் தசை வளர்ந்த போது அதுவே முத்தாகிறது.”[85] மேலும் கற்கள் உட்சென்றதால் உண்டான நோவினால் ஒருவிதப் பசையை அது கல்லின மேல் பூசுகிறது. அதுவே முத்தாகிறது.”[86] என்று அபிதானசிந்தாமணி குறிப்பிடுகிறது.

கடலில் உள்ள முத்துச் சிப்பிகளையும் சங்குகளையும் மூழ்கி எடுக்கும்போது அச்செய்தியை நெய்தல் நில மக்களுக்கு தெரிவித்துள்ளனர். இதனை,

“சீருடைய விழுச் சிறப்பின்
விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்
இலங்குவளை இருஞ்சேரிக்
கட்கொண்டிக் குடிப்பாக்கத்து
நற்கொற்கையோர் நசைப் பொருந”[87]

என்று கொற்கைத் துறை முகத்தின் சிறப்பை அடையாளப்படுத்துகின்றார் மாங்குடிமருதனார்.

தமிழக முத்துக்களில் பாண்டிய நாட்டுமுத்து உலகப் புகழ் பெற்றதாகும். முத்து நவரத்தினங்களில் ஒன்றாக மதிக்கப்பட்டுள்ளது. அரசர்கள் ஏகவடம் என்னும் முத்துமாலையை அணிந்துள்ளனர். செல்வந்தர் வீட்டுப் பெண்களும், அரச குமாரிகளும், இராணிகளும், முத்துமாலையை அணிந்துள்ளனர்.

### 3.6. நெய்தல் நிலமரங்கள்

சங்க இலக்கியங்களில் பல்வேறு மரங்கள், செடிகொடிகள் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. புன்னை, தாழை, ஞாழல், போன்ற மரங்கள் நெய்தல் நிலத்துக்குரியன. பெண்ணை, தில்லை, வேம்பு, செருந்தி, குரவம், புண்டு, நாவல் போன்ற மரங்கள் நெய்தல் திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

நெய்தல் நிலத்திற்குரிய மரங்களாக ''மரம் புன்னையும் ஞாழலுங் கண்டலும்''[88] எனத் தொல்காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவரான நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார்.

நம்பியகப்பொருள் நெய்தல்திணைக்குரிய கருப்பொருள்களை குறிப்பிடுகையில்,

''........................... நெய்தல்
கண்டகக் கைதை முண்டகம் அடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்''[89]

தாழை, புன்னை, ஞாழல் எனச் சுட்டுகிறது.

#### 3.6.1. புன்னை

நெய்தல் நிலத்தில் காணப்படும் ஒருவகை மரம் புன்னை. இதன் அடிபகுதியும் கிளைகளும் கருநிறமுடையன. இதனை நீல்நிறப் புன்னை, மாச்சினை கடுங்கோட்டுப்புன்னை, கருந்தாள் புன்னை போன்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

''மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழும்''[90]

''கருங்கோட்டுப் புன்னை இறைகொண்டனவே''[91]

''இரும்பின் அன்னக் கருங்கோட்டுப் புன்னை''[92]

‘‘குவை இரும் புன்னைக் குடம்பை சேர’’[93]

‘‘கருங்கோட்டு நறும்புன்னை மலர் சினை மிசைதொறும்’’[94]

என்னும் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

மக்கள் வாழும் வீட்டின் முற்றங்களிலும் மன்றங்களிலும் புன்னையின் மலர்கள் பூத்து மணம் வீசும். பொன்துகள் கடற்கரையில் நிறைந்து கிடக்கும். இவை பொன்னும் மணியுமாய்க் காட்சியளிப்பதை,

‘‘புன்னை நுண் தாது உறைத்தரு நெய்தல்

பொன்படு மணியின் பொறப்பத் தோன்றும்’’[95]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.6.2. தாழை

நெய்தல் நிலத்தின் புன்புலால் நாற்றத்தை மாற்றி நறுமணம் வீசி நலம்பயந்து நிற்பது தாழை மலர்களாகும்.

ஒலிக்கின்ற அலை கொழித்த பெரிய மணல் மேடு அங்கு நிற்கிறது வளைந்த அடி மரத்தையும் விளிம்புகளில் முள் பொதிந்த இலைகளையும் உடைய தாழை, அதன் உள் மடலில் பொலிகிறது. அரும்பு முதிர்ந்த பூ, அது சங்கினை நீட்டி வைத்தது போலக் காட்சியளிக்கிறது. எறிகின்ற அலை அத்தாழையை முட்டி மோதுகிறது. அதனால் தாழை மலரின் தாது பொங்கியுதிர்ந்து அக்கடற்கரையெலாம் நறுமணம் வீசி இயல்பான புலால் நாற்றத்தை மாற்றி விடுகிறது என்பதை,

‘‘முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்

தடந்தாட் தாழை முள்ளுடை நெடுந்தோட்டு

அகமடல் பொதுளிய முகை முதிர் வான்பூங்

கோடு வார்ந்தன்ன, வெண்பூத்தாழை

எறி திரை உதைத்தலின் பொங்சித்தாது சோர்பு

சிறுகுடிப் பாக்கத்து மறுகு புலா மறுக்கும்''[96]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றது.

சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் தாழை கடற்கரையில் நறுமணத்தை அள்ளிவீசும் செய்திகள் பல விடங்களில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. இதனை,

''வயிறுடைப் போது வாலிதின் விரீஇ

புலவுப் பொருது அழித்த பூ நாறும் பரப்பின்''[97]

''முன்றில் தாழையொடு கமழும்

தெண்கடல் சேர்ப்பன் வாழ்சிறு நல் ஊர்க்கே''[98]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.6.3. ஞாழல்

நெய்தல் திணைக்குரிய மற்றொரு மரம் ஞாழல். இம்மரம் புன்னை மரத்துடன் சேர்ந்து காணப்படும். நறுமணம் கமழ்கின்ற ஞாழலின் பெரிய மலரும் புன்னையின் மலரும் உதிர்ந்து பரவிகிடக்கும் சோலையில் தலைவன் என்னைப் புணர்ந்தான் எனத் தலைவி கூறலும், எறியும் தன்மையுடைய சுறாமீன்கள் மிகுந்துள்ள கடலையுடைய நிலப்பரப்பில் ஞாழலின் மணமுடைய மலர்களோடு புன்னையின் மலர்களும் பரவியிருக்கும். புதியதாக மலர்ந்த பொன்னிறமுடைய ஞாழல் பூக்களுடன் புன்னையின் பூக்களும் தரையில் சித்திரம் தீட்டினாற் போல் உதிர்ந்து அழகு செய்யும் புன்னையோடு ஞாழல் பூத்து மணம் பரப்பும் குளிர்ந்த கடற்கரைப் பகுதியாகப் புலவர்கள் காட்சிப்படுத்தியுள்ளனர். இதனை,

''இதுவே நறவீ ஞாழல் மா மலர் தாஅய்

புன்னை ததைந்த வெண்மணல் ஒரு சிறை

புதுவது புணர்ந் பொழிலே''[99]

''பொன் வீ ஞாழலொடு புன்னை விரிக்கும்

கானல் அம்பெருந்துறைக் கவினி மாநீர்ப்''[100]

''அன்னைவாழி ! வேண்டு அன்னை ! புன்னையொடு

ஞாழல் பூக்கும் தண்ணம் துறைவன்''[101]

என்னும் பாடல்கள் தெரிவிக்கின்றன.

### 3.6.4. பெண்ணை

இது பனை என்று வழங்கப்படுகிறது. சங்க இலக்கியங்களில் போந்தை எனக் குறிப்பிடப்படுகின்றது. நெய்தல் நிலத்தில் கூட்டம் கூட்டமாக வளர்ந்திருக்கும் இதனைப் பனந்தோப்பு என்பர். இளவேனிற் காலத்தில் காய்க்கும் இளம்காய்களை நுங்குகள் என்பர். சோழன் நலங்கிள்ளியின் படை வீரர்கள் பனந்தோப்பினுள் நுழையும் போது பனை மரங்களில் நுங்குகள் காய்ந்திருந்தன, அவற்றை உண்டு சென்றனர். படையின் இடைப்பகுதியினர் அப்பனந்தோப்பினுள் நுழையும் போது நுங்குகள் பழங்களாகத் தோன்றின அவர்கள் அப்பழங்களைத் தின்று சென்றனர் படையின் கடைப்பகுதியினர் அங்கு வரும்போது பழத்தின் கொட்டைகள் முளைத்துக் கிழங்குகளாகத் தோன்றின. இக்கிழங்குகளைத் தின்றுச் சென்றனர். இச்செய்தியை,

''தலையோர் நுங்கின் தீம் சேறு மிசைய

இடையோர் பழத்தின் பைங்கனி மாந்த

கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர''[102]

எனும் புறநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிடுகிறது.

பனையின் அடியிலிருந்து முனை வரையில் கருக்குடன் கூடிய ஓலைகள் அடர்த்தியாக வளரும். அவற்றை வெட்டி விட்டுக் கொண்டே இருப்பர் அவ்வோலை

வேலி அமைக்கப் பயன்படும். நீண்ட மடலோடு காணப்படும் ஓலைகள் பச்சை நிறம் கொண்டு உச்சியில் கொத்தாகக் காட்சியளிக்கும். இதனை,

''தான் அது பொறுத்தல் யாவது– கானல்

ஆடு அரை ஒழித்த நீடு இரும் பெண்ணை

வீழ் காவோலைச் சூழ் சிறை யாத்த''[103]

நெய்தல் நில மக்கள் தம்குல தெய்வத்தையும் ஊர்ப்பொதுத் தெய்வத்தையும் பனையிலேயே ஏற்றிவித்து வணங்கியுள்ளனர். இதனை,

''தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை

மன்றப் பெண்ணை வாங்கு மடற்குடம்பைத்''[104]

''புலவு நாறு சிறுகுடி மன்றத்து ஓங்கிய

ஆடு அரைப் பெண்ணைத் தோடு மடல் ஏறி''[105]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

**3.6.5. தில்லை**

இது நெய்தனிலத்துக்கு உரித்தாகக் கூறப்படும் மரவகையாகும் இம்மரத்தின் ''தளிர் புற் கென்ற நிறமுடையதென்றும் பன்முறை அருவி நீராடும் தாபதர் சடையின் நிறத்திற்கு உவமை கூறப் பெறுவதென்பதும் அறியப்படுகின்றன. இதன் பால்மிக்க கொடுமைத் தன்மையுடையது''[106] என்கிறார் இ.வை. அனந்தராமையர்.

கடற்கரைப் பக்கத்துள்ள கரிய கழியின் கண்ணுள்ள மீன்களை நீர் நாயின் குட்டி நண்டு தின்று அடுத்துள்ள தில்லை மரப் பொந்துகளில் படுத்து உறங்கும். இதனை,

“அருளாயாகலோ கொடிதே! – இருங்கழிக்
குருளை நீர்நாய் கொழுநீன் மாந்தி
தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்”[107]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. கடற்கரையின் மணல் திடல்களிலே தில்லை மரங்கள் வளர்ந்து, ஊரைச் சுற்றி வேலியாகக் காணப்படும். இதனை,

“நன்றே பாண! கொண்கனது நட்பே
தில்லை வேலி இவ் ஊர்க்
கல்லென் கௌவை எழாஅக்காலே”[108]

“மாமலர் முண்டகம் தில்லையொடு ஒருங்குடன்
கானல் அணிந்த உயர்மணல் எக்கர்”[109]

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

### 3.7. நெய்தல் நிலச் செடி கொடிகள்

கழிமுள்ளிச் செடி (முண்டகம்), அடும்புகொடி, (அடப்பம், அடம்பு), நெய்தல் கொடி போன்றவற்றை நெய்தல் நிலச் செடி கொடிகளாகக் கூறப்படுகிறது.

### 3.7.1. கழிமுள்ளிச் செடி

இச்செடிகள் நெய்தல் நிலத்தில் மிகுதியாகக் காணப்படுகிறது. களிமுள்ளிச் செடியை முண்டகம் என்றும் நெய்தல்திணைப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. இப்பூக்கள் கருநிறமுடையது. மிகவும் குளிர்ச்சியானது. இச்செடியில் இருக்கும் முள் வளைந்திருக்கும். இம்முள் அணிலின் பில்லைப் போன்று இருக்கும். இதனை,

“அணிற் பல் அன்னகொங்குமுதிர் முண்டகத்து”
“கூன்முள் முண்டகக் கூர்ம் பனி மாமலர்”

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. மேலும் மகளிர் கழிமுள்ளியின் பூக்களைச் சூடிக் கொள்வர் கழிமுள்ளிச் செடி கடற்கரை கழிக்கரை ஆகிய இடங்களில் செழித்து வளரும். இதனை,

''அணிமலர் முண்டகத்து ஆய் பூங்கோதை

மணி மருள் ஐம்பால் வண்டு படத்தைஇ''[112]

''முண்டகக் கோதை நனைய

தெண் திரைப் பௌவம் பாய்ந்து நின்றோளே''[113]

எனும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.7.2. நெய்தல் கொடி

நெய்தல் நிலத்தில் தாழை, புன்னை, ஞாழல், செருந்தி, அடும்பு, கழிமுள்ளி போன்ற எண்ணற்ற மரம், செடி, கொடிகள் காணப்பட்டாலும் அங்கு மிகுதியாக, சிறப்பாக நெய்தற் கொடிகளும் அதன் பூக்களும் காட்சியளிக்கின்றன.

நெய்தல் என்பது ஒரு நீர்ப் பூக்கொடி இதனாலே கடல் சார்ந்த நிலம் நெய்தனிலமெனப் பட்டதென்பர். இக்கொடி பெரியத் தண்டினையும் பசுமையான இலைகளையும் நறுமணம் வீசும் பூவையும் உடையது. இதனை,

''கானல் அம் பெருந்துறைக் கவினி மாநீர்ப்

பாசடை கலித்த கணைக்கால் நெய்தல்''[114]

''நக்க கண் போல் நெய்தல்

கள் கமழ்ந்து ஆனாத் துறைவற்கு''[115]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 3.7.3. அடும்பு கொடி

இக்கொடி கடற்கரை மணல் பரப்பில் பரந்து கிடக்கும். அடம்பு, அடப்பம் என்றும் அழைப்பர். “கடற்கரைப் பகுதியில் வளரும் ஒருவகைக்கொடி. இதனை அடம்பங்கொடி, அடப்பங்கொடியென்றும் கூறுவர். இதன் பூ வெண்ணிறம் பெற்றுக் காண்பதற்கு அழகாய் இருக்கும். இலைகள் சுவடுபட்டு மான்குளம்பு போலக் காட்சி தருகின்றன இதன் கொடி சிவந்திருக்கும்”[116] என்பர்.

அடும்புக்கொடி வெண் மணற் கரையில் விரவிப் படர்த்துள்ளமையை,

“குன்று ஓங்கு வெண்மணல் கொடியடும்பு”[117]

“அடும்பு இவர் மணற் கோடு”[118]

“அடும்பு இவர் அணி எக்கர்”[119]

“............முது நீர் அடைகரை

ஒண்பல் மலரக்கவிட்டு இலை அடும்பின்”[120]

என்னும் சங்க நெய்தல் திணைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

## 3.8. நெய்தல்நிலப் பறவைகள்

அன்னம், அன்றில், கடற்காக்கை போன்ற பறவைகள் நெய்தல் நிலத்துக்குரியன. தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் ‘நெய்தற்கு புள் அன்னமும் அன்றிலும்’ முதலியன என்று குறிப்பிடுகிறார். ஆனால்,

இளம்பூரணர் தம் சூத்திர உரையில் ‘நெய்தற்குப் புள் கடற்காக்கை’ என்கிறார். எனவே நெய்தற்குரிய புட்கள் அன்னம் அன்றில், கடற்காக்கை போன்றவைகளாகும்.

### 3.8.1. அன்னம்

“குறுங்காலையும் வெண்ணிறத்தையும் உடையது மணலில் தங்கி இருக்கும் மிக உயரத்தில் பறக்கும் விரைவு பற்றிக் குதிரைக்கு உவமையாகக் கூறப்படும்”[121]

என்கிறார் உ.வே.சா. ‘‘அன்னத்தின் கால் நீண்டு மயிரடர்ந்து நுனி குவிந்து, தோலுறை போறலின், துதிக்கால் அன்னம் என்று கூறப்படுகிறது’’[122] என்கிறார் அவ்வை துரைசாமிப்பிள்ளை.

மின்னுகின்ற வானத்தில் மேகம் மழை பொழிகின்றது. பொற்படைகளால் பொலிவு பெற்றதும், தந்தத்தால் இழைக்கப்பட்டது மானவெண்ணிறத் தேர் ஏறிக் கலங்கியக் கடலுள்ள நீர்த் துளிகள் அத்தேரின் சக்கரத்தை நனைக்குமாறு தலைவன் விரைந்து வந்தான். அது வானத்தில் பறக்கும் அன்னப் பறவையை மேலும் உயர்ந்து பறப்பது போல் காட்சியளிக்கிறது. இதனை,

‘‘மின்னுச் செய் கருவிய பெயின் மழைதூங்க
விசும்பு ஆடு அன்னம் பிறை நிவந்தாங்கு
பொலம்படைப் பொலிந்த வெண்தேர் ஏறி
கலங்கு கடற்துவளை ஆழி நனைப்ப
இனிச் சென்றனனே’’[123]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகிறது.

### 3.8.2. அன்றில்

இது நெய்தல் நிலத்தில் கழிகளிலுள்ள மீன் முதலியவற்றையும் பனைமரத்தில் கூடமைத்து வாழும் பறவை ஆண் அன்றிலின் உச்சிக் கொண்டை நெருப்புப்போல் சிவந்து தோன்றும். சிவந்து வளைந்த வாயினையுடையது. இதன் கால் கரியது. ஆணும் பெண்ணும் இணைபிரியாது வாழும் இயல்புடையன. ஒன்றைவிட்டு ஒன்று பிரிய நேரின் சற்றும் துயிலாது வேதனையில் ஆழ்ந்து நடுங்கி நலியும். உளமார்ந்த அன்பில் ஆழ்ந்து இணைபிரியாது வாழும் காதலர்க்கு ஆணும் பெண்ணுமான அன்றில் பறவைகளை உவமையாக சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

அன்றிலின் அலகு தடித்துக் கூர்மையாகவும் சிறிது வளைந்தும் இருக்கும். கருவுற்றிருக்கும் பெடையின் கால் கருப்பு நிறமாகக் காணப்படும். பனைமரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள வெண்மையான மணல் பரந்த தோட்டங்களில் அன்றில் பறவை தன் பெடையை அழைக்கும். இதனை,

''பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்''

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும் கடல் அலை ஓய்ந்து அமைதியானது கானல் மங்கியது. நீர்துறையும் கழியும் பூக்கள் கூம்பி பொலிவை இழந்தன. ஆனாலும் பனை மடலில் தங்கும் அன்றில் மட்டும் மெல்ல ஒலி எழுப்பிக் கொண்டிருந்தது. இதனை,

''கடல்பாடு அவிந்து கானல் மயங்கி
துறைநீர் இருங்கழி புல்லென் றன்றே
மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும்''[124]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

''மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றில்''[125]

''மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
துணையொன்று பிரியினும் துஞ்சா''[126]

''இனமீன் அருந்து நாரையொடு பனைமிசை
அன்றில் சேர்க்கும்''[127]

என்ற பாடலடிகள் அன்றில் பறவைகள் பனைமரங்களிலே கூடுகட்டித் துணையுடன் பிரியாது வாழும் என்பதையும், பிரிந்தால் மனம் உளைந்து இரக்கக் குரல் எழுப்பி ஏங்கித் தவிக்கும் என்பதையும் குறிப்பிடுகின்றன.

**3.8.3. கடற்காக்கை**

இப்பறவை கடற்கரையிலும் கழிப்பகுதியிலும் காணப்படும். பழங்குடிமக்கள் இப்பறவையைக் கடற்காக்கை என்றே அழைத்தனர்.

ச.சாம்பசிவன் ‘‘நெய்தல் நிலத்தில் வாழும் காக்கை கற்காக்கை அல்லது நீர்க்காக்கை என்று பேசப்படுகிறது’’[128] என்கிறார்.

‘‘இவை தண்ணீரில் இருக்குங்கால் தலையும் வாலின் ஒரு சிறு பகுதியும் வெளியில் தோன்ற மூழ்கியிருப்பது இயல்பு நீர்க்குள் மூழ்கி நெடிதிருந்து அங்கே வாழும் மீன்களைப் பிடிப்பதில் சீர்த்த குறியுடையவாகும். நீர்க்குள் மூழ்கிப் பிடித்து மீன்களை நிலக்காக்கை போலத் தலையை மேலே நிமிர்த்தி அசைத்து அசைத்து விழுங்கும். சில சமயங்களில் முள் உடைமையால் நீர்க்குள் மறைந்திருக்கும் கெடிற்று மீனைப் பிடித்து மேலே கொணர்ந்து காற்றில் உயரமாகத் தூக்கி எறிந்து உண்பதுண்டு. ஆழமில்லாத நீர்நிலையில் மீன்களும் மிகச் சிலவே இருக்குமாயின் இக்காக்கைகள் கூட்டமாக நீரில் நடந்து மீன்களை ஒரு சேரக் கூடுமாறு செய்து பிடித்துண்பதும் இவற்றின் இயல்பு’’[129] என்கிறார் சு.துரைசாமிப்பிள்ளை.

நீர்நிலைகளில் இருக்கும் மிக உயரமில்லாத மரங்களில் இக்காக்கைகள் கூடு அமைக்கும். ஒரு மரத்தில் நாற்பது கூடுகள் காணப்படும். முறைக்கு நான்கு அல்லது ஐந்து முட்டைகள் இடும். அம்முட்டைகள் வெண்மை கலந்த நிலமும் பசுமையும் கொண்ட நிறமுடையவை. அவற்றின் மேல் வெண்மையான பொடி படிந்திருக்கும். சிறுவெண் காக்கைக்குச் சிவந்த வாயலகுஉண்டு. இதனை

‘‘சிறுவெண் காக்கை செவ்வாய் பெருந்தோடு’’[130]

‘‘கடல் அம் காக்கை செவ்வாய்ச் சேவல்’’[131]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. சிறுவெண் காக்கைகள் கருங்கழியின் கண்ணுள்ள அயிரை மீன்களையும் கெடிறு மீன்களையும் ஏனைய சிறு மீன்களையும் வயிறார உண்டு மகிழும். பின்பு மணங் கமழும் சோலையில் சென்று தங்கும். இதனை

“பெருங் கடற்கரையது சிறு வெண் காக்கை

இருங்கழி மருங்கின் அயிரை ஆரும்”[132]

“பெருங்கடற்கரையது சிறுவெண்காக்கை

நீத்து நீர் இருங்கழி இரை தேர்ந்து உண்டு

பூக்கமழ் பொதும்பர்ச் சேர்க்கும்”[133]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

சங்க இலக்கிய நெய்தல்திணைப் பாடல்களில் குருகு, கருங்கால் வெண்குருகு, வெள்ளாங்குருகு, மகன்றில், கொக்கு, சாம்பல் நாரை, செந்நாரை, செவ்வரி நாரை பூநாரை போன்ற பறவை இனங்கள் பற்றியக் குறிப்புகளும் இடம்பெறுகின்றன.

## 3.9. கருப்பொருள்களின்வழி திணைசார் ஒழுக்கம்

நெய்தல் திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள கருப்பொருள்களானது இந்நிலத்தின் இயல்பிற்கேற்ப அமைந்துள்ளன. இக்கருப்பொருள்கள் இந்நிலஒழுக்கத்திற்குத் துணைபுரிகின்றன.

### 3.9.1. தலைவி வருந்துதல்

கப்பல் வந்து மோதுவதால் உண்டான பெரிய கடலலையின் ஓசைக்கு அஞ்சி புன்னை மரக்கிளையில் தங்குகின்ற வெண்குருகும், சிறுவெண்காக்கை, உப்பங்கழியிலுள்ள இறாமீனைப் பிடித்துத் தனது விருப்பமிக்கப் பெடைக்குக் கொடுக்கின்ற இனிய காட்சியும் சிறிய ஞாழல் பூக்கள் மிகுந்த கடற்துறைக் காட்சியும் கடற்கரைத் தலைவனான சேர்ப்பனை மணப்பதற்கு முன்பு இனியவாயிருந்தன. அவன் என்னை மணந்து பிரிந்த அளவில் இனியதாயிருந்த இவையனைத்தும் என்வெறுப்பிற்கு உரியதாயிற்று என தோழியிடம் தலைவிக் கூறுவதை,

“மாஇரும் பரப்பகம் துணிய நோக்கி
சேயிறா எறிந்த சிறுவெண்காக்கை
பாய் இரும் பனிக்கழி துழைஇ மைங்கால்
தான் வீழ் பெடைக்குப் பயிரிடுஉ சுரக்கும்
சிறுவீ ஞாழல் துறையுமார் இனிதே
பெரும் புலம்பு உற்ற நெஞ்சமொடு பல நினைந்து
யானும் இனையேன்– ஆயின், ஆனாது
வேறு பல் நாட்டில் கால்தர வந்த
பல உறு பண்ணியம் இழிதரு நிலவு மணல்
நெடுஞ் சினைப் புன்னைக் கடுஞ்சூல் வெண்குருகு
உழவுத் திரை ஓதம் வெரூஉம்
உரவுநீர்ச் சேர்ப்பனொடு மணவா ஊங்கே”[134]

என்னும் பாடலின் வாயிலாக நெய்தல் நிலக்கருப்பொருள்களான சிறுவெண்காக்கை, வெண்குருகு, ஞாழல் மலர் ஆகியன தலைவிக்குத் தலைவனின் காதல் நினைவினை உண்டாக்கிப் பிரிவுத்துயரினை அதிகரிப்பதில் பெரும்பங்கு வகிக்கின்றன.

### 3.9.2. புன்னையிடம் தலைவி அன்புகாட்டல்

பகற்குறி வந்த தலைவனிடம் வரைவுக்கடாவியத் தோழி தலைவனிடம் சிறுபருவத்தில் புன்னை விதையை வெள்ளிய மணலினுள் அழுத்தி விளையாடியனோம். பின்னர் அதனை மறந்து போனோம். அப்புன்னை விதை வேரூன்றி முளைத்ததைக் கண்டு மகிழ்ந்து நெய்யோடு கலந்த இனிய பாலினை ஊற்றி அப்புன்னையை வளர்த்து வந்தோம். இதனைக் கண்ட அன்னை அப்புன்னை உங்களுடன் பிறந்த தங்கையென்று கூறினாள். எனவே தங்கையான இப்புன்னையின் அருகில் நின்று உன்னோடு நகைத்து விளையாட தலைவி

நாணுகிறாள். வேண்டுமெனில் வேறு நிழலும் உண்டு எனப் பகற்குறி மறுத்துக் கூறுகிறாள். இதனை,

''விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி

மறந்தனம் துறந்த காழ்முளை அகைய

..........................................................................................

இறைபடு நிழல் பிறவுமார் உளவே''[135]

என்ற பாடலடிகள் உரைக்கின்றன. புன்னை மரத்தினைக் கூடத் தன்னுடன் பிறந்த தங்கையாகக் கருதிக் காதலனுடன் பேச நாணுகின்ற தலைவியின் சிறந்தகுணம் நெய்தல் நிலக் கருப்பொருளான புன்னையின் மூலம் வெளிப்படுத்தப்படுகிறது.

### 3.9.3. தலைவன் இல்லற பண்பாட்டைக் கூறல்

நீர் நிறைந்த கடல்துறை முகம் உள்ள இடத்தில் நாவல் மரத்தின் கீழே வீழ்ந்து கிடந்த கனியினை அதன் அழகு சிதையுமாறு இழுத்துச் சென்று தாழையின் வேர்ப் பக்கத்தில் தன் வளையினுள்ள தன்னால் விரும்பப்படும் பெண்நண்டிற்குத் தரும் ஓர் ஆண் நண்டினைத் தலைவியிடம் சுட்டிக்காட்டி இதுவன்றோ சிறந்த இல்லறப்பண்பு எனக்கூறிச் சிறிதுநேரம் சிந்தித்துப் பார்த்துச் செல்கின்றான். இதனை,

''முன்நாள்போகிய துறைவன் நெருநை

அகல் இலை நாவல் உண்துறை உதிர்த்த

கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டு தன்

தாழை வேர் அனை வீழ்துணைக்கு இடுஉம்

அலவற் காட்டி நற்பாற்று இது என

நினைத்த நெஞ்சமொடு நெடிது பெயர்ந்தோனே''[136]

என்னும் பாடலடிகள் தலைவனின் செயல்பாட்டை உணர்த்துகிறது. நெய்தல் திணைக்குறியக் கருப்பொருளான அலவனின் செயல்பாடு நெய்தல்நிலத்

தலைவன் தலைவியின் இல்லற மாண்பினை அடையாளப்படுத்துவதாக உள்ளன.

### 3.9.4. கடலும் தலைவனின் பரத்தமை ஒழுக்கமும்

தலைவன் பரத்தையரோடு கடலாடியதைக் கேள்விப்பட்டத் தலைவி தன் தலையில் சூடிய கழிமுள்ளி மலர்மாலை நனையுமாறு தெளிந்த அலைகள் கொண்ட கடலில் பலரும் அறிய நின்னொடு பரத்தையும், அவள் தோழிமாரும் கடல் நீரில் பாய்ந்து விளையாடியதை நானும் என்னுடையத் தோழிகளும் கண்டோம் என்று கூறி அவனோடு ஊடல் கொள்கிறாள். இதனை,

''கண்டிரும் அல்லமோ, கொண்க! நின்கேளே ?
முண்டகக் கோதை நனைய
தெண்திரைப் பௌவம் பாய்ந்து நின்றோளே''[137]

என்னும் பாடலும்,

''கண்டிரும் அல்லமோ கொண்க! நின்கேளே!
ஒண் நுதல் ஆயம் ஆர்ப்ப
தண்ணென் பெருங்கடல் திரை பாய்வோளே''[138]

என்னும் பாடலும்,

''கண்டிரும் அல்லமோ அல்லமோ, கொண்க! நின்கேளே!
உண்கண் வண்டினம் மொய்ப்ப
தெண்கடற் பெருந்திரை மூழ்குவோளே''[139]

என்னும் பாடல்கள் உணர்த்துகின்றன.

### 3.9.5. தலைவியின் பசலை நோய்

தலைவன் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தற் பொருட்டுத் தன்னூர்க்குப் பிரிந்து சென்ற போது அவன் பிரிவு ஆற்றாதத் தலைவி ஞாழலும்

செருந்தியும் கமழும் மணற் பரப்பிலே தலைவனோடு விளையாடியும் நீர் துறையில் ஆடியும் மகிழ்ந்த தனக்கு இன்று அவனில்லாமல் அவை பசலை நோயினை உண்டாக்குகின்றன என்று வருந்திக் கூறியதை,

> ''எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
>
> துவலைத் தண் துளி வீசிப்
>
> பயலை செய்தன பனிபடு துறையே''[140]

என்னும் பாடலடிகள் சுட்டுகிறது. மேலும் தலைவி ஆற்றியிருந்த போதும் அவளையும் விஞ்சி அற்றாமை கொள்வதற்கு நெய்தலின் கருப்பொருளான ஞாழல், செருந்தி மலர்களும் தண்ணிய துறையும் காரணமாக அமைகின்றன.

### 3.9.6. தலைவி உப்பு விற்றலும் காதல் கொள்ளலும்

கடலுக்குச் சென்று மீன்பிடிக்கும் பரதவர்களின் உப்பங்கழியாகிய வயலில் கல் உப்பினை உழாமலே விளைவித்த உப்பினை தலைவி கையில் வளையல் ஒலிக்கக் கல்லுப்பினை நெல்லுக்கு இணையாகப் பண்டமாற்றாக விலை கூறிச் செல்கிறாள். அங்கு இவளின் குரலைக் கேட்டு நாய்குரைத்து வரக்கேட்டு அப்பெண் அஞ்சி நடுங்கினாள். அதனால் அப்பெண்ணின் கண்கள் மருண்டு காணப்பட்டது. இதனைக் கண்டத் தலைவன் தன் மனதை அவளிடம் பரிகொடுத்ததோடு காதலுற்றுத் துன்புறுகிறான் என்பதை,

> ''பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
>
> இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த
>
> ..................................................................................
>
> வெய்ய உயிர்க்கும் நோய் ஆகின்றே''[141]

என்னும் பாடல் உணர்த்துகிறது. நெய்தல்நிலக் கருப்பொருளான கடல் மற்றும் பரதவ மக்களின் தொழிலாகிய உப்பு விற்றல் போன்ற கருப்பொருள்களின் வழியாக தலைவனின் காதல் வெளிப்படுவதை அறியமுடிகிறது. மேலும்,

“உவர் வினை உப்பின் கொள்ளை சாற்றி,

அதர்படு பூழிய சேண்புலம் படரும்,

.........................................................................

பல்மாண் பேதைக்கு ஒழிந்தது என் நெஞ்சே”[142]

களர்நிலத்துப் பிறந்த உப்பினை விற்பனைச் செய்யும் பரதவ மகள் நீண்ட கூந்தலையும் அசைய அழகு ஒழுகும் அல்குல்லையும் தழையாடை அசைய நடைகொண்டு நெல்லும் உப்பும் ஒரே விலையாகும் பெற்றுக் கொள்ளுங்கள் எனக் கூறி விற்பனைச் செய்யும் நெய்தல் நிலத்தலைவி விருப்பத்தோடு எம்மைக் கண்டு நீர் யாவிரோ என்று வினவிப் புன்னகை புரிந்தாள். அவளின் பொருட்டு என் மெய் வலியும் மன வலியும் அழிந்தன. என்று தலைவன் புலம்புவதாக உள்ளது. நெய்தல் நிலப் பதரவ இன மக்களின்  தொழிலாக உப்பு விற்றலை தமிழ் இலக்கணங்களும் சங்க நெய்தல் திணைப் பாடல்களும் கருப்பொருளாகக் குறிப்பிடுகின்றன.

### 3.9.7. தலைவிக்கு காம உணர்வு மிகுதல்

நெய்தல் நிலக்கருப்பொருள்களான தாழைமலர், பனை, அன்றில், கடல், யாழின் ஓசை போன்றவை தலைவனைப் பிரிந்த நிலையில் வாடும் தலைவியின் காதல் உணர்வினை மிகுவிப்பதாக அமைகின்றன.

வானலாவிய உயரிய அலைகளைத் தோற்றுவிக்கும் கடலும் அடங்காத ஓசைகளும் நீர் நிறைந்த இப்பகுதியில் பலவகையானப் பூக்களும் தாழைமுள்ளையுடைய இலையுடன் திகழும் அது. சோற்றைச் சொரிகின்ற குடைபோலக் கூம்பிய அரும்பினை மலரச் செய்யும். உயரிய பனைமரத்தில் உள்ள அன்றிலும் என் அருகிலிருந்து ஒலிக்கும் இது மட்டுமன்று விரலால் தடவி வருத்தமுற விருப்பத்தைச் செய்யும் நல்ல யாழும் இரவின் நடுயாமத்தில் என் உயிர் உய்யாதவாறு இசைத்து நிற்கும் என்பதை,

“திங்களும் திகழ்வான் ஏர்தரும் இமிழ் நீர்ப்
பொங்கு திரைப் புணரியும் பாடுஒவாதே
ஒலிசிறந்து ஓதமம் பெயரும் மலிபுனற்
பல்பூங்கானல் முள் இலைத் தாழை
சோறு சொரி குடையின் கூம்பு முகை அவிழ
வளி பரந்து ஊட்டும் விளிவு இல் நாற்றமொடு
மைஇரும் பனை மிசைப் பைதல உயவும்
அன்றிலும் என்புற நரலும்; அன்றி
விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்
யாமம் உய்யாமை நின்றன்று;
காமம் பெரிதே களைஞரோ இலரே”[143]

என்னும் வெள்ளிவீதியாரின் பாடல் நெய்தல் நிலத் தலைவியின் காதல் ஒழுக்கத்திற்கு கடல் பனை, அன்றில், தாழை மலர், போன்ற கருப்பொருள்கள் உணர்வு வெளியீட்டின் வாயில்களாக அமைகின்றன.

### 3.9.8. தலைவிகடல் நீராடல்

நெய்தல் நிலத்தலைவி தன் தோழிகளுடன் சிறந்த அழகினையுடைய கழிமுள்ளி மலர்மாலையை அணிந்து தெளிந்த நீரையுடைய கடலிலே தோழியருடன் நீராடி மகிழ்ந்தோம் எனத் தோழியிடம் கூறுகிறாள். அவ்வேலையில் நோத்தியும் நுண்மையும் உடைய அகன்ற அல்குலையும் தெளிந்த இனிய மொழிகளைப் பேசு என் அரிய உயிரைப் பற்றிக் கொண்டவள் நீதானே என வினவியவனாய்ப் பூண் நிரம்பிய நெடியத் தேரில் குதிரைகளைப் பூட்டிய வண்ணம் தலைவன் வந்தனன். அவன் நம்மை வினவுதலால் அது நம்மை வருத்தும் என்பதை அறியான். நம்மால் உண்டான துன்பத்தை மட்டும் கூறினன் என்று தலைவி தோழியிடம் கூறி இன்புறுவதை,

“நகையாகின்றே – தோழி– தகைய

அணிமலர் முண்டகத்து ஆய் பூங்கோதை

மணி மருள் ஐம்பால் வண்டு படத்தைஇ

...................................................................................

பெருங்கடற் சேர்ப்பன் தொழுது நின்றதுவே”[144]

என்னும் அல்லங்கீரனாரின் பாடல் உணர்த்துகிறது. நெய்தல் நிலக்கருப்பொருள்களான முண்டக மலர் கடல்நீர் ஆகியன தலைவியின் களவு கால உணர்வின் மகிழ்விற்கு காரணமாக அமைகின்றன. மேலும்,

தலைவனுடன் புன்னை நிழலில் அலவனாட்டி விளையாடிய அன்றே தலைவி இற்செறிக்கப்பட்டமையை (குறுந். 303), உப்பங்கழி சூழ்ந்த சோலையில் விளையாடியதால் தலைவி இற்செறிக்கப்பட்டமையை (நற். 27), கடற்சேர்ப்பனைப் பிரிந்ததால் நெய்தல் தலைவி நெய்தல் நிலப்பறவைகளைத் தலைவனிடம் சென்று தூதுரைக்கச் சொல்லல் (நற்.54), பகற்குறி நீங்கியத் தலைவனிடம் தலைவி தன் நெய்தல் ஊரிலேயே அவனையும் தங்கச் சொல்லுதல் (நற். 58,67,254, அகம். 20,200, 300, 340,350), ஞாழல் புன்னை மலர் பரவிக் கிடக்கும் சோலை, கடலில் நீராடிய துறையைக் காணும் பொழுதெல்லாம் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்குப் பசலை உண்டாகியமையை (நற். 96, 187, 231), நாரையின் ஒலியினைக் கேட்டுத் துன்புறும் தலைவி (கலி. 121, 126, நற். 199,338), கரையின் கண் அமர்ந்திருக்கும் குருகுகளின் வரிசையை எண்ணிப் பொழுது போக்கும் தலைவி (நற்.159), இனிமையாயிருந்த பாக்கமும் புன்னை மரநிழலுடைய துறையும் பரதவனின் இளைய மகளைக் கண்டவுடன் தலைவனுக்குத் துன்பம் தந்தமையை (நற். 101), தலைவனைக் காணும் முன்பு இனியதாயிருந்த நெய்தல் ஊர் அவன் பிரிந்தவுடன் அவ்வினிமையைத் தராமல் தலைவியை வருத்தியமையை (நற். 135), அன்றில் ஒலியினைக் கேட்டுத் துன்புறும் தலைவி (குறு.117, அகம். 50,270), செருந்தி, புன்னை நிறைந்த கடற்கரைச் சோலை தலைமக்களின் குறியிட மாதல்

(குறு.326, அகம். 240, 330, 360, கலி. 132), நெய்தல் கருப்பொருள்களுள் ஒன்றான ஞாழலைத் தலையாடையாக உடுத்திய தலைவி (ஐங்.191) என்பன போன்ற நெய்தலின் கருப்பொருள் சார்ந்த செய்திகளால் நெய்தல்நில தலைவன், தலைவியின் காதல் உணர்வுகளையும் செயல்பாடுகளையும் வாழ்க்கை முறைகளையும் அறியும் வாயிலாக அமைகின்றன.

### 3.10. கருப்பொருள் மயக்கம்

சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் பிறத்திணைக் கருப்பொருள்கள் பயின்று வந்துள்ளன.தலைவியால் காதலிக்கப்படும் தலைவன் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானில வளங்களையும் தன் நாட்டில் ஒருங்கே பெற்று செல்வச் செழிப்புடன் வாழ்பவன் என்பதனை,

''கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாடன் நல்வயல் ஊரன்
தண்கடற் சேர்ப்பன் பிரிந்தென – பண்டையின்''[145]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவ்வாறாக நெய்தல் நிலத் தலைவனின் செல்வ வளத்தையும் பெருமையையும் உணர்த்தவே இந்நானிலக் கருப்பொருளும் பாடலில் ஒருங்கே வந்துள்ளன என்பதை அறியமுடிகிறது.

#### 3.10.1. நெய்தலில் முல்லை

முல்லை நிலக் கோவலன் ஊதும் குழலோசையினைக் கேட்டும் முல்லை அரும்புகள் மலர்ந்ததைக் கண்டும் தலைவர் வராததால் தனிமையில் நெய்தல் நிலத்தலைவி வருத்தமுற்றிருப்பதனை,

''நினையும் என் உள்ளம் போல் நெடுங்கழிமலர் கூம்ப
இணையும் என் நெஞ்சம் போல் இனம் காப்பார் குழல் தோன்ற
சாய என் கிளவிபோல் செவ்வழியாழ் இறைநிற்ப''[146]

“கோவலர் தீம் குழல் இணைய அரோ என்

பூ எழில் உண்கண் புலம்பு கொண்டு இணையும்”[147]

“எல்லைபையக் கழிப்பி முல்லை

அரும்பு வாய் அவிழ்க்கும் பெரும்புன்மாலை

இன்றும் வருகுவதாயின் நன்றும் அறியேன் வாழிதோழி”[148]

என்ற பாடல்கள் புலப்படுத்துகின்றன. முல்லை நிலக் கருப்பொருள்களான செவ்வழியாழ், முல்லைமலர், கோவலர் குழலோசை போன்றவை நெய்தல் நிலத்தலைவியின் வருத்தத்திற்குக் காரணமாக அமைகின்றன. பிறத் திணைக் கருப்பொருளாக இருப்பினும் வந்தத்திணையின் ஒழுக்கத்திற்கு உறுதுணையாக அமைகின்றன.

### 3.10.2. நெய்தலில் மருதம்

தலைவி கடற்கரைச் சோலையிலுள்ள சிறுகுடியில் மீனைப் பிடித்திருக்கின்ற பரதவர் மகளாவாள். நீயோ, நெடிய கொடிகள் காற்றால் அசைந்து கடைத் தெருக்களைக் கொண்ட பழைய ஊரின் கண் வாழ்கின்ற கடுமையான செல்வமிக்க தேரினை உடையவனின் அன்புக்குரிய மகள் எம் குலத்திற்கு நீ பொருந்துவாயில்லை. உடம்பெல்லாம் புலால் நாற்றம் வீசக்கூடிய எங்களுக்குப் பரதவர் குடியில் உம்மைப் போன்ற செல்வர்களும் உள்ளார்கள் என்று கூறித்தோழி தலைவனுக்குக் குறை மறுப்பதை,

“இவளே கானல் நண்ணிய காமர் சிறுகுடி

நீல்நிறப் பெருங்கடல் கலங்க உன் புக்கு

..........................................................................

எம்மனோரில் செம்மலும் உடைத்தே”[149]

இப்பாடல் உணர்த்துகிறது. இந்நெய்தல் திணைப் பாடலில், உள்ள கானல், சிறுகுடி, பரதவ மக்கள், மூதூர் போன்றக் கருப்பொருள்களின் வழியாக

நெய்தல்நிலத் தலைவியிடம் மருதநிலத் தலைவன் கொண்ட காதலைப் புலப்படுத்துகிறது.

### 3.10.3. நெய்தலில் குறிஞ்சி

கார்காலத்திற்குள் வருவதாகக் கூறிச் சென்றத் தலைவன் வாராமைக்காக தலைவி வருத்தம் கொள்வதை அறிந்த தோழி, கார்ப்பருவத்தில் பெய்வதற்கு உரிய மழையையுடைய மாலைக் காலத்தில் பெரிய மலைப்பகுதியில் முழவு போன்ற இனிய ஓசையுடைய இடியேற்றினோடு மேகங்கள் முழங்கும். முன்பு மழைபெய்த குன்றத்தின் கண் மலர் மணம் வீசுகின்ற குளிர்ந்த வெள்ள நீரின் மேல் பரவிய மலர்களைச் சுமந்து வந்து அருவி நீர் வீழும் கார்ப்பருவத்திற்கு முன்னரே வருவதாக அன்பு மொழிகளைக் கூறிச் சென்றவர் இன்னும் வரவில்லை ஆதலால் நம்மை மறந்து விட்டார். ஆனாலும் நாம் அவரை மறக்கவில்லை என்பதை,

“பெய்த குன்றத்துப் பூநாறு தண்கலுழ்
மீமிசைத் தாஅய் வீசும் வளி கலந்து
..................................................................
முன்வரல் ஏமம் செய்து அகன்றோரே”[150]

என்னும் ஔவையின் பாடலில் குறிஞ்சித்திணைக்குரிய கருப்பொருளான அருவிநீர் தலைவியின் காதல் மனம் கலங்குவதை உணர்த்த உறுதுணையாக வருகின்றன. மேலும், தலைவன் தலைவியின் ஆயத்தாருடன் குரவைக் கூத்தாடியதால் இற்செறிக்கப்பட்டத் தலைவி (குறு. 294, அகம். 20, ஐங்.181), மழைபெய்யும் காலத்து கலைமான் கூட்டம் துள்ளி ஆடுகின்றதும், நெல்விளைந்து புதுவருவாயினை உடையதும் மழை வறண்ட காலத்து கழிமுள்ளி மலர்ந்து வெண்மையான உப்பு விளைவதுமான முல்லை, மருதம், நெய்தல் திணை வளங்களை ஒருங்கே பெற்ற தலைவியின் ஊர் (நற். 311), நெய்தல், செருந்தி மலருடன் மருதநிலமலரான குவளையும் சேர்ந்து மலரும் உப்பங்கழி (அகம். 150), அழகிய நெய்தல் மலரைத் தின்னும் எருமையைக் கொண்ட தாழையை வேலியாக

உடையதும் (அகம். 100), நெய்தல் மலருடன் வெண்ணெல்லும் விளையக் கூடியதுமான (ஐங்.190) மருதம் நெய்தல் என்ற இருதிணை வளங்களைக் கொண்ட தலைமக்களின் ஊர்கள், தண்ணுமை இசை ஒலிக்கும். மருதநில மூதூரை விடுத்து பாலை ஊர்களின் வழியாகப் பொருள் தேடச் சென்ற மருதநிலத்தலைவனைப் பற்றி (நற். 130) என்னும் பாடல்கள் பிறத்திணைக் கருப்பொருள்களானாலும் நெய்தல் நில ஒழுக்கத்திற்கு உறுதுணையாக அமைந்துள்ளன.

### 3.10.4. நெய்தலில் பாலை

கூகை பெரும்பாலும் மலையில் வாழ்வதாதலின் குன்றக் கூகை என்றும் இப்பறவை ஒலித்தலைக் குழறல் என்பர். அவ்வொலி அச்சத்தைத் தருவது மகளிர் அது கேட்டு அஞ்சுவர். கூகை பாலை நிலத்திற்குரிய கருப்பொருளாகும். இக்கூகை நெய்தல் திணைப் பாடலில் பயின்று வந்து நெய்தல் நிலத் தலைவியின் உணர்வை வெளிப்படுத்துவதாக அமைவதை,

> ‘‘பராரை வேம்பின் படுசினை இருந்த
> குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்
> ஆனா நோய் அடவருந்தி’’[151]

என்னும் இப்பாடலடி கூகையின் ஒலியைக் கேட்டு தலைவி துன்புறுவதைத் தெளிவுப்படுத்துகிறது. மேலும்,

> ‘‘கூகைச் சேவல் குராலோடு ஏறி,
> ஆர் இருஞ் சதுக்கத்து அஞ்சு வரக் குழறும்’’[152]

என்ற பாடலும் கூகையின் ஒலிக்கேட்டு துன்புறும் நெய்தல் நிலத் தலைவியின் உணர்வை வெளிக்காட்டுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை இத்திணைகளுக்குரியக் கருப்பொருள்கள் நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள் மயக்கமாக வந்தாலும் அவை இந்நில அகமாந்தர்களன் செயல்களை வெளிப்படுத்துவதாகவே வந்துள்ளமையை உணரமுடிகிறது.

இதுவரைக்கண்ட சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள கருப்பொருள்களை அட்டவணைப்படுத்தலாம்.

| கருப் பொருள்கள் | நெய்தல் | குறிஞ்சி | மருதம் | முல்லை | பாலை |
|---|---|---|---|---|---|
| தெய்வம் | புகார் தெய்வம் கடல்தெய்வம் | – | – | காமன் வல்லவன் | – |
| உயர்ந்தோர் | துறைவன் கிழவோன் கொண்கன் சேர்ப்பன் | குறும்பொபொ ற நாடன் | கான்கெழு நாடன் | நல்வயல் நாடன் | – |
| அல்லோர் | பரதவர், உமணர் | – | – | – | வேட்டுவர் |
| புள் | கடற்காக்கை, குருகு , சிறுவெண்காக்கை, நாரை, அன்றில் அன்னம் | – | – | வதிகுதிரை, வதிநாரை | கூகை, முதுபுள் , வாவல் |
| விலங்கு | அலவன், சுறா, இறா, மீன், குதிரை, இப்பி, வலம்புரிசங்கு | – | முயல் மாடு | எருமை | – |
| ஊர் | சேரி, கடற்படப்பை, மணற்படப்பை | – | – | மூதூர் | – |
| நீர் | துறை பணித்துறை | அருவி | – | – | – |
| பூ | நெய்தல், முண்டகம், செருந்தி அடும்பு | கோங்கு | முல்லை, கொன்றை | குவளை, தாமரை | குரம்பை , மாராஅ, குராஅ |
| மரம் | புன்னை, கைதை, ஞாழல், பெண்ணை | மூங்கில் | கொன்றை | மா | இடும்பை |
| உணவு | உப்பு, கள், மீன் விற்று வாங்கியப் பொருள் | – | – | நெல் | – |
| பறை | செவ்வரி | – | – | தண்ணுமை | – |
| யாழ் | செவ்வழி | – | – | – | – |
| பண் | செவ்வழி | – | – | – | – |
| தொழில் | சோலையில் விளையாடல், புள்ஓட்டல், மீன் வேட்டை, உப்பு வியாபாரம், உணக்கல், வலைமுடித்தல் | கோவலன் வெறியாடல் | குரவைக் கூத்தாடல் | செந்நெல் அரித்தல் | – |

நெய்தல் திணைப் பாடல்களில் வந்துள்ள கருப்பொருள்களாகும். நெய்தல்திணைப் பாக்களில் பிறத்திணைக் கருப்பொருள்களும் திணை மயக்கமாக வந்துள்ளபோதும் நெய்தலுக்கான ஒழுக்கத்திற்கே துணை புரிகின்றன. தமிழரின் முதல் இலக்கண நூலான தொல்காப்பிய உரையாசிரியர்கள் குறிப்பிடும் நெய்தல் நிலக் கருப்பொருள்கள் மட்டும் இடம்பெறவில்லை. பிறக் கருப்பொருள்களும் இடம்பெற்றுள்ளமையையும் பிற்கால இலக்கண நூலான நம்பியகப்பொருளுடன் நெய்தல் நிலக் கருப்பொருள்கள் மிகவும் பொருந்திச் செல்வதையும் காணமுடிகிறது.

### 3.11. தொகுப்புரை

தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் நெய்தல்திணைக்குரிய கருப்பொருள்களை குறிப்பிட்டுள்ளனர்.

இறையனார் அகப்பொருள், நம்பியகனப்பொருள், வீரசோழியம் ஆகிய இலக்கண நூல்களும் தொல்காப்பியத்தையே பின்பற்றியுள்ளன.

நெய்தல் நிலக்கருப்பொருள்களான சிறுவெண் காக்கை, வெண்குருகு போன்ற பறவை உப்பங்கழியில் உள்ள மீன்களைப் பிடித்து உண்பதும், தம் பெடைகளுக்குக் கொடுப்பதும் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவிக்கு தலைவனின் நினைவையும் தலைவியின் வருத்ததையும் மிகுதிப்படுத்தும் வகையில் பாடல்களில் வந்துள்ளன.

நெய்தல் நிலத்தலைவி இந்நிலத்தின் கருப்பொருளான புன்னை மரத்தை தன்னுடைய தங்கையாகக் கருதியப் பண்பினை அறியமுடிகிறது.

நெய்தல் நிலக்கருப்பொருளான அலவன் தலைவன், தலைவியின் இல்லறப் பண்பை உணர்த்து வகையில் பாடுபொருளாக வந்துள்ளன.

பெருங்கடல், முண்டக மலர், மாலை ஆகிய கருப்பொருள்கள் தலைவியின் ஊடலுக்கு காரணமாக அமைவதை நெய்தல்திணைப் பாடல்கள் உணர்த்துகின்றன.

தலைவியின் ஆற்றாமைக்கு நெய்தல் நிலக் கருப்பொருள்களான ஞாழல் மலர், செருந்தி மலர்கள், தண்ணியத் துறையும் காரணமாக வந்துள்ளன.

நெய்தல் நிலக் கருப்பொருளான கடல் மற்றும் பரதவ இன மக்களின் தொழிலாகிய உப்பு மற்றும் உப்பு விற்றல் ஆகிய நிகழ்வுகள் நெய்தல் நிலத் தலைவியின் காதலுக்குக் காரணமாக வந்துள்ளதை அறியமுடிகிறது.

நெய்தல் திணைப் பாடல்களில் திணைமயக்கமாக வந்துள்ள குறிஞ்சி நிலக் கருப்பொருள்களான குறும்பொறை நாடன், அருவி, கோங்கு, மூங்கில், வேலன் வெறியாடுதல் போன்றவைகள் வந்துள்ளன.

முல்லைத்திணைக்குரியக் கருப்பொருள்களான கான்கெழு நாடன், முயல், மாடு, முல்லை, கொன்றை, குரவைக்கூத்து கோவலர் குழல் ஊதுதல் போன்றவை நெய்தல் திணைப் பாடல்களில் பாடுபொருள்களாக வந்துள்ளன.

மருதநிலக் கருப்பொருளான காமன் வல்லவன், நல்வயல் நாடன், வதிகுருகு, வதிநாரை, எருமை, மூதூர், குவளை, தாமரை, மா, நெல், தன்னுமை செந்நெல் அரித்தல் போன்றவைகள் நெய்தல்திணைப் பாடல்களில் வந்துள்ளதை அறியமுடிகிறது.

பாலைநிலக்கருப்பொருள்களான வேட்டுவர், கூகை, முதுபுள், வாவல், குரம்பை, மராஅ, குராஅ, இடும்பை போன்றவை இடம்பெற்றுள்ளன.

இலக்கண நூலார் சுட்டாத பல கருப்பொருள்கள் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் வந்துள்ளன.

கருப்பொருள்கள் “வந்த நிலத்தின் பயத்தவாகும்” என்ற தொல்காப்பியரின் கருத்துக்கேற்ப மயங்கி வந்தாலும் கூட அவை அந்தந்த நிலத்திற்குரியதாகவே கொள்ளப்படும் என்பதை நெய்தல்திணைப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

நெய்தல்திணைக்குரிய கருப்பொருள்களும் பிறத்திணைக்குரிய கருப்பொருள்களும் பாடல்களில் வந்து நெய்தல் நிலத்தலைவன், தலைவி ஆகியோரின் காதல் ஒழுக்கத்திற்கு துணைபுரிவதாகவே அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. க.ப. அறவாணன், அற்றை நாட்காதலும் வீரமும், பக். 97–98
2. அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம், ப.48
3. பெ.மாதையன், அகத்திணைக்கோட்பாடும் சங்க அகக்கவிதை மரபும், ப.30
4. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), தொல். பொருள். அகத். (தொகுதி–3 பகுதி–1) சூ. 20
5. புத்தமித்திரனார், வீரசோழியம், ப.68
6. நாற்கவிராச நம்பி, நம்பியகப் பொருள், சூ.9
7. ஆ.சிவலிங்கனார் (ப.ஆ.), தொல்.பொருள். உரைவளம், அகத். ப.155
8. மேலது. ப.156
9. அ.அ.மணவாளன், மு.கா.நூல். ப.48
10. நல்லந்துவனார், கலித். பா.131 :1–3
11. போந்தைப்பசலையார், அகம்.பா.110:1–5
12. நெய்தல் தத்தனார், நற். பா.49:3–5
13. மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார், அகம்.பா.170 :11–12
14. உலோச்சனார், மேலது, பா.190 :11–13
15. கல்லாடனார், குறுந்.பா.269:3–4
16. கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட். வரி.86–87
17. பராயனார், நற்.பா.155 :6–7
18. எழுஉப்பன்றி நாகன்குமரனார், அகம்.பா.240 :8–10
19. அம்மூவனார், மேலது, பா.370:12–13
20. மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார், நற்.பா.303 :3–5
21. அம்மூவனார், மேலது, பா.4 :1–3
22. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), தொல். பொருள். அகத். சூ.20, ப.56
23. இளம்பூரணர், (உ.ஆ.), தொல். பொருள். அகத். ப.13
24. நம்பியகப்பொருள் விளக்கம், சூ.24
25. திவாகரமுனிவர், திவாகரநிகண்டு, சூ.135
26. மேலது, சூ.138
27. மேலது, சூ.136

28. பிங்கலமுனிவர், பிங்கல நிகண்டு, சூ.155
29. மேலது, சூ.153
30. உலோச்சனார், நற். பா.4 :5–6
31. அம்மூவனார், ஐங். பா.195 :1–2
32. உலோச்சனார், நற். பா. 354:7–8
33. அம்மூவனார், மேலது, பா.4 :11–12
34. மேலது, பா.4:.4
35. அம்மூவனார், மேலது,, பா.138:5–6
36. மதுரைத்தமிழ்க்கூத்தனார், கடுவன் மள்ளனார், அகம். பா.70, :3–4
37. உலோச்சனார், நற்.பா.38:4–6
38. நரிவெரூஉத்தலையார், குறுந்.பா.5 :4–5
39. அம்மூவனார், ஐங். பா.147
40. மேலது, பா.183
41. உலோச்சனார், நற்.பா.311:6–7
42. மேலது, அகம்.பா.20:1–3
43. தும்பிசேர்கீரன், குறுந்.பா.320:–2
44. உலோச்சனார், நற்.பா.331:3–6
45. குடவாயிற்கீரத்தனார், அகம்.பா.60:3–6
46. நக்கீரர், மேலது,பா.340:–15
47. பெருங்கண்ணனார், நற். பா.388:5–8
48. மருதன் இளநாகனார், மேலது, பா.392:3–5
49. அம்மூவனார், ஐங்.பா.168
50. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல். பொருள். அகத். சூ.18, உரை, ப.53
51. இளம்பூரணர், (உ.ஆ.), தொல்.பொருள். அகத். சூ.18, உரை ப.12
52. நக்கீரனார் உரை, இறையனார் அகப்பொருள், ப.20
53. சி.வை.தாமோதரம் பிள்ளை (உரை) வீரசோழியம் பொருளதிகாரம், பொருட்படலம், ப.68
54. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், சூ. 24
55. வெண்ணாகனார், அகம்.பா.170:11

56. குறுவழுதியார், மேலது, பா.150 :7
57. நக்கீரர், மேலது, பா.340:21
58. பேரிசாத்தனார், நற்., பா.199:6
59. ஆலம்பேரி சாத்தனார், மேலது, பா.303 :11
60. கல்லாடனார், குறுந்.பா.269:3
61. கவைமகன், மேலது, பா.324, வரி.1–2
62. மிளைகிழான் நல்வேட்டன், மேலது, பா.341:3
63. ஆசிரியர் பெயர் இல்லை, நற்.பா.385:3–4
64. பெருங்கண்ணனார், அகநானூறு, பா.80:1–3
65. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், பா.154
66. நெடுஞ்சேரலாதன், அகம்.பா.30:5–6
67. உலோச்சனார், மேலது, பா.190 :11–14
68. குமுழிஞாழலார் நப்பசலையார், மேலது, பா.160 :3–8
69. பாவலரேறு ச.பாலசுந்தரனார், (உ.ஆ.), தொல்.பொருள். தொகுதி–2, பகுதி–2, மரபியல், சூ.31–1
70. சேந்தன் கண்ணனார், அகம்.பா.350:3–4
71. கபிலர், நற்.பா.267:1–2
72. கலைக்களஞ்சியம், தொகுதி–4 ப.369
73. சிங்காரவேலுமுதலியார், அபிதானசிந்தாமணி, ப.548
74. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், மனையறம்படுத்தக்காதை, வரி.73
75. கணிமேதாவியார், திணைமாலை நூற்றைம்பது, பா.33: 1–2
76. சேந்தங்கண்ணனார், அகம்.பா.350:11–12
77. ஔவையார், குறுந்.பா.15 வரி.1
78. மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சி, 380
79. மேலது, 621
80. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், மங்கலவாழ்த்து, 45–46
81. குறுவழுதியார், அகம்.பா.150:7
82. அம்மூவனார், ஐங். பா.106
83. ஆ.பெ.இல்லை, நற்.பா.72:7–8

84. சேந்தங்கண்ணனார்,அகம்.பா.350:9–10

85. திருவாவடுதுறை ஆதீனம், நவமணிகள், ப.76

86. சிங்காரவேலுமுதலியார், அபிதானசிந்தாமணி, ப.1334

87. மாங்குடிமருதனார், மதுரைக்காஞ்சி, 134–138

88. நச்சினார்க்கினியர்,(உ.ஆ.), தொல். பொருள். அகத்.சூ.18 நெய்தல் கருப்பொருள் உரைவிளக்கம்

89. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள், நூ.24:6–8

90. நெய்தல்தத்தனார், நற்.பா.49:8–9

91. பேரிசாத்தனார், மேலது, பா.67:6

92. உலோச்சனார், மேலது, பா.249, வரி.1

93. குன்றியனார், அகம்.பா.40:1

94. நல்லந்துவனார், கலித். பா.123:1

95. அம்மூவனார், ஐங். பா.189:1–2

96. உலோச்சனார், நற்.பா.203:1–6

97. வெண்கண்ணனார், அகம்.பா.130:7–8

98. நெய்தல்தத்தனார், நற்.பா.49:9–10

99. கோக்குளமுற்றனார், மேலது, பா.96:1–3

100. மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார், அகம். பா.70:.9–10

101. அம்மூவனார், ஐங்.பா.103:1–2

102. ஆலந்தூர் கிழார், புறம். பா.225:1–5

103. உலோச்சனார், நற்.பா.354:1–3

104. ஆலம்பேரி சாத்தனார், மேலது, பா.303:3–4

105. மேலது, பா.338:8–9

106. இ.வை. அனந்தராமையர், கலித்தொகை (ஆராய்ச்சிக்குறிப்புரை), பா.826

107. ஆ.பெ.இல்லை, நற்.பா.195:1–3

108. அம்மூவனார், ஐங். பா.131

109. நல்லந்துவனார், கலித். பா.133:1–2

110. அம்மூவனார், குறுந்.பா.49:1

111. குன்றியனார், மேலது, பா.51:1

112. அல்லங்கீரனார், நற்.பா.245:2–3

113. அம்மூவனார், ஐங். பா.121:.2–3

114. கடுவன் மள்ளனார், அகம்.பா.70:10–11

115. அம்மூவனார், ஐங். பா.151:2–3

116. ஔவைதுரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப.302

117. உலோச்சனார், நற்.பா.254: 2

118. உலோச்சனார், குறுந்.பா.248: 5

119. நல்லந்துவனார், கலித். 132:16

120. மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார், அகம்.பா.80:7–9

121. டாக்டர் உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், ப.60

122. அவ்வை துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்க உரையும், ப.312

123. உலோச்சனார், குறுந்..205:1–5

124. மேலது, பா.177:1–4

125. நல்லந்துவனார், பா.129:11

126. கருவூர்ப்பூதஞ்சாத்தனார், அகம்.பா.50:11–12

127. மதுரைக்கண்ணத்தனார், மேலது, பா.360:16–17

128. ச.சாம்பசிவன், தமிழ் இலக்கியத்தில் நெய்தல்திணை, ப.37

129. ஔவைதுரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் உரையும் , ப.398

130. இளம்பூதனார், குறுந்.பா.334:1

131. முக்கல் ஆசான் நல்வெள்ளையார், நற்றிணை, பா.272:1

132. அம்மூவனார், ஐங்குறுநூறு, பா.164:1–2

133. மேலது, குறுந்.பா.313:1–3

134. நக்கீரனார், நற்.பா.31

135. ஆ.பெ.இ, மேலது, பா.172

136. மருதன் இளநாகனார், அகம்.பா.380:3–8

137. அம்மூவனார், ஐங். பா.121

138. மேலது, பா.123

139. மேலது, பா.126

140. மேலது, பா.141

141. மேலது, அகம்.பா.140

142. மேலது, பா.390

143. வெள்ளிவீதியார், நற்.பா.335

144. அல்லங்கீரனார், நற்.பா.245

145. அம்மூவனார், ஐங். பா.183

146. நல்லந்துவனார், கலித். பா.142:31–34

147. மேலது, பா.129

148. நல்வெள்ளையார், நற்.பா.369:3–8

149. ஆ.பெ.இல்லை, மேலது, பா.45

150. ஔவையார், குறுந்.பா.200

151. கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார், நற். பா.218:7–8

152. வினைத்தொழிற் சோகீரனார், மேலது, பா.319:4–5

# உரிப்பொருளமைவு

## 4.0. முன்னுரை

உரிப்பொருள் என்பது மக்கட்கு உரிய உயிர் பொருளாகும். அறவாழ்க்கையான சங்ககால மக்களுடைய இல்லற வாழ்க்கையின் அடிப்படை உரிப்பொருள் என்ற உணர்வுப் பொருளாகும். அகமாந்தர்கள் தங்கள் உணர்வுகளை அதன் வன்மை மென்மைக்கேற்ப பல்வகை உத்திகளில் கையாண்டு வெளியிட உரிப்பொருள்கள் உதவுகின்றன. அகமாந்தர்களின் அன்பையும், எதிர்ப்பார்ப்பையும், பிரிவையும், ஏக்கத்தையும், ஆற்றியிருத்தலையும், வருத்தத்தையும் வெளிப்படுத்த உதவும் மிகச்சிறந்த கருவியாக உரிப்பொருள்கள் பயன்படுகின்றன. இவ்வுரிப் பொருள்கள் புணர்தல், இருத்தல், இரங்கல், பிரிதல், ஊடல் என்ற உணர்வுகள் அடிப்படையில் அமைந்துள்ளன. அகமாந்தர்களின் மனநிலைப் பாகுபாட்டையே உரிப்பொருளாக அமைத்துச் சங்கப்புலவர்கள் பாடல் இயற்றியுள்ளனர். அவ்வகையில் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் அமைந்துள்ள உரிப்பொருள் அமைப்பைப் பற்றி இவ்வியல் ஆராய்கின்றது.

## 4.1. உரிப்பொருள் – விளக்கம்

அகப்பாடல்களின் பாகுபாட்டிற்கு அடிப்படையாய் அமைவது உரிப்பொருளாகும். இப்பாடல்களில் முதல், கரு, உரி என்ற மூன்று பொருள்களும் அமைந்திருப்பது சிறப்பானது. இம் மூன்று பொருள்களில் முதல்கரு இல்லாவிட்டாலும் உரிப்பொருள் கட்டாயமாக அமைந்திருக்கும். உரிப்பொருள் பாட்டினில் இல்லையெனில் அப்பாடலை அகப்பாட்டாகக் கொள்வதில்லை. அகப்பாட்டினுள் வரும் ஒழுக்கமாகிய உரிப்பொருள் ஒருவருக்கு மட்டுமே உரியது அன்று. மக்கள் எல்லோருக்குமே பொதுவான பொருளாகும்.

தொல்காப்பியத்தில் உரிப்பொருள்களாகப் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் அவற்றின் நிமிர்த்தங்கள் என்கின்றன. ‘உரிப்பொருள் என்ற

சொல்லிற்கு இலக்கண, இலக்கிய உரையாசிரியர்கள் பல்வேறு விளக்கங்களைக் கூறுகின்றனர்.

“உரிப் பொருளாவது, மக்கட்கு உரியபொருள். அஃது அகம், புறம் என இருவகைப்படும். அகமாவது, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை, பெருந்திணை எனவும் எழுவகைப்படும்’’[1] என்பர் இளம்பூரணர். புணர்தல் முதலான ஐவகை உரிப்பொருள்களிலேயே சங்க இலக்கிய அகப்பாடல்கள் பெரும் பான்மையாகக் காணப்படுகின்றன. கைக்கிளை, பெருந்திணை என்னும் உரிப்பொருளில் சில பாடல்கள் அமைகின்றன. உரிப்பொருள் என்பதை, “உயரிய மாந்தப் பிறப்பின் உரிமையாய் அமைந்த ஒழுக்கப் பொருள்’’[2] என்று நச்சர் கூறுவர். இளம்பூரணர் உரிப்பொருளினை அகம், புறம் என்று வகைப்படுத்தி, அவற்றுள் அகத்திணைக்கு மட்டும் விளக்கம் தந்துள்ளார். புறப்பொருள் பற்றிய உரிப்பொருள் கோட்பாட்டை விளக்கம் செய்யாதது சிந்தனைக்குரியது. “அகத்திணைக்கு மட்டுமே உரிப்பொருளை உரிமைப் படுத்தியதன் மூலம் இலக்கியத்தின் எல்லையை இலக்கண ஆசிரியர்கள் குறைக்கத்தான் செய்தனர். புறத்திணைகளையும் உள்ளடக்கி உரிப்பொருள் குறித்து இலக்கணக்காரர்கள் ஆய்ந்திருக்க வேண்டும்’’[3] என்று ஞானிகுறிப்பிடுகிறார்.

சங்க அக இலக்கியத்தின் முப்பொருள் பாகுபாட்டில் முதன்மை பெறுவது உரிப்பொருளாகும். அகப்பாட்டில் உரிப்பொருளின் புலப்பாட்டினை சி.நாச்சிமுத்து, “ஒரு பாடலில் உரிப்பொருள் பொலிவு பெறும் அடிப்படைத் தொடர் அமையும் பகுதியைக் கருத்துப் புலப்பாட்டு பகுதியெனவும், வருணனை, உவமை என அதை விளக்கவருபவற்றை மெருகூட்டும் பகுதியெனவும் கொண்டு கவிதையில் இவை எவ்வாறு இணைக்கின்றன என்பதை கட்டமைப்பாக விளக்குகிறது’’[4] என்று கூறுவது அறியத்தக்கது. மேலும் ந.சுப்புரெட்டியார், “பண்டையோர் மக்கட்குரிய பொருளை உரிப்பொருள் என்று குறிப்பிடுகின்றனர். உரிப்பொருள் மக்கள் வாழ்க்கையொட்டி இருக்கும், அவர்கள் வாழும் வாழ்க்கை நெறியே ஒழுக்கம் .

உரிப்பொருள் என்று கூறினும் தவறாகாது. உரிப்பொருளை தமிழர்கள் ஐந்து பகுதிகளாகப் பிரித்துக் காட்டியிருக்கின்றனர். ஐந்து திணைக்கும் தனித்தனியாக ஐந்து வகை ஒழுக்கத்தை வரையறை செய்திருக்கின்றனர். திணை என்ற சொல்லுக்கே ஒழுக்கம் என்ற பொருள் உண்டு''[5] என உரிப்பொருளினைக் குறித்து விளக்கம் தருகிறார்.

**4.2.தமிழிலக்கண நூல்களில் உரிப்பொருள்**

**4.2.1.தொல்காப்பியம்**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை முதலிய ஐந்து நிலங்களுக்கும் உரிய ஒழுக்கத்திணை தொல்காப்பியர்,

> ''புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
> ஊடல் அவற்றின் நிமிர்த்தம் என்றிவை
> தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே''[6]

எனும் நூற்பாவில் விளக்குகிறார். ஐந்திணைகளாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவை மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்களாக இருந்தன. அவற்றுள் குறிஞ்சி காதலர் இருவர் மனமொத்து களவு மணஞ்செய்வதைக் குறிக்கும். முல்லை மணமுடித்த பெண் இல்லறநிலையிலே இருக்கும் போது கணவனின் பிரிவினை ஆற்றிருப்பதைக் குறித்து நிற்கும். மருதம் தலைவனின் பரத்தமை ஒழுக்கங்காரணமாக தலைவி ஊடல் கொள்வதைக் குறித்து நிற்கும் நெய்தல், கடல்மேற் சென்ற தலைவனின் பிரிவாற்றாது தலைவி இரங்கி நிற்பதைக் குறித்தும், பாலை தலைவன் தலைவியை விட்டுப் பொருளீட்டல் ஓதல், தூது, பகை போன்ற வினை வயிற் பிரிதலைக் குறித்தும் நிற்பனவாகும். திணை ஒழுக்கத்தை மக்களின் அக வொழுக்கமாகவே சங்கப் பாடல்களில் புலவர்கள் பாடியுள்ளனர்.

இளம்பூரணர் உரிப்பொருள் பற்றிய தொல். பொருள்.அகம். சூ.16 விளக்கம் தருகையில், ''புணர்தலும், பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் இவற்றின்

நிமிர்த்தமும் என்று சொல்லப்பட்ட இவை ஆராயுங்காலத்து ஐந்திணைக்கும் உரிப்பொருளாம் ஏனைய மொழிந்த பொருளோடொன்ற வைத்தல் (மரபு 110) என்னும் தந்திர உத்தியால் புணர்தல் என்பது குறிஞ்சிக்கும், இருத்தல் என்பது முல்லைக்கும், இரங்கல் என்பது நெய்தற்கும், ஊடல் என்பது மருதத்திற்கும் பெரும்பான்மையும் உரித்தாகவும் சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திசைக்கும் உரித்தாகவும் கொள்ளப்படும். இருத்தலாவது, தலைமகன் வருந்துணையும் ஆற்றியிருத்தல், இரங்கலாவது ஆற்றாமை''[7] என்கிறார்.

அகப்பொருள் நிகழ்ச்சிக்கு முதல், கரு, உரிப்பொருள்கள் உறுப்புகளாக அமைகின்றன. அகத்திணைக்கு உரிப்பொருள்தான் உயிர்நாடியாக உள்ளது. ''உரிப்பொருளாகிய காதல் நிகழ்ச்சியை இன்ன நிலத்தில் இன்ன பொழுதில் இன்ன பொருள்களைச் சூழ்நிலையாக அமைத்துக் கவிஞர்கள் கவிதையை ஆக்கும் பொழுது இம்மூவகைப் பொருள்களும் காட்சியளிக்கும். ஒரு பாடலில் இந்தப் பொருள்கள் அனைத்தும் வரவேண்டும் என்ற வரையறை இல்லை. சில வரக்கூடும். சில வராமல் இருத்தலும் கூடும். உரிப்பொருள் மட்டும் கட்டாயம் வருதல் வேண்டும்''[8]என்று ந.சுப்புரெட்டியார் அகத்திணைப் பாடல்களுக்கு உரிப்பொருளின் அவசியத்தைக் கூறுகிறார்.

குறிஞ்சித்திணைக்குரிய உரிப்பொருளினைக் குறித்து நச்சினார்க்கினியர், ''நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழுமேனும் முற்பட்ட புணர்ச்சியே புணர்தற் சிறப்புடைமையிற் குறிஞ்சியென்று அதனை முற்கூறினார். அவை இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கற் கூட்டமும் தோழியிற் கூட்டமும் அதன் பகுதியாகிய இருவகைக் குறையுறும் பகுதியும் ஆண்டுத் தோழி கூறுவனவுங் குறைநேர்தலும் மறுத்தலும் முதலியன புணர்ச்சி நிமிர்த்தம்''[9] என்று குறிஞ்சியின் உரிப்பொருள் கோட்பாட்டைக் கூறுகிறார்.

அடுத்து பாலைத்திணையின் உரிப்பொருளைப் பற்றிக் குறிப்பிடுகையில் ''ஓதலுந் பகையும் தூதும் அவற்றின் பகுதியும் பொருட்பிரிவும் உடன் போக்கும்

பிரிவு ‘ஒன்றாத் தமரினும் பருவத்துஞ் சுரத்துந் தோழியொடு வலித்தன’ முதலியன பிரிதல் நிமித்தம். பிரிந்த பின் தலைவி வருந்துவனவும் தோழி ஆற்றுவித்தனவும் பாலையாதலிற் பின்னொரு காற் பிரிதற்கு நிமித்தமாம். அவை பின்னர்ப் பிரியும் பிரிவிற்கு முன்னிகழ்தல்’’[10] என்று விளக்குகிறார்.

முல்லைதிணையில் உரிப்பொருளான இருத்தலைப் பற்றிக் கூறும் போது, ‘‘தலைவி பிரிவுணர்த்திய வழிப் பிரியாரென்றிருத்தலும், பிரிந்துழிக் குறித்த பருவமன்றென்று தானே கூறுதலும், பருவம் வருந்துணையும் ஆற்றியிருந்தமை பின்னர்க்கூறுவனவும் போல்வன இருத்தல். அப்பருவம் வருவதற்கு முன்னர்க் கூறுவன முல்லை சான்ற கற்பு அன்மையிற் பாலையாம். இனிப் பருவங்கண்டு தலைவி ஆற்றாது கூறுவனவும், தோழி பருவமன்றென்று வற்புறுத்தினவும், வருவரென்று வற்புறுத்தினவும், தலைவன் பாசறைக் கண் இருந்து உரைத்தனவும், அவைப் போல்வனவும் நிமித்த மாதலின் இருத்தனிமித்தம் எனப்படும்’’[11] என்கிறார்.

நெய்தல் நிலக்கருப் பொருள் இரங்கலாகும், இதனை ‘‘கடலுங் கானலுங் கழியுங் காண்டொறும் இரங்கலும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப் புள்ளுங் கண்டு இரங்கலும் போல்வன இரங்கல் அக்கடல் முதலியனவும், தலைவன் நீங்குவனவு மெல்லாம் நிமித்தமாம்’’[12] என்கிறார். நச்சினார்க்கினியர். அடுத்து மருதநில ஒழுக்கமாகிய ஊடலைப் பற்றிக் கூறும் போது, ‘‘புலவி முதலியன ஊடலாம் பரத்தை, பாணன், முதலியோர் ஊடனிமித்தமாம்’’[13] என்று ஐந்திணைகளுக்குரிய ஒழுக்கங்களைக் குறிப்பிடுகின்றார்.

### 4.2.2.இறையனார் அகப்பொருள்

தொல்காப்பியரைப் பின்பற்றி உரிப்பொருளை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் அவற்றின் நிமித்தம் என வகைப்படுத்துகிறது.

‘‘புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி;

பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை;

இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லை;

இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல்;

ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதம்''[14]

என்று ஐந்திணைகளுக்கும் உரிய உரிப்பொருள்களைப் பற்றி விளக்குகிறது.

**4.2.3.வீரச்சோழியம்**

ஐந்திலக்கணம் என்னும் அமைப்பில் கிடைத்துள்ள முதல் நூல் வீரசோழியமாகும். இது குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்திணைகளை வரிசைப்படுத்துகின்றது. நெய்தல் நிலத்தின் இரங்கல் உரிப்பொருளுக்கு கடல், கானல், புன்னை ஆகியவை துணை செய்வன தலைவன் பிரிவால் தனிமைத்துயர் கொண்டு தலைவி ஆற்றாது இரங்குதல் இத்திணையின் உரிப்பொருள் ஆகும்.

''வானோர் வருணன் முதலை நுளைய ரிரங்கல் கைதை

தேனே தருமொழி யாய்! அந்தி நெய்தல் தெளிந்தறியே!''[15]

என்னும் நூற்பா நெய்தலின் உரிப்பொருளை விளக்குகிறது. தலைவன் பிரிவால் தலைவியின் உடல் மெலிவதோடு அவளுக்கு பசலையும் ஏற்படும். இதனை வீரசோழிய உரையாசிரியர்,

''கடலுங் கழியுங் கைதையுங் கானலும்

மடலிரும் பெண்ணையும் வான்சிறைப் புள்ளும்

கழுமிப விருளும் கதிரொளி மதியும்

பொழுதுங் காற்று மென்றிவை''[16]

என்னும் நெய்தல் நடையியல் கொண்டு விளக்குகிறார்.

**4.2.4.நம்பியகப்பொருள்**

தொல்காப்பியத்திற்குப் பிறகு தோன்றிய இலக்கண நூல்களில் நம்பியகப்பொருள் குறிப்பிடத்தக்கது. இதில் உரிப்பொருள், கைக்கிளை, பெருந்திணை, ஐந்திணை என மூன்றாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. உரிப்பொருளைப் பற்றிக் கூறுகையில் தொல்காப்பியத்தையே பின்பற்றியுள்ளன.

‘‘புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றினி மித்ததமு மெனவாங்
கெய்திய உரிப்பொருள் ஐயிரு வகைத்தே’’[17]

என்று உரிப்பொருளினை உணர்த்துகிறது. தொல்காப்பியம் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என உரிப்பொருளை வரிசைப்படுத்துகிறது. ஆனால் நம்பியகப்பொருள் புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்ற வரிசை முறையில் அமைந்துள்ளது.

**4.2.5.மாறனகப்பொருள்**

திருக்குருகைப்பெருமாள் கவிராயரின் இந்நூல் உரிப்பொருளின் பாகுபாட்டினை,

‘‘பாடலுட் புணர்தல் பிரித லிருத்த
லூடலிரங் கல வற் றினி மித்த மென்றா
யிரண்டைந் திணைக்கமைத்த வுரிப்பொருள்’’[18]

என்ற நூற்பாவில் விளக்குகிறது. தொல்காப்பியரைப் போலவே உரிப்பொருளின் வைப்பு முறை பின்பற்றப்பட்டுள்ளது.

கருப்பொருளும் பொழுதும் உரிப்பொருள் ஒழுக்கத்திற்கு துணை செய்கின்றன. உரிப்பொருள் மக்களின் ஒழுக்கத்தையே குறித்தமையால் அகப்பாடல்களின் முக்கியப் பாடுபொருளாக அமைந்துள்ளது. அன்பின்

ஐந்திணையாகச் சிறப்பித்துக் கூறப்படும் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் போன்றவை மனிதனின் மனஉணர்வுகளை வெளிப்படுத்தும் குறியீட்டுச் சொற்களாகவே அமைந்துள்ளன.

அகப்பாடல்களின் திணையை வரைறயை செய்வதில் பல்வேறு இடர்பாடுகள் ஏற்படுகின்றன. கருப்பொருள்களில் ஒரு நிலத்திற்குரிய கருப்பொருள் இன்னொரு நிலத்தில் மயங்கி வரும் போது, உரிப்பொருள்களைக் கொண்டே வகைப்படுத்தப்பட்டுள்ளன. இதனாலேயே உரிப்பொருள் அகப்பாடல்களுக்கு அடித்தளமாகவும் இப்பாடல்களின் உணர்ச்சியை வெளிப்படுத்தும் வகையிலும் அமைந்துள்ளன. சங்கப்புலவர்கள் உரிப்பொருள்களின் வாயிலாகவே பாடல்களின் கருத்தைப் புலப்படுத்துகின்றனர். முதல் கரு உரி என்னும் மூன்றுபொருளும் அகப்பாடல்களுக்கு அடிநிலையாய் வேண்டுவதன் இன்றியமையாமை புலப்படும். உரிப்பொருளே ஒழுக்கநிலையை உணர்த்துவனவாயினும் அவ்வொழுக்கம் நிகழ முதற்பொருளும் கருப்பொருளும் ஏற்புடையனவாய் அமைந்து விளங்குதல் வேண்டும். அப்பொழுது தான் குறித்ததொரு இன்பவொழுக்கம் சிறந்து காணப்படும்''[19] என்கிறார் மு.சண்முகம்பிள்ளை.

| தொல் | இறை.அக.வி. | வீர. | நம்.அக.பொ. | மா.அ.பொருள் |
|---|---|---|---|---|
| புணர்தல் | புணர்தல் | புணர்தல் | புணர்தல் | புணர்தல் |
| பிரிதல் | பிரிதல் | இரங்கல் | பிரிதல் | பிரிதல் |
| இருத்தல் | இருத்தல் | பிரிதல் | இருத்தல் | இருத்தல் |
| இரங்கல் | இரங்கல் | ஊடல் | ஊடல் | ஊடல் |
| ஊடல் | ஊடல் | இருத்தல் | இரங்கல் | இரங்கல் |

தொல்காப்பியத்தைப் பின்பற்றி இறையனார் அகப்பொருள் உரிப்பொருளை வைப்புமுறை செய்துள்ளது. நம்பியகப்பொருளைப் போலவே மாறனகப்பொருள், போன்ற நூல்கள் உரிப்பொருளை புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்னும் முறையில் வரிசைப்படுத்துகின்றது. நெய்தல் திணையின்

உரிப்பொருளான இரங்கலை இறுதியாக வைக்கின்றது. வீரச்சோழியம் மட்டும் புணர்தல், இரங்கல், பிரிதல், ஊடல், இருத்தல் என்ற முறையில் வரிசைப்படுத்தியுள்ளது. இரங்கலை இரண்டாம் நிலையில் வைத்துளளது.

### 4.3.இரங்கல் உணர்வின் சிறப்பு

வினையின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவனை எண்ணி வருந்துவாள் தலைவி. கிழத்திக்குக் கடலும் கழியும் கானலும் காணும் தோறும் ஆற்றாமையைத் தோற்றுவிக்கும். எனவே இச்சூழ்நிலை இரங்கலை உணர்த்துவதற்கு ஏற்றதாகும். ‘‘இரங்குவது பெரும்பாலும் மனைவி என்ற அகத்திணைச் செய்யுட்கள் ஒரு முகமாக உரைக்கின்றன. இங்ஙனம் இரங்கி இருத்தற்கடையாளமாக மனைவி நெய்தல் பூவைச் சூடிக்கொள்வாள். எனவே, நெய்தல் பூ சூடி இரங்கியிருக்கும் ஒழுக்கத்திற்கு நெய்தல்திணை என்று பெயர்’’[20] என்று அ.கி.நாயுடு சுட்டுவதன் மூலம் இரங்கலின் சிறப்பை அறியலாம்.

நெய்தல் நிலக்கடவுளாக வருணன் இடம்பெறும் இந்நிலம் பெருமணற் பகுதியாகிய கடற்பரப்பைக் கொண்டது. ஞாயிறு மறையும் பொழுதாகிய எற்பாடும் அங்குத் தோன்றுகின்ற கருப் பொருளும் இரங்கல் உரிப்பொருளுக்கு துணை செய்வதாக உள்ளன.

### 4.4.நெய்தல்திணைசார் ஒழுக்கங்கள்

நெய்தல்திணைப் பாடல்களில் உள்ள முதற் பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளினைச் சிறப்பிக்க வந்துள்ளமையை பாடல்களில் இடம்பெறுள்ள இயற்கைப் பின்னணியின் மூலம் அறியலாம். நெய்தல் நிலத்தலைவனின் பிரிவுகள் நெடியப் பிரிவுகளே ஆகும். தலைவன் கூறிய காலம் வர தாமதம் ஆயின் தலைவி பிரிவாற்றாமையால் தலைவனை எண்ணி வருந்துவாள். ‘‘கடலும் கடல்சார்ந்த இடமும் கொண்டு விளங்குவதால் நெய்தல் மீன்வளம் நிறைந்த பகுதியாகும். மீன்பிடிக்கக் கடலிலே கட்டுமரமேறிச் செல்வதே பெரும்பாலும் ஆடவர் தொழில். ஆதலின் அவர் குறித்த பொழுது வராத நிலையில் தலைவியர் கடலையே

வெறித்துப் பார்த்து இரங்கலும் இரங்கல் நிமித்தமாக எழும் பேச்சுக்களும் இந்நிலத்திற்கு உரிய ஒழுக்கம்''[21] என்று மு.கோவிந்தராசன் கூறுகிறார்.

கடல், கானல், கழிகாணும் தோறும் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆற்றாமை பெருகும். மாலைப் பொழுதில் புணர்ந்து செல்லும் பறவைக் கூட்டங்களை எண்ணி ஆற்றாமை உண்டாகும். பறவைகள் தன் பெடையோடு கூடி வாழும் போது தலைவனை விட்டுத் தான் தனித்து இருப்பதால் ஆற்றாதிரங்குவாள். கணவன் தன்னைப்பிரிந்து மீன்பிடிக்க நெடும் பயணம் சென்றிருப்பதால் அதனை எண்ணி ஆற்றாது இரங்குவாள். தலைவனுடைய நெடும் பயணத்தால் தலைவியின்உடல் மெலிவும், பசலையும் ஏற்படும். மேலும் அவள் ஆற்றாது இரங்குவதும் உண்டு இவை நெய்தல் திணைப் பாடல்களில் நடைபெறுகின்றன.

### 4.4.1.தலைவன் காதலில் ஆற்றாமை

தலைவியின் காதல் ஒழுக்கத்தினை அறிந்த பெற்றோர் அவளை இற்செறித்தனர். அங்கு வந்த தலைமகன் அதனை அறிந்து ஆற்றாதவனாகி, நான் தலைவியுடனான முயக்கத்தை நினைத்துக் கடலின் ஓசையும் அடங்கிவிட்ட இந்த நள்ளிரவிலும் கூட உறங்காமல் இருக்கிறேன். இனி என்னிலை எத்தன்மையாய் முடியுமோ அறியேன் என்று தன் பிரிவுத் துயரினை,

''அணங்கு கால்கிளரும் மயங்கு இருள் நடுநாள்
பாவை அன்ன பலர் ஆய் வனப்பின்
தடமென் பனைத்தோள் மடம் மிகுகுறுமகள்
சுணங்கு அணிவன முலை முயங்கல் உள்ளி
மீன்கண் துஞ்சும் பொழுதும்
யான் கண் துஞ்சேன் யாது கொல்நிலையே''[22]

தலைவியுடனான களவும் தொடராத நிலையில் தானும் தன் காதலும் என்னாகுமோ எனக் கவன்று உரைத்த தலைவனின் மொழி நெய்தலின் உரிப்பொருளான இரங்கல் உணர்வை வெளிப்படுத்துகிறது.

### 4.4.2.தலைவன் வரைவிடைப் பிரிவு

தலைவன் வரைவிடைக் காலத்தில் பிரிந்தவிடத்து தோழியிடம் தலைவி, கழிச்சோலையிலுள்ள கடற்கரைப் பகுதியின் தலைவன் என்னைப் பிரிவானாயின், என்னுடைய இனிய உயிரே யன்றி நான் இழக்கும் பொருள் வேறு யாதும் இல்லை என மனமழிந்த நிலையினை,

"இருநீர்ச் சேர்ப்பின் நீப்பின் ஒருநம்
இன்உயிர் அல்லது பிறிது ஒன்று
எவனோ தோழி நாம் இழப்பதுவே ?"[23]

என்னும் தலைமகனின் பாடலடிகள் இரங்கல் உணர்வை வெளிப்படுத்துகிறது. மேலும், தலைவி தலைவன் பலகாலும் தன் பிரிவினை உணர்த்திய பொழுதெல்லாம் நான் வஞ்சச் செலவு என்றெண்ணி என் சுற்றம் அற்றவளாகத் தனிமையில் நிலைபெற்று நீ இல்லாமல் வாழ்வேன் என்று கூறிப் பிரிவிற்கு உடன்பட்டேன் தனிமையில் வருந்தும் பொழுதெல்லாம் எனக்குப் பற்றுக் கோடாக விளங்கிய தலைவன், இன்று எங்குள்ளானோ என்று தலைவி அழுது இரங்கல் உணர்வோடு தோழியிடம் மெலிந்து உரைத்ததை,

"சேறும் சேறும் என்றலின் பண்டைத் தம்
மாயச் செலவாச் செத்து மருங்கு அற்று
மன்னிக் கழிக என்றேனே அன்னோ
ஆசு ஆகு எந்தை யாண்டு உளன் கொல்லோ ?
கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குளம் ஆயிற்று என்இடைமுலை நிறைந்தே"[24]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

வருவதாகக் கூறிப் பிரிந்து சென்ற தலைவன் வாராமையால் வெறுப்புற்று, துறைவனை நயத்தலாகிய பெரிய பிழையைச் செய்த என் அறிவில்லாத நெஞ்சிற்கு

இப்பொழுது அஃது அடையும் துயரம் தகுதியான தண்டனை என்று தலைவி தன் நெஞ்சினை நொந்துரைப்பதனை,

"பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை
கருங் கோட்டுப் புன்னைத் தங்கும் துறைவற்குப்
பயந்து நுதல் அழியச் சாஅய்
நயந்த நெஞ்சம் நோய்ப் பாலஃதே"[25]

என்ற பாடல் உணர்த்துகின்றன.

### 4.4.3.தோழியைத் தலைவி ஆற்றுவித்தல்

களவுக்காலத்தில் கடற்கரைச் சோலையில் மாலைப் பொழுதில் காத்திருந்த தலைவி காதலன் வாராததால் ஆற்றாது வருந்தினாள் தான்படும் துயரத்தால் தோழியும் துயருறுவதைக் கண்டு, தோழி நம்மைப் பிரிந்த தலைவரை எண்ணி அவர் பிரிவுக்காக மிக வருந்தி நம் அரிய உயிர் நம்மை விட்டு நீங்கிப் போவதாயினும், அத்துன்பம் பிறருக்குப் புலனாகாதவாறு நாம் மறைத்துக் கொள்ளவேண்டும் என்று ஆற்றாமையுடன் உரைப்பதை,

"துறந்தோர் தேஎத்து இருந்து, நனிவருந்தி
ஆர் உயிர் அழிவது ஆயினும் – நேரிழை
கரத்தல் வேண்டுமால் மற்றே பரப்பு நீர்த்
தண்ணம் துறைவன் நாண
நண்ணார் தூற்றும் பழிதான் உண்டே"[26]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. தலைவன் பிரிவாள் தலைவி அடைந்த தனிமைத் துயரும் இத்துயரினால் தோழி அடைந்த துயரும் அத்துயரினால் தலைவி தன் துயரினை அடக்கிக் கொள்ளுதலும் நெய்தலின் உரிப்பொருளான இரங்கலைத் தெளிவாய் உணர்த்துகின்றன.

### 4.4.4. தலைவி பிரிவு ஆற்றாமை

தலைவன் பிரிவை தாங்காமல் தலைவி மாலைப்பொழுது கண்டு அதனுடன் தனியே வருந்தியும் புலந்தும் கூறுவதனை,

"மாலையும் அலரும் நோனாது எம்வயின்
நெஞ்சமும் எஞ்சும்மன் தில்ல– எஞ்சி
உள்ளாது அமைந்தோர் உள்ளும்
உள்இல் உள்ளம் உள்உள் உவந்தே"[27]

என்னும் பாடலடிகளில் தலைவன் பிரிந்து எம்மை நினையாது உள்ளன்பு இல்லாத உள்ளத்துடன் இருப்பவரை எண்ணி எண்ணி உவந்து உள்ளுகின்றது நம்முடைய நெஞ்சம் இம்மாலையும் ஊரார் கூறும் அலரையும் பொறாதே நெஞ்சமும் நம்மை விட்டுப்போகா நின்றது. இனி என்ன செய்வேன் என்று தலைவிப் புலம்புவதை மேற்கண்ட அடிகள் சுட்டுகின்றன. மேலும்,

"மாலை நீ– கந்து ஆதல் சான்றவர் களை தாராப் பொழுதின்கண்
வெந்தது ஓர் புண்ணின்கண் வேல் கொண்டு நுழைப்பான் போல்,
காய்ந்த நோய் உழப்பாரைக் கலக்கிய வந்தாயோ ? என ஆங்கு"[28]

என்று மாலைக்காலமே, நீ எனக்குப் பற்றுக் கோடாக அமைந்தவர் என் வருத்ததைப் போக்காத காலத்தே வெந்ததொரு புண்ணில் வேல் கொண்டு நுழைப்பவர் போல, மெய் வெம்புவதற்குக் காரணமான காமநோயிலே அழுந்துகின்ற என்னை உள்ள அறிவையும் கலக்குதற்கு வந்தாயோ ! என்பதன் மூலம் தலைவியின் ஆற்றாமையை உணரமுடிகிறது. இரங்குதற்கு மாலைப் பொழுது நிமித்தமாகலின் இது இரங்கல் நிமித்தமாக அமைகின்றது.

### 4.4.5.தோழி தலைவனை அறிவுறுத்தல்

களவொழுக்கத்தில் வந்து மீண்ட தலைமகனிடம் தோழி, தலைவிக்கு ஏற்பட்டுள்ள காவல் மிகுதியை எடுத்துக் கூறுகிறாள். மேலும், தலைவி, கழியையும் கடற்கரைச்சோலையையும் காணும் பொழுதெல்லாம் பலவும் நினைத்து வெறுப்புற்றுத் தலைவர் வரமாட்டாரோ என வருந்திக் கொண்டிருக்கும் தன்மையினை,

''கழியும் கானலும் காண்தொறும் பல புலந்து
ஊரார் சொல்! எனப் பருவரும்
தார் ஆர் மார்ப! நீ தணந்த ஞான்றே''[29]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும், மற்றொருத் தோழி இரவுக்குரியிடத்து வந்து மீளும் தலைவனிடம் தலைவி இனிச்சிறிதும் நின்னைப் பிரிந்து உயிர் வாழாள், ஆதலால் நின் ஊரிடத்து அவளை மணந்து கொண்டு போதல் வேண்டும் என்பதை,

''நெய்தல் உண்கண் பைதல கலுழ,
பிரிதல் எண்ணினை ஆயின், நன்றும்
அரிது உற்றணையால் பெரும! உரிதனின்
கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும் கொண்டலொடு''[30]

''செலீஇய சேறி ஆயன், இவளே
வருவை ஆகிய சில்நாள்
வாழாளாதல் நற்கு அறிந்தனை சென்மே!''[31]

என்ற பாடல்களின் மூலம் அறியமுடிகிறது. கலித்தொகைத் தலைவன் தன் ஊருக்குச் சென்று தங்கினமையின் இரவில் தனிமை தலைவியைத் துன்பப்படுத்தியது என்பதையும் ஒலிக்கின்ற அலைகளும், வீசுகின்ற காற்றும்

தனிமையால் வாடும் குருகும் இவளுக்குத் துணையாக இருக்க வேறு உற்றதுணை இல்லை என்பதையும் எடுத்துக் கூறித் தலைவனை விரைவில் மணந்து கொள்ளச் சொல்கிறாள் தோழி, இதனை,

“இன்துணை நீ நீப்ப இரவினுள் துணையாகி.
தன் துணைப் பிரிந்து அயாஅம் தனிக்குருகு உசாவுமே
ஒண் சுடர் ஞாயிற்று விளக்கத்தான். ஒளி சாம்பும்
நண்பகல் மதியம் போல். நலம் சாய்ந்த அணியாட்கு என ஆங்கு
எறி திரை தந்திட, இழிந்த மீன் இன்துறை
மறிதிரை வருந்தாமல் கொண்டாங்கு, நெறி தாழ்ந்து
சாயினள் வருந்தியாள் இடும்பை
பாய் பரிக் கடுந்திண் தேர் களையிளோ இடனே”[32]

என்னும் பாடலடிகள் கழி, கானலைக் கண்டும் இரவின் தனிமையினை எண்ணியும் தலைவி படும் மிகுந்த ஆற்றாமையைத் தோழி தலைவனுக்கு உணர்த்தி அவனை வரைவு தூண்டுகின்ற செயலானது நெய்தலின் உரிப் பொருளான இரங்கலும் அது சார்ந்த நிமிர்த்தமாகவும் அமைகிறது.

### 4.4.6. தலைவி தலைவன் பிரிவால் ஏங்குதல்

தலைவனின் பிரிவால் மெலிவடைந்த தலைவி, அப்பிரிவினை ஆற்ற இயலாது அவனுடன் முன்பு கூடியிருந்த கடற்கரைச் சோலையையும் துறையையும் பிற இடங்களையும் கண்டு காமநோய் வருத்த பல துன்ப நினைவுகள் உண்டாக வெறுப்புற்று உள்ளம் உருகி, உடல் இளைத்து நெற்றிப் பசலையுற்று இனியும் தன்னால் உயிர்வாழ முடியாது என்று இரங்கிப் புலம்புவதை,

“உள்ளுதோறு உள்ளுதோறு உருகி
பைஇப் பையப் பசந் தளை பசப்பே”[33]
“புள் இமிழ் பெருங்கடற் சேர்ப்பனை

உள்ளேன்– தோழி –படீஇயர், என் கண்ணே''[34]

''இன்னும் உளனே – தோழி !– இந்நிலை

தண்ணிய கமழும் ஞாழல்

தண்ணம் துறைவற்கு உரைக்கு நர்ப் பெறினே''[35]

எனும் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன. மேலும், தான் காதலித்த தலைவன் மீண்டும் தன்னை அடைய வருவானோ என்ற தலைவியின் ஏக்கம் நெய்தலின் உரிப்பொருளான இரங்கலின் நிகழ்வாக வெளிப்படுகின்றது.

**4.4.6.தலைவன் பிரிவால் தலைவி வேட்கை கொள்ளுதல்**

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு அவன்பால் வேட்கை பெருக அதனைத் தாங்கவியலாது, நிலவொளியில் ஊரினரின் விழாக் கொண்டாட்டத்தில் பங்கேற்காமல் என் இழைகள் நெகிழ, வருத்தத்துடன் கண்ணீர் மல்க செறிந்த இவருடைய இரவிலும் துயிலாது தனிமையாய் உள்ளேன். இவ்வாறு உலகத்தார் இயல்புக்குப் பொருந்தாது மாறுபடுவதால் இவ்வுலகம் என்னொடு போர் புரியுமோ ? அல்லது இவ்வுலகத்துடன் அவலமுற்ற என் நெஞ்சுதான் போர் செய்யுமோ ? என்று தலைவி புலம்புவதை,

''ஊரே, ஒலிவரும் சும்மையொடு மலிபுதொகுபு ஈண்டி,

கலி கெழு மறுகின், விழவு அயரும்மோ;

கானே, பூமலர் கஞலிய பொழில் அகம்தோறும்

தாம் அமர் துணையொடு வண்டு இமிரும்மே;

யானே. புனைஇழை ஞெகிழ்த்த புலம்புகொள் அவலமொடு

கனை இருங் கங்குலும் கண்படை இலெனே;

அதனால். என்னொடு பொரும்கொல். இவ்உலகம் ?

உலகமொடு பொரும்கொல், என் அவலம், உறு நெஞ்சே !''[36]

என்னும் வெள்ளிவீதியாரின் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும்,

“வையக வரையளவு இறந்த

எவ்வநோய்; பிறிது உயவுத் துணை இன்றே”[37]

என்னும் பாடலடிகளும்,

“அதுகொல், தோழி காம நோயே ?

வதிகுருகு உறங்கும் இன்நிழற் புன்னை,

உடைதிரைத் திவலை அரும்பும் தீம்நீர்,

மெல்லம் புலம்பன் பிரிந்தென,

பல்இதழ், உண்கண் பாடு ஒல்லாவே”[38]

என்ற பாடலும் மருத நிலத்திலிருந்து வந்து, நெய்தல் நிலத்தில் துணையின்றித் தங்கும் குருகு மீன் உண்டு தன் நிலத்தையும் மறந்து உறங்குதற்குக் காரணமாகிய புன்னை மரங்களில் கரையை உடைக்கின்ற அலையின் திவலைகள் பட்டமையால் அரும்புகள் மலரும். இத்தகைய நிலத்தினையுடைய தலைவன் தன்னைக் காணவராததாலும், தலைவனின்றி தனித்திருப்பதாலும் காமநோய் பெருகித் துயருற்ற தலைவியின் புலம்பலிலிருந்து நெய்தலின் திணைசார்ந்த ஒழுக்க நிகழ்வை உணரமுடிகின்றது.

### 4.4.7. தலைவி நெஞ்சழிந்து கூறுதல்

காப்பு மிகுதிக்கண் ஆற்றாதவளாகியத் தலைவி, தன் உடலில் பசலை படர கண் துயிலாது பலவாறாக வருந்துகிறாள். ஓருயிர் ஈருடல் போல் தலைவனுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் என்னை அவரிடமிருந்து பிரித்தால் என் உயிரும் அப்பொழுதே நீங்கிவிட வேண்டும். அதுவே என் விருப்பமாகும்” என்று கலங்கி உரைக்கிறாள்.

“அழுங்கல் ஊரோ அறன் இன்று; அதனால்,

அறன்இல் அன்னை அருங்கடிப் படுப்ப,

பசலை ஆகி விரிவது கொல்லோ”[39]

“கையற வந்த தைவர லூதையொ

டின்னா வுறையுட் டாகும்

சின்னாட் டம்மவிச் சிறுநல்லூரே”[40]

“பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு,

உடன் உயிர் போகுகதில்ல – கடன் அறிந்து ,

இருவேம் ஆகிய உலகத்து

ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே”[41]

என்ற பாடலடிகள் தலைவனைப் பிரிந்து உயிர் வாழ்வதை விடச் சாதலே சிறந்தது என இரங்குகிறாள். மேலும், தலைவனைச் சந்திக்க முடியா வண்ணம் காவல் மிகுந்தமையால் ஆற்றாத்தலைவி. அவனிடத்துச் சென்ற நெஞ்சினை நோக்கி, மடநெஞ்சே! பொறுத்தற்கரிய காமநோயினைச் செய்தவனிடத்தே இரவும் பகலும் உறக்கத்தைக் கைவிட்டு பலமுறை அவனை அடைய விரும்பி, வீணே அலைந்து தடுமாறி அவனிடத்து ஒன்றையும் பெறாது முடிவில் அவனிடம் செல்ல இயலாது வருந்துகின்றாய் என இடித்துரைப்பதனை,

“செறி வளை நெகிழ்த்தான் கண் சென்றாய் மற்று அவனைநீ

அறியவும் பெற்றாயோ ? அறியாயோ ? மடநெஞ்சே ! என ஆங்கு

எல்லையும், இரவும் துயில் தறந்து பல்ஊழ்

அரும்படர் அவலநோய் செய்தான் கண் பெறல் நசைஇ

இருங்கழி ஒதம் போல் தடுமாறி,

வருந்தினை அளிய என் மடம் கெழு நெஞ்சே!”[42]

என்ற நெய்தற்கலியின் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. மேலும். தலைவனைப் பிரியாமலிருக்க முற்பிறவியில் நான் தவம் செய்யாததால் இப்பிறவியில் அவனைப் பிரிந்து துன்பத்துடன் வாழவும் வேண்டியுள்ளது. என்று தன்னைத்தானே நொந்து கூறுகிறாள். இதனை,

“சினைக்கயல் மாய்க்கும் துறைவன் கேண்மை

பிரிந்தும் வாழ்துமோ நாமே

அருந் தவம் முயறல் ஆற்றாதேமே ?”[43]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. மேலும், எனக்கு அருளாத என் காதலரை நினையும் பொழுதே அவர் பிரிவு எனும் தீயினால் என் மனம் வெந்தழிகிறது. அவரை நினையாமலிருந்தாயோ காமநோய் என்னைச் சாகும்படி வருந்தச் செய்கிறது. நான் உயிர் நீத்து வானில் சென்றாலும் இக்காமம் அங்கு வந்தும் வருத்தும். ஆதலின் நான் யாது செய்வேன் என மனம் கலங்குவதை,

“உள்ளின், உள்ளம் வேமே; உள்ளாது

இருப்பின், எம் அளவைத்து அன்றே; வருத்தி

வான் தோய்வற்றே காமம்;

சான்றோர் அல்லர், யாம் மரீஇயோரே”[44]

என்னும் பாடலடிகளால் அறியமுடிகிறது. மேலும்,

“நோய் அலைக் கலங்கிய மதன்அழி பொழுதில்,

காமம் செப்பல் ஆண் மகற்கு அமையும்;

யானே, பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கி

கை வல் கம்மியன் கவின் பெறக் கழாஅ

மண்ணாப் பசு முத்து ஏய்ப்ப, குவி இணர்ப்

புன்னை அரும்பிய புலவு நீர்ச் சேர்ப்பன்

என்னை மகன்கொல்– தோழி– தன்வயின்

ஆர்வம் உடையர் ஆகி,

மார்பு அணங்குறு நரை அறியாதோனே ?”[45]

என்னும் இளந்திரையனாரின் பாடலில் தலைவி, காமநோய் என்னை வருத்துவதால் என் மனம் கலங்கி வலிமை அழிகின்ற இக்காலத்திலும் எனக்கு அன்புரை பகர்ந்து ஆற்றுவிக்கும் ஆண் மகனுக்குரிய பண்பினைப் பெறாத என் தலைவனை நன்மகன் என எங்ஙனம் கூறுவேன் என்று தலைவனைச் சினத்துடன் இகழ்ந்து கூறுவதாக நெய்தல் திணைப் பாடல்கள் அமைந்துள்ளது. நெய்தல் நிலத்தலைவி படும் ஆற்றாமையைக்கண்டு வற்புறுத்துகின்ற தோழியிடம் தலைவி தலைவர் நெடுங்காலம் பிரித்திருக்கவும் நின் காமநோயைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று என்னைத் தெருட்டுவோர் தாம் அதனைப் பொறுத்துக் கொள்வதற்குரிய மனவலிமையையும் வழிவகைகளையும் அறியமாட்டார்கள். என்னுடையத் தலைவரை உரியக் காலத்தில் நான் காணப்பெறவில்லையெனில் கல்லில் மோதிய கடலின் சிறுநுரையைப் போல துன்பம் பெருகிய நெஞ்சுடன் சிறுகச் சிறுக நானும் இல்லாது போய்விடுவேன் என்று கூறுவதை,

''காமம் தாங்குமதி –என் போர் தாம் அஃது
அறியலர் கொல்லோ ? அனை மதுகையர் கொல் ?
யாம், எம் காதலர்க் காணேம் ஆயின்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு, பெருநீர்க்
கல் பொரு சிறுநுரை போல,
மெல்ல மெல்ல இல்லாகுதுமே''[46]

என்ற கல்பொருசிறு நுரையாரின் பாடல் உணர்த்துகிறது. தன்னுள்ளே காதலை மட்டுமின்றி தாங்கவியலாத காமநோயினையும் உண்டாக்கிவிட்டு, தான் பலவாறு புலம்பித் தவிக்கின்ற இந்நேரத்திலும் கூட, தன்னை நேரில் கண்டு ஆறுதல் கூறாத தலைவனின் வன் நெஞ்சினை எண்ணிக் கலங்கி தன் உயிரினை மாய்த்துக் கொள்ளுமளவிற்குத் தலைவிக்கு உண்டான துன்பநிலையை நெய்தலின் உரிப்பொருளான இரங்குதல் ஒழுக்கம் வெளிப்படுகிறது.

### 4.4.8. தலைவியைத் திருமணம் செய்துகொள்ள தலைவனை தோழி வற்புறுத்தல்

தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளாமல் களவிலேயே நீடித்த போது, தோழி தலைவனிடத்து என் தோழி பறவைகளின் ஒலியினை நின் தேர்மணி என்றும், கழியில் பூத்த பூக்களின் நாற்றத்தினை நின் மார்பில் அணிந்துள்ள மாலையினது என்றும் தவறாக எண்ணிப் பின் உண்மையினை உணர்ந்து மயக்கமும் தனிமையும் கொண்டு வருந்துகிறாள். நின்னை நினைந்து அசதியால் சிறிது உறங்கிய இடத்து உன் தோளென்று கருதித் தழுவுமிடத்து நின்னைக் காணாதவளாகக் கண்டது கனவே என்றறிந்து பின்பு செயலற்றுக் கலங்கி நிற்கிறாள் என்று தலைவியின் தனிமைத் துயரினை எடுத்துக்கூறி விரைவில் மணந்து கொள்ளுமாறு தலைவனை வற்புறுத்துகிறாள். இதனை,

''உள் ஆன்ற ஒலியவாய் இருப்பக்கண்டு, அவைகானற்
புள் என உணர்ந்து, பின் புலம்பு கொண்டு, இனையுமே
நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின்மார்பில்
தார் நாற்றம் என இவள் மதிக்கும் மன்; மதித்தாங்கே,
அலர் பதத்து அசைவளி வந்து ஒல்க, கழிப்பூத்த''[47]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றது. மேலும்,

''இறை,வரை நில்லா வளையாள் இவட்கு, இனிப்
பிறைஏர் சுடர் நுதற் பசலை
மறையச் செல்லும், நீ மணந்தனை விடினே''[48]

இப்பாடலடிகளில் தலைவியின் நிலையினை தலைவனிடம் தோழி விளக்குகையில் நீ இல்லாமல் போனபோது அவளுடைய முன்கை வளையல் நில்லாமல் கழன்றுவிட்டன. நீ தலைவியை மணந்து கொள்வாய் ஆயின் நிலவினை ஒக்கும் அழகிய ஒலிபடைத்த நெற்றியில் படர்ந்த பசலை என்றுமே வாராது. என்கிறாள். இவ்வாறு காமநோயினால் தலைவி புலம்பிக் கையற்றிருந்தத் தன்மை நெய்தல் திணைக்குரிய ஒழுக்கமாக அமைகிறது.

### 4.4.9. தலைவன் சிறைப்புறமிருக்க தோழி வரைவு கடாவியது

பகற்குறியின் பொழுது தலைவனோடு தோழிக்குச் சில உரையாடல்கள் நிகழும். அதாவது தலைவியை களவிலேயே சந்திக்கும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்துகொள்ள வேண்டும் என்பாள். பகற்குறிப் புணர்ச்சிக்குப் பின் தோழி தலைவனை வேண்டி வணங்குவாள் என்பதனை,

''புணர்ந்த பின் அவன் வயின் வணங்கற் கண்ணும்''[49]

என்று தோழி தலைவனைப் புணர்ச்சியின் பின் வணங்கி வேண்டிக் கொள்ளும் முறையினைத் தொல்காப்பியரும் கூறுகின்றார். தலைவியை மணம் செய்து கொள் தலைவனைத் தோழி குறிப்பாகவோ வெளிப்படையாகவோ கேட்டலை அகத்திணை இலக்கணம் வரைவு கடாதல் என்ற துறையாகக் கூறுகின்றது. ''தோழி வரைவு கடாவும் முறை குறிப்பினால் வரைவு கடாதல், வெளிப்படையினால் வரைவு கடாதல் என்று இருவகைப்படும் என்று கூறுவர் இறையனார் களவியலுரையாசிரியர்''[50] குறிப்பாவது, தோழி தலைமகனை நோக்கி எம் அன்னை தலைமகளது வேறுபாடு கண்டு இஃது இவட்கு எதனால் வந்தது என்று ஆராய்வாளாயினள். என்று பொய் பெய்தல் கூறுதல் போல்வது இதனால் தலைவியைத் தம் அன்னை இற்செறிக்கக் கூடும் எனவும் இதற்கு முன்பு வரைந்து கொள்ளலே சால்புடைத்து எனவும் குறிப்பாகத் தோழி வரைவு கடாவுவாள். வெளிப்படையாக வரைவு கடாவுதல் என்பது தோழி தலைவனிடம் அவர்கள் களவொழுக்கம் ஊராரால் அறியப்பெற்று முதலில் அம்பலாக முளைத்துப் பின் அலராகக் வளர்ந்தது என்று கூறி இனி வரைந்து கொள்வதில் காலம் தாழ்த்தல் கூடாது என்று வெளிப்படையாகவே கூறுவாள். இதனை,

''பெய்யாது வைகிய கோதைபோல
மெய் சாயினை அவர் செய்குறி பிழைப்ப;
உள்ளி நொதுமலர் நேர்பு உரை தெள்ளிதின்

வாரார் என்னும் புலவி உட்கொளல்
ஒழிகமாள, நின்நெஞ்சத்தானே;
புணரி பொருத பூ ணல் அடைகரை;
ஆழிமருங்கின் அலவன் ஓம்பி,
வலவன் வள்பு ஆய்ந்து ஊர,
நிலவு விரிந்தன்றால் கானலானே''[51]

என்னும் உலோச்சனாரின் பாடலில் தலைவன் செய்த குறி இடையீடுபடத் தவறுதலால் கூடாது போயின. அதனால் பூமாலைபோல் உன் உடம்பு வாடின அயலவரின் பழிச்சொல்லைக் கருதி இனித் திண்ணமாக அவர் நம்மிடத்து வரமாட்டார் என கருதாதே. கடற்கரையிடத்தில் தலைவர் ஊர்ந்து வருகின்ற தேரின் உருளையிற் படாதவாறு நண்டுகளை விலக்கித் தேர்ப்பாகன் செலுத்துகின்ற ஓசைக் கேட்கின்றது எனத் தலைவியிடம் தலைவன் சிறைப்புறமாக இருப்பதை அறிந்து தோழி குறிப்பாக வரைவு கடாவுகின்றாள். இரங்குகின்ற தலைவியைத் தேற்றி தலைவனை வரைவு மேற்கொள்ளச் செய்தல் நெய்தலின் உரிப்பொருளாக வந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும் மற்றொரு நெய்தல் நிலத் தோழி தலைவன் பிரிவாழ்வாடும் தலைவிக்காக சிறைப்புறத்தானாக உள்ளத் தலைவனை காணாதவனாய் தலைவியின் துயரினை கடற்கரையில் உள்ள மரங்களில் மலர்கள் மலர்ந்து நிறைந்துள்ளன. கரிய கழியில் நீர்நிறைந்து காணப்படுகிறது. பெரிய இதழுடைய நெய்தல் மலர்கள் குவிகின்றன. காக்கைகள் தன் கூடுகளுக்குச் செல்கின்றன. சிவந்து தாழ்ந்த கதிரவன் ஒளி மண்டிலம் மேற்கே மலையைச் சேர்கின்றது இத்தகைய மாலைப் பொழுதின் காட்சிகள் நம்மை வாட்டுகின்றதை நம் காதலர் நம்மை எண்ணாது பிரிந்துறைவதால் உண்டான காமநோயால் ஏற்பட்ட மேனி வேறுபாட்டை முருகக் கடவுள் வருத்தியதால் வந்ததாம் என்று ஊரார் கூறுவர் இதனை அறிந்து நம் தலைவர் உண்ணச் சேருவார். என்று தோழிக் கூறுவதை,

''பெருங்கடல் முழங்க கானல் மலர
இருங்கழி ஓதம் இல் இறந்து மலிர
வள் இதழ் நெய்தல் கூம்ப, புள் உடன்
கமழ் பூம் பொதும்பர்க் கட்சி சேர
செல்சுடர் மழுங்கச் சிவந்து வாங்கு மண்டிலம்
கல் சேர்பு நண்ணிப் படர் அடைபு நடுங்க
புலம்பொடு வந்த புண்கண் மாலை''[52]

என்னும் பாடல் விளக்குகின்றது. மேலும் (நற்.31, 72, 94, 117, 175, 200) குறுந்தொகை 227 ஆகிய பாடல்களும் சிறைப்புறத்தில் உள்ளத் தலைவனிடம் தோழி வரைவுக்கடாவுதல் உரிப்பொருளாக அமைந்துள்ளது.

### 4.4.10.தலைவனிடம் அலர் அச்சத்தைத் தோழி தெரிவித்தல்

தலைவியின் களவொழுக்கத்தை அன்னை அறிந்தமையை தலைவனுக்கு உணர்த்தவும் களவொழுக்கம் இனி நடைபெறாது எம் நலன் கெட நாங்கள் நீங்குகிறோம் எனத் தோழி தலைவியின் மன வருத்தத்தை தலைவனுக்குத் தெரிவிக்கும் வகையில் இரங்கல் பொருளில் பாடல்கள் அமைந்துள்ளன. இதனை,

''முரிந்த சிலம்பின் நெரிந்த வள்ளியின்
புறன் அழிந்து ஒலிவரும் தாழ் இருங்கூந்தல்
ஆயமும் அழுங்கின்று யாயும் அஃது அறிந்தனள்
அருங்கடி அயர்ந்தனள் காப்பே; எந்தை
வேறு பல் நாட்டுக் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை
கலிமடைக் கள்ளின் சாடி அன்ன, எம்

இளநலம் இற்கடை ஒழியச்

சேறும் வாழியோ, முதிர்கம் யாமே''[53]

என்னும் ஔவையாரின் பாடலில், சரிந்திருக்கும் மலைப்பக்கத்தே கிழங்கோடு கருகிப்போய் விட்ட வள்ளிக் கொடியைப் புற அழகெல்லாம் சிதைந்து தழைத்துத் தாழ்ந்த கரிய கூந்தலையுடைய தலைவி வருந்தி இல்லின் கண் செறிந்தாள். பல்வேறு நாட்டுக் கலங்களும் வந்து செல்வது போல நீயும் செல்லாமல் தலைவியை விரைவில் மனம் செய்துகொள் எனத் தோழி தலைவனிடம் கூறுதலும் தலைவியின் மன நிலையும் இரங்கல் ஒழுக்கத்தால் அமைந்துள்ளது.

பகற்குறிக்கண் வந்த தலைமகனிடம் தோழி இற்செறிப்பு அறிவுறுத்துவதாக அஞ்சில் ஆந்தையாரின் பாடல் புலப்படுத்துகின்றன. இதனை,

''கடல் உடன் ஆடியும், கானல் அல்கியும்,

தொடலை ஆயமொடு தழூஉ அணி அயர்ந்தும்,

நொதுமலர் போலக் கதுமென வந்து,

முயங்கினன் செலினே, அலந்தன்று மன்னே;

துத்திப் பாந்தள் பைத்து அகல் அல்குல்

திருந்து இழைத் துயல்வுக் கோட்டு அசைத்த பசுங்குழைத்

தழையினும், உழையின் போகான்;

தான் தந்தனன், யாய் காத்து ஓம்பலலே''[54]

கழிக்கரைச் சோலையில் தலைவியுடன் தங்கியும் மாலையில் ஆயத்தாரோடு குரவைக் கூத்தாடியும் தழுவியும் சென்றமையால் அலருண்டாயிற்று. அன்னையால் தலைவி இற்செறிக்கப்பட்டுள்ளாள் எனத் தலைவனுக்குக் கூறுதல் தலைவியின் மனவருத்தத்தை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. மேலும்,

“கழி தேர்ந்து அசைஇய கருங்கால் வெண்குருகு
அடைகரைத் தாழைக்குழிஇ, பெருங்கடல்
உடைதிரை ஒலியின் துஞ்சும் துறைவ!
தொல்நிலை நெகிழ்ந்த வளையள், ஈங்குப்
பசந்தனள் மன் எம் தோழி என்னொடும்
இன்இணர்ப் புண்ணைஅயம் புகர்நிழல்
பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே”[55]

என்ற அம்மூவனாரின் பாடலில் கழிச் சேற்று நீரில் இரையைத் தேடி உண்டு இளைப்பாறிய கரிய காலையுடைய வெள்ளிய நாரை, கரையைச் சார்ந்த தாழையில் தன்இனத்தோடுக்கூடி உறங்கும் கடல்துறைக்குந் தலைவனே! தலைவியை உடலால் பிரிவதற்கு முன் அன்னையாள் இற்செறிக்கப்பட்டாள் அதனால் தலைவி நின்னைக் காணாது வருந்துகின்றாள் விரைவில் மணம் செய்து கொள்ளுமாறு தோழி வரைவுக் கடாவியதாக அமைந்துள்ளது. தோழியின் இச்செயல்பாடு சார்ந்த ஒழுக்கமாக நெய்தலின் இரங்கல் உரிப்பொருளாக அமைந்துள்ளது.

### 4.4.11. தலைவன் வரைவு நீட்டித்தபோது தோழி வரைவு வேண்டல்

களவின்கண் ஒழுகிய தலைவன் மணம் செய்து கொள்ளாது காலம் தாழ்த்தத் தோழி அவனை நோக்கித் தலைவியின் நலத்தைக் களவில் நீ நுகர்ந்தாய் எனினும் வரைவுக்கு உடன்படவில்லை. அதனால் நினக்கே உரியவர்களாகவும் இல்லை. அதனால் நெஞ்சில் மிக்க வருத்தத்தையும் பெற்றோம். குற்றமற்ற கற்பினையுடைய அறிவற்ற ஒருத்தி தன் குழந்தையைப் பேய் வாங்கிக் கொள்ளக் கை விட்டதைப் போல முன்னாளிலிருந்து நெடிதாக எம்மோடு வந்த நாணத்தையும் நாங்கள் கைவிட்டோம். இனி இந்த ஊரில் அலர் பரவட்டும் என்று தலைவனிடம் தோழி வரைவு வேண்டுகிறாள். இதனை,

“முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்,
நுணங்கு துகில் நுடக்கம் போல கணம்கொள,
ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப!
பூவின் அன்ன நலம் புதிது உண்டு.
நீ புணர்ந்தனையேம் அன்மையின், யாமே
நேர்புடை நெஞ்சம் தாங்கக் தாங்கி,
மாசுஇல் கற்பின் மடவோள் குழவி
பேஎய் வாங்கக் கைவிட்டாங்கு,
சேணும் எம்மொழி வந்த
நாணும் விட்டேம். அலர்க இவ்ஊரே!”[56]

என்னும் பாடல் தலைவியின் வருத்தத்தை வெளிப்படுத்தும் வகையில் நெய்தலின் உரிப்பொருளான இரங்கலும் அதன் நிமித்தங்களுமாய் வந்துள்ளன. மற்றொருத் தோழி பகற்குறியின்கண் வந்து தலைவியைச் சந்தித்து செல்லும் தலைவனை நோக்கி வலிய நீரையுடைய கடற்கரைக்குத் தலைவன் மிக்க மணிகள் கட்டிய உனது நெடிய தேரைப் பாகன் செலுத்துவதால் உனது ஊருக்குச் செல்லும் பொருட்டாகச் செல்கின்றாய். ஆனால் உன்னைப் பிரிந்த இவள் பிறகு நீ வருவாய் என்று குறிப்பிட்ட சில நாள் கூட உயிர் வாழ்ந்திருக்க மாட்டாள் என்பதை நன்றாக நீ அறிந்து கொண்டு செல் எனத் தலைவனிடம் தோழிக் கூறுவதாக அமையும் பாடல் நெய்தலின் உரிப்பொருளாக அமைகின்றது. இதனை,

“இறவும் புறத்து அன்ன பிணர் படு தடவு முதல்
..............................................................................................
வாழாளாதல் நற்கு அறிந்தனை சென்மே!”[57]

என்னும் நக்கண்ணையாரின் பாடலும் இதே பொருண்மையில் (நற்றிணை 96, 135, 138, 45, 227, 231, 263, 267, 395) ஆகிய பாடல்களும் தோழி தலைவனிடம்

வரைவுக்கடாவுதாகப் பாடப்பட்டுள்ளது. மேலும் தலைவன் சிறைப்புறமாக அலர் தூற்றுதலை உணர்த்தத் தோழிக்கூறுவதாக,

''முட்கால் இறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி இகுதிரை தரூஉம் துறைவன்
புணரிய இருந்த ஞான்றும்
இன்னது மன்னோ நல்நுதல் கவினே''[58]

என்னும் நம்பிக்குட்டுவனின் பாடலில் தலைவன் தலைவியுடன் இருந்த நாளில் புணர்ச்சியில் மகிழ்ந்தாலும் பிரிதற்குறிப்பு என்ற அச்சத்தால் பிரியாத வழியும் ஒருபடித்தாக வருந்தினாள். இத்தகைய மென்மையுடையவளைப் பிரிந்து தனிமைப்படுத்துதல் தகாது. அவளைப் பிரியாமல் உடனுறைவதற்குரிய வரைவினை மேற்கொள்ள வேண்டும் எனத் தலைவனிடம் தோழிக் கூறுவதாக அமையும் உரிப்பொருள். நெய்தல் நிலத் தலைவியின் இரங்கல் ஒழுக்கத்தை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. வரைவு நீட்டித்த இடத்து தோழி வரைவு வேண்டுகிறாள். இதனை,

''மாரி ஆம்பல் அன்ன கொக்கின்
பார்வல் அஞ்சிய பருவரல் ஈஞ்ஞெண்டு
கண்டல் வேர் அளைச் செலீஇயர், அண்டர்
கயிறு அரி எருத்தின், கதழும் துறைவன்
வாராது அமையினும் அமைக!
சிறியவும் உள ஈண்டு விலைஞர் கைவளையே''[59]

என்னும் குன்றியனாரின் பாடலில், மாரிகாலத்து ஆம்பலை மலரைப் போன்ற கொக்கின் பார்வையைக் கண்டு நண்டு வளைக்குள் செல்ல பரதவரது அலைக்கயிற்றை அறுத்துக் கொண்டு மிகுந்த வலிமையோடு அவ்வளைக்குள் அழுந்தும் நீர்த்துறையையுடைய தலைவன் வாராமையால் உடல்மெலிவும் வளையல்

விற்பாரும் சிறிய வளையல்களும் உள்ளன எனத் தலைவியைத் தேற்றுவதாகக் கூறும் பாடல் நெய்தலின் உரிப்பொருளாக அமைகின்றன. தலைவன் தன் ஊருக்கு ஒரு வழிச் சென்று வருகிறேன் என்று கூறிப் பிரிந்த இடத்து தலைவியின் ஆற்றாமையை எடுத்துக்கூறி திருமணம் செய்து கொள்ளுமாறு தோழி தலைவனிடம் கூறுவதாக இடம்பெறும் பாடல்கள் (கலித். 121, 124, 127) ஆகியவற்றுள் நெய்தலின் உரிப்பொருளான இரங்கலும் இரங்கல் நிமிர்த்தமாக வந்துள்ளன.

### 4.4.12. தோழி தலைவியின் வருத்தத்தைக் கூறுதல்

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிந்ததனால் தலைவி வருந்துவதாகத் தோழிக் கூறுகின்றாள். அதற்கு தலைவி மறுமொழிக் கூறுவதாக அமைந்துள்ளப் பாடல்கள் நெய்தலின் இரங்கல் ஒழுக்கமாக அமைந்துள்ளன. தோழி, கலங்கிய நீரையுடைய உப்பங்கழி சூழ்ந்த தோட்டங்களைக் கொண்ட நம்மூரில் தழைத்து முற்றிய பனையோலையோடு முட்களைச் சேர்த்து கட்டப்பட்ட வேலிகளையுடையது. பரதவர்கள் மீனை பிறநாட்டிற்குச் சென்று விற்பர். இங்குள்ள மக்கள் கள்ளையுண்டு மகிழ்வுடன் இருக்கும் ஆரவாரத்தையுடையது. எனினும் தேரில்வரக்கூடிய கடற்சேர்ப்பனை நம்மை விட்டு பிரிந்த காலத்தில் பொலிவிழந்து வருத்தத்தை உண்டாக்குவதை,

"வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப,
பாட்டம் பொய்யாது பரதவர் பகர,
இரும் பனந் தீம்பிழி உண்போர் மகிழும்
ஆர்கலி யாணர்த்து ஆயினும், தேர் கெழு
மெல்லம் புலம்பன் பிரியின் புல்லெனப்
புலம்பு ஆகின்றே –தோழி கலங்கி நீர்க்
கழி சூழ் படப்பைக் காண்டவாயில்,

ஒலி காவோலை முள்மிடை வேலி,

பெண்ணை இருவரும் ஆங்கண்

வெண் மணற் படப்பை எம் அழுங்கல் ஊரே''[60]

என்னும் உலோச்சனாரின் பாடல் உணர்த்துகிறது. மேலும் இதேப் பொருண்மையில் (நற். 199,275, 327, 338, 378) மற்றும் (குறுந். 243) ஆகிய பாடல்களும் தலைவன் வரைவிடை வைத்து பிரிந்த போது தலைவியின் வருத்தத்தை காட்சிப்படுத்துவதாக அமைந்துள்ளன.

### 4.4.13. இற்செறிப்பில் தலைவி வருந்துதல்

இற்செறிக்கப்பட்டும் புறத்துப் பேசாத நிலையில் தலைவன் தம்மிடத்தில் வந்த போதெல்லாம் ஏற்படாத அச்சம் இற்செறிக்கப்பட்டுள்ள நிலையில் பறவைகளின் ஓசைக் கேட்கும் நிலையில் தலைவனின் தேரின் மணிக்குரலைப் போலக் கேட்டு அஞ்சுகின்றேன் எனத் தலைவி புலம்புவதாக உள்ளது.

''விசும்பு உறழ் புரிசை வெம்ப முற்றி

பைங்கண் யானை வேந்து புறத்து இறுத்த;

'நல் எயிலுடையோர் உடையம்', என்னும்

பெருந்தகை மறவன் போல – கொடுங்–கழிப்

பாசடை நெய்தற் பனிநீர்ச் சேர்ப்பன்,

நாம முதலை நடுங்கு பகை அஞ்சான்.

காமம் பெருமையின் வந்த ஞான்றே–

அருகாது ஆகி அவன்கண் நெஞ்சம்

நள்ளென் கங்குல் புள்ஒலி கேட்டொறும்

'தேர் மணித் தெள் இசைகொல் ?' என

ஊர் மடி கங்குலும் துயில் மறந்ததுவே''[61]

என்னும் பாடலில் தலைவியின் மனஉணர்வு நெய்தலின் உரிப்பொருளாக அமைகின்றது.

### 4.4.14. தலைவி வரைவிடை மெலிந்ததைக் கூறல்

களவில் வந்தொழுகிய தலைவன் மணம் புரியக்கருதி பொருள்வயிற் பிரிந்தான். பிரிந்த தலைவன் வாராததால் தலைவி நம் சேரியில் அலரெழுந்து விட்டதால் தலைவன் தேரை நிறுத்தினால் கூட நிறுத்தாமல் செல்வது மன வருத்தத்தைத் தருவதாக உள்ளது என்கிறாள். இதனை,

"இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை

……………………………………………………………………………

சென்றது அன்றோ, கொண்கன் தேரே"[62]

என்னும் பாடலில் தலைவியின் மன உணர்வை உணர்த்துவதாக அமைந்துள்ளது. மேலும் (குறுந். 205, 325, ஐங். 161) போன்ற பாடல்கள் வரைவிடை வைத்து பிரிந்த தலைவனை நினைத்து இரங்குவதாக உள்ளன.

### 4.4.15.தலைவி மாலைப் பொழுதுகண்டு புலம்பியது

தலைவி திருமணத்திற்குரிய ஏற்பாடுகளைச் செய்வதற்காகச் சென்ற பிறகு தலைவி தனிமையில் மாலைப் பொழுதினைக் கண்டு புலம்புவதை,

"தண்கடற் சேர்ப்பன் பிரிந்தென, பண்டையின்

கடும்பகல் வருதி– கையறு மாலை!

கொடுங்கழி நெய்தலும் கூம்பக்

காலை வரினும் களைஞரோ இலரே"[63]

என்னும் பாடல் தெரிவிக்கிறது. மேலும் (கலி. 119)ம் பாடலும் மாலைப்பொழுதின் துயரினைக் காட்சிப்படுத்துகின்றன.

**4.4.16. தலைவி எற்பாட்டினைக் கண்டு புலம்பல்**

பிரிவுக்காலத்தில் மாலைப் பொழுதின் வரவால் தான்படும் துயரைத் தலைமகன் உணர்ந்து விரைவில் மணம் செய்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தலைவி,

''அம்ம வாழி தோழி! நாம் அழ
நீல இருங்கழி நீலம் கூம்பும்
மாலைவந் தன்று, மன்ற
காலை அன்ன காலை முந்துறுத்தே''[64]

என்னும் பாடலில் நீலநிறம் கொண்ட பெரிய உப்பங்கழியில் வளரும் நீலமலர் குவியக் கூடிய மாலைக்காலம் கூற்றுவனைப் போல வந்து வாட்டுகின்றதே என்று தலைவி எற்பாட்டினைக் கண்டு புலம்புவதாக வந்துள்ளன. இவைபோன்று பல பாடல்களில் நெய்தலின் உரிப்பொருளான இரங்கலும், இரங்கல் நிமிர்த்தமும் வெளிப்பட்டிருப்பதை உணரமுடிகின்றது.

**4.5.நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கம்**

**4.5.1.நெய்தலில் குறிஞ்சி**

**4.5.1.1. தோழி குறியிடம் கூறல்**

தலைவன் தோழியை நயந்து அவளை வாயிலாகக் கொண்டு தலைவியைக் கூடக் கருதித் தோழியை வேண்ட, அவளும் அதற்கிணங்கியவளாய் கூறுவதை,

''குன்றின் தோன்றும் குவவு மணற் சேர்ப்ப!
இன்று இவண் விரும்பாதீமோ! சென்றுஅப்
பூ விரிப் புன்னை மீது தோன்று பெண்ணைக்
கூஉம் கண்ணஃதே! தெய்ய, ஆங்க,
உப்பு ஒய் உமணர் ஒழுகையொடு வந்த,

இளைப்படு பேடை இரியக் குரைத்து எழுந்து,

உரும் இசைப் புணரி உடைதரும்

பெநீர் வேலிஎம் சிறுநல் ஊரே''[65]

என்ற நக்கீரனாரின் பாடலில், பலரும் புகழும் அருங்குணப் பண்புடைய தலைவனே ? நீயும் நெஞ்சம் அழிவுற்றுப் பல நாளும் எம்மிடம் வந்து பணிவுடன் பல சொற்களைக் கூறுகின்றாய். ஆதலால் சுற்றத்தார் பாராட்டத் தாய் மாறாத அன்போடு வளர்க்கப்பட்ட பெருங்குடிப் பிறப்பினளான எம் தலைவியும் அறிவுநிலை திரிந்து உன்னிடத்துப் பெருமயக்கம் கொண்டுள்ளார். எனவே நீ இன்று கடலை வேலியாக உடைய கூப்பிடும் தொலைவிலுள்ள எம் ஊருக்கு வருவாயாக என்று தோழி தலைவன் தலைவியைச் சந்திக்க குறியிடம் நல்குவதை அறியமுடிகிறது. தலைமக்கள் இவரது ஒத்த குடிப்பெருமைகளையும் அருங்குணங்களையும் உண்மையான காதலையும் தன் கூரிய அறிவுத்திறத்தால் உணர்ந்த தோழி தலைவனுக்குக் குறை நேர்ந்து இருவரும் சந்திப்பதற்குக் குறியிடம் நல்குகின்ற இச்செயல் குறிஞ்சித் திணையின் உரிப்பொருளாகும். இருப்பினும் இவ்வொழுக்க நிகழ்வு நெய்தல் திணை மாந்தர்களுக்கும் உரியதாகக் கொள்ளலாம்.

### 4.5. 2. தோழி தலைவனிடம் இற்செறிப்பைக் கூறல்

களவொழுக்கத்தில் நாட்டம் உடையவனாய்த் தலைவன் பகற்குறியிடத்தே தலைவியைக் கூடி மகிழ்ந்து மணம்புரிய காலம் தாழ்த்திய நிலையில் தலைவி இற்செறிக்கப்பட்டதை அறிவுறுத்துவதாகத் தோழி நேற்றைப் பொழுதில் நீயும் நானும் சென்று பூவின் நுண்ணிய தாதில் பாய்ந்து விழுகின்ற வண்டுகளை நீக்கி உப்பங்கழி சூழ்ந்த சோலையில் விளையாடினோம். ஆனால் தினசரி நெய்தல் பூக்களைப் பறித்து வரச் சொல்லும் அன்னை இன்று பூக்களைப் பறித்துவரச் சொல்லவில்லை. ஆகவே அவள் என்ன கருதியிருக்கின்றாள் எனத் தெரியவில்லை என்று தலைவியிடம் தோழி கூறுவது தலைவி இற்செறிக்கப்பட்டதை குறிப்பாள் உணர்த்துவதாக உள்ளது. இதனை,

''நீயும் யானும் நெருநல் பூவின்

.......................................................

குறுமோ, சென்று எனக் கூறாதோளே''[66]

என்னும் குடவாயிற் கீரத்தனாரின் இப்பாடல் குறிஞ்சித்திணையின் அறவொழுக்க நிகழ்வான இற்செறிப்பு நெய்தல் திணைப் பாடல்களில் வந்துள்ளன. மேலும் (அகம். 20, 90, 370) ஆகியப் பாடல்களும் இப்பொருண்மையில் வந்துள்ளன.

**4.5. 3. தோழி தலைவனை வரைவு வேண்டுதல்**

தலைவன் இருவகைக் குறிகளிலும் பலகாலும் தலைவியைப் புணர்ந்து ஒழுகுவான் அவற்றால் தோழிக்கும் தலைவனுக்கும் சில உரையாடல்கள் நிகழும். இனியும் களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்துகொள்ள வேண்டுமென தலைவனைத் தோழி வேண்டுவாள். இதனை வரைவுகடாதல் என்பர். இது குறிஞ்சிக்குரிய ஒழுக்கமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இவ்வொழுக்கம் நெய்தல்திணைப் பாடல்களில் விரவி வந்துள்ளன. இதனை

''சேய் விசும்பு இவத் செழுங் கதிர் மண்டிலம்

..................................................................................

உடைகடற் படப்பை எம் உறைவின் ஊர்க்கே ?''[67]

என்ற பாடல் விளக்கும். மிகத் தொலைவில் வானத்தில் ஏறிவந்த செழுமையான கதிர்களைக்கொண்ட சூரிய மண்டிலம் பெரிய மலையீனூடே சென்று மறைதலால் நம் கடல்துறையாரும் இன்றித் தனிமை கொண்டது. உப்பங்கழிகளில் தம்துணையோடு சுறாமீன் இயங்கவும் அந்த இடத்தில் இரவில் ஓசை உண்டாகும் குளிர்ந்த கடலில் பல விளக்குகளைக் கொண்டு எம் சுற்றத்தாரும் மீன் வேட்டையின் பொருட்டுக் கடலிற் சென்று விட்டனர். ஆகவே எமது ஊரில் இரவு தங்கிச் செல்வாயாக எனத் தலைவனைத் தோழிக்கூறுவது குறிப்பினால் வரைவுத்

தோன்றக் கூறுவதாகும். குறிஞ்சித்திணைக்குரிய இவ்வொழுக்கம் நெய்தல்திணைப் பாடலில் வந்துள்ளன. இதனைப் போன்றே (நற். 159, 223, 363, 375, அகம். 60,100, 320, ஐங். 113,115,117,179,186,194, கலி. 113, 135, 136) ஆகியப் பாடல்களிலும் தோழி வரைவுகடாவுதல் வெளிப்பட்டுள்ளன.

### 4.5. 4. தோழி வரைவு மலிதல்

தலைவியை மணம் செய்து கொள்வதற்காக பொருள்தேடிச் சென்ற தலைவன் குறித்தப் பருவத்தில் வராமையால் தலைவி வருந்துவாள். அதனை அறிந்தத் தோழி தலைவன் மணம் புரிய வருவதாகத் தலைவியிடம் கூறுதல் வரைவு மலிதல் ஆகும். இவ்வொழுக்கம் குறிஞ்சித்திணைக்குரியதாகும். இவ்வொழுக்கம் நெய்தல் திணைப் பாடல்களில் பயின்று வருகின்றன. இதனை,

"அன்னை, வாழி! வேண்டு, அன்னை! உதுக்காண்
ஏர் கொடிப் பாசடுப்பு பரிய ஊர்பு இழிபு
நெய்தல் மயக்கி வந்தன்று, நின்மகள்
பூப்போல் உண்கண் மரீஇய
நோய்க்கு மருந்து ஆகிய கொண்கன் தேரே"[68]

அன்னையே, நீ வாழ்க! நான் சொல்வதைக் கேள். தலைவியின் பூப்போன்ற மையுண்டகண்களில் இப்பொழுது வந்துள்ள நோய்க்கு மருந்தாக கொங்கனுடைய தேர், பசிய அடம்பங்கொடிகள் அறுந்து போகும் வண்ணம் ஊர்ந்தும் நெய்தற் செடிகளைச் சிதையச் செய்தும் வந்து கொண்டிருக்கிறது. அவ்ஓசையைக் கேட்பாயாக எனத் தோழி தாய்க்கு சொல்லி வரைவு மலிதல் பொருண்மையில் வந்துள்ளன. இதே போன்று (ஐங். 102, 147, நற். 78,91,278, குறு. 51, 357, அகம். 70, 160) ஆகியப் பாடல்களில் குறிஞ்சித் திணையின் ஒழுக்கம் நெய்தல் திணைப்பாடல்களில் வந்துள்ளன.

### 4.5.5. தலைவனிடம் தோழி அறத்தொடு நிற்றல்

களவொழுக்கத்தில் தலைவளோடு கூடியிருந்த தலைவி தலைவனின் பிரிவை ஆற்றாது உடல் மெலிவாள். அதனைக் கண்ட செவிலித் தாய் தோழியிடம் வினவ அவளும் தலைவி மெலிவதற்கான காரணத்தைக் கூறுவதே அறத்தொடு நிற்றல் ஆகும். இவ்வொழுக்கம் நெய்தல் திணைப் பாடல்களிலும் இடம்பெற்றுள்ளன.

தலைவியின் மேனி வேறுபாடு கண்டு செவிலி வருந்தி இதனைக் கண்டத் தோழி தலைவியின் காதல் நோயைக் கூறி அறத்தொடு நிற்றல். அன்னையே, நீ வாழ்க என் தோழியின் ஒளி மிக்க நெற்றி பசந்து தன் அழகு குறையப் பெற்றது. பல்வேறு எண்ணங்களால் உடலும் மெலிந்தது. தன்மைபொருந்திய கடலின் கண் எழும் அலைகளின் ஒலியைக் கேட்கும் தோறும் துயில் இழக்கிறாள். இதனை எண்ணி நானும் மனம் வருந்துகின்றேன் எனச் செவிலியிடம் தோழிக் கூறுகிறாள். இதனை,

"அன்னை, வாழி! வேண்டு அன்னை! அவர் நாட்டுத்
துதிக்கால் அன்னம் துணை செத்து மிதிக்கும்
தண்கடல் வளையினும் இலங்கும் இவள்
அம் கலிழ் ஆகம் கண்டிசின் நினைந்தே"[69]

"அன்னை வாழி! வேண்டு அன்னை! என் தோழி
சுடர் நுதல் பசப்பச் சாஅய், படர் மெலிந்து,
தண் கடற்படுதிரை கேட்டொறும்
துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே"[70]

என்ற பாடல்களின் மூலமாக தலைவனிடம் தோழி அறத்தோடு நின்றமையை அறியமுடிகிறது. மேலும் (ஐங். 110, 182, 190., அகம். 110, 1290, நற். 207) போன்ற பாடல்களிலும் அறத்தொடு நிற்றல் என்ற களவுகால ஒழுக்கங்களைக் கூறும்

வகையில் அமைந்த நெய்தல்திணைப் பாடல்களாகும். மேலும், குறை நேர்ந்த தோழி (அகம், 330, 380, நற். 245), இரவுக்குறி நேர்ந்த தோழி (நற். 23, 331), இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைவன் பாகனுக்கு கூறியது (அகம். 140, ஐங்.172) ,தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது (அகம். 230, 390, ஐங். 171), தோழி கையுறை மறுத்தமை (ஐங்.187) போன்ற பலப் பாடல்கள் குறிஞ்சித் திணையின் உரிப்பொருள்களைப் பெற்று நெய்தல்திணையில் மயங்கி வந்துள்ளன.

### 4.5.2.நெய்தலில் முல்லை

#### 4.5.2.1. தலைவன் பாகனிடம் தேரை விரைவாக ஓட்ட வற்புறுத்தல்

முல்லைத்திணையின் ஒழுக்கம் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் ஆகும். இவ்வொழுக்க நிகழ்வுகள் நெய்தல் திணைப் பாடல்களில் மயங்கி வந்துள்ளன.

வினைவயிற் பிரிந்து சென்ற தலைவன் அவ்வினையை முடித்துத் திரும்புகிறான். பாகன் தேரினை விரைவாகச் செலுத்த வேண்டும் என்ற எண்ணம் கொண்டவனாய் முன்பு நிகழ்ந்த செயல் ஒன்றிணைப் பாகனுக்குச் சுட்டி, என் காதலியிடத்து என் பிரிவுணர்த்திய போது அவள் மறுமொழி கூறாது. இளந்தளிர்களைப் பிசைந்த கையளாய் வருத்தமுற்ற நிலையை நீ அறிந்தனையோ ? அறியாயோ ? என்று வினவுகிறான். இதனை

''அறிதலும் அறிதியோ பாக ! பெருங்கடல்
எறி திரை கொழீ இய எக்கர் வெறிகொள
ஆடு வரி அலவன் ஓடுவயின் ஆற்றாது
அசைஇ உள் ஒழிந்த வசை தீர் குறுமகட்டு
உயவினென் சென்று, யான், உள்நோய் உரைப்ப,
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அம் சினைத் தாழ் இணர் கொழுதி,

முறி திமிர்ந்து உதிர்த்த கையள்

அறிவு அஞர் உறுவி ஆய் மட நிலையே''[71]

என்னும் பாடலின் மூலம் அறியமுடிகிறது. மேலும்,இவ்வளவு அறியாமையுடைய தலைவியைக் காணவிரைவது நம் கடமையன்றோ? எனவே அதற்கேற்ப நம் தேரினை விரைந்து செலுத்துக. என தலைவன் தேர்ப்பாகனைத் தூண்டுகின்றான். இது முல்லை நிலத்தில் நிகழும் உரிப்பொருளகும். ஆனால், நெய்தல் திணைப்பாடலில் வந்துள்ளன.

### 4.5.2.2. தோழி தலைவனிடம் மணமனை புக்க கூறியது

தலைவன் மணச் சடங்கோடு தமர் அளிக்கத் தலைவியைப் பெற்ற பின்னர் பெரியோர் கூட்டக் கட்டிலிடத்தே அவளுடன் இருந்த பொழுது தோழி வாழ்த்துவது,

''எக்கர் ஞாழற் பூவின் அன்ன

சுணங்கு வளர் இளமுலை மடந்தைக்கு

அணங்கு வளர்த்து அகறல் வல்லாதீமோ''[72]

என்ற பாடலில் மணற்பரப்பிலே வளரும் ஞாழல் மரத்தின் பூவை நிகர்த்த தேமல் படரப் பெற்ற இளமுலையைக் கொண்ட மடந்தையாம் இவள் துன்புறுதற்குரிய செயலொன்றும் செய்யாதும் என்றும் பிரியாது வாழ்வாயாக எனத் தோழி வாழ்த்துவதாக உள்ள முல்லைத்திணையின் ஒழுக்கம் நெய்தல் திணைப் பாடல்களில் மயங்கி வந்துள்ளன. இதே பொருண்மையில் (நற். 35, 131) ஆகியப் பாடல்களிலும் வந்துள்ளன.

### 4.5.2.3. தலைவி பருவம் கண்டு அழிந்து தோழியிடம் கூறல்

தலைவியை விட்டுத் தலைவன் பிரிந்து செல்லும் போது 'யான் கார்ப்பருவத் தொடக்கத்திலே மீண்டும் வருவேன். அது காறும் நீ ஆற்றியிரு' என்று கூறிப் பிரிகின்றான். அப்பருவம் வந்த பின்னரும் தலைவன் வராமையால் தலைவி

ஆற்றாமை மிகுதியாகி தோழியிடம் கூறவதாக அமைந்த ஒழுக்கம் முல்லைத் திணைக்குரியதாகும்.

''கடும்புனல் கொடுத்த நடுங்கு அஞர் அள்ளல்
கவிர் இதழ் அன்ன தூவிச் செவ்வாய்
இரை தேர் நாரைக்கு எவ்வம் ஆகத்
தூஉம் துவலைத் துயர்கூர் வாடையும்
வாரார் போல்வர், நம் காதலர்;
வாழேன் போல்வல் – தோழி யானே''[73]

எனும் ஔவையாரின் நெய்தல்திணைப் பாடலில் பருவம் கண்டு அழிந்த தலைமகள் தோழியிடம் விரைவாக ஓடிவரும் நீரினால் குவிக்கப்பட்ட கால் நடுங்குவதற்கு ஏதுவாகிய துன்பத்தைத் தருவது சேற்று நிலமாகும். இதில் செம்மை, நிறமுடைய அலகைக் கொண்ட நாரை இரைத் தேடிக்கொண்டிருக்கும். இந்நாரைக்குத் துன்பம் உண்டாகும்படி தூவுகின்ற நீர்த்துளிகளையுடைய பிரிந்தார் துயர் மிகுதற்குக் காரணமாகிய வாடைக்காற்றையுடைய கூதிர் காலத்திலும் பிரிந்து சென்ற நம்முடைய காதலர் வருவதாகத் தெரியவில்லை. அதனால் நான் வாழ்வேனல்லேன் எனத் தலைவிக் கூறுகின்றாள். முல்லைத்திணைக்குரிய இவ்வொழுக்கம் நெய்தல் திணையில் மயங்கி வந்துள்ளது. மேலும் இதேப் பொருண்மையில் (குறுந். 122, 195, 197, 200) ஆகியப் பாடல்களிலும் முல்லைத்திணை மயக்கத்தை அறியலாம்.

### 4.5.2.4.தலைவன் வினைமுடித்தலும் தலைவி மெலிதலும்

தலைவன் பிரிந்திருந்த பொழுது தலைவியின் அழகு சிதைந்தது கண்டு மனம் வெறுப்புற்றான் பாணன். தலைவன் திரும்பி வந்ததும் தலைவி தான் இழந்த அழகினை மீண்டும் பெற்றத் தலைவி பாணனிடம் கூறுவதாக,

“காண்மதி பாண! இருங்கழிப்

பாய்பரி நெடுந் தேர்க் கொண்கனொடு

தான் வேந்தன்று, என் மாமைக் கவினே”[74]

எனும் பாடலில் பாணனே! பெரிய கழிகளிடத்துப் பாய்ந்து செல்லும் குதிரைகள் பூட்டிய நெடிய தேரினைக் கொண்ட கொண்கன் வந்தான். அவனொடு சென்ற என் மாமைக் கவினும் வந்ததை அறிந்தாயா எனத் தலைவிக் கூறும்இச்செயல் முல்லை நில ஒழுக்கமாகும். இவ்வொழுக்கம் (கலி. 130, 134) ஆகியப் பாடல்களிலும் வெளிப்படுகின்றன. மேலும் பருவ வரவின்கண் வேறுபடும் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது (குறு. 34), தலைவன் வரைந்து எய்திய பின்றைத் தோழி தலைவிக்குச் சொல்லியது (அகம். 400, ஐங். 148) என்பனப் போன்ற முல்லைத்திணையின் உரிப்பொருள் நிமிர்த்தங்கள் நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கமாக வந்துள்ளன.

### 4.5.3.நெய்தலில் மருதம்

#### 4.5.3.1. தோழி இடம் தலைவி வாயில் மறுத்தல்

தலைவனின் பரத்தமையால் ஊடல் கொண்ட தலைவி தலைவனே நின் காதற்பரத்தை உன்னிடம் பெரிதும் மயக்கமுற்றிருக்கிறாள். ஆதலின் அவளை நீ முன்னிலும் பேரன்புடன் முயங்கி இன்புறுத்துவாயாக என்று கூறித் தலைவனுக்கு வால் மறுக்கிறாள். இதனை,

“பண்டையின் மிகப் பெரிது இனைஇ

முயங்குமதி பெரும! மயங்கினள் பெரிதே”[75]

என்ற பாடலடிகளால் புலப்படுத்துகிறாள். மேலும் தலைவனுக்காக வாயில் வேண்டிய தோழியிடம், தன் பரத்தமையால் என் நெஞ்சினை உடைத்த துறைவனுக்கு வாயில் நேர்தற்கு நான் உடம்படேன் என்று கூறி வருமாறு வாயில் மறுக்கிறாள். இதனை,

“கள் கடழ்ந்து ஆனாத் துறைவற்கு

நெக்க நெஞ்சம் நேர்கல்லேனே”[76]

என்னும் பாடலடியில் தலைவி தன்னைவிட்டு பரத்தையிடம் இன்பம் நுகரச் சென்ற தலைவன் மீது கொண்ட உறுதியான கோபமே. தலைவனுக்கும் தோழிக்கும் தலைவி வாயில் மறுக்கின்ற மருதத்தின் உரிப்பொருள் வந்துள்ளன. மேலும் தலைவனுக்குத் தோழி வாயில் நேர்தல் (குறு.9) மருதத்தின் உரிப்பொருள் நிமிர்த்தம் நெய்தல்திணைப் பாடலில் மயங்கி வந்துள்ளதை அறியமுடிகிறது.

### 4.5.3.2. தோழி தலைவனுக்கு வாயில் நேர்தல்

பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைமகன் வாயில் வேண்டியபோது, தோழி தலைவனது பரத்தைமையாகிய கொடுமையால் துன்புறுவளாயினும் தலைவி அவள் செய்த குற்றத்திற்குத் தான் நாணி எனக்கும் தெரியாமல் மறைத்துக் கற்பொழுக்கத்தில் சிறப்புற்றிருக்கின்றாள். ஆதலின் சினத்திலள் என்று கூறுவதால் தலைவியைக் கண்டு மகிழ்ச்சி அடைவான் என்பதற்காகக் கூறுவதாகும். இதனை,

“யாய்ஆகியளே மாஅயோளே—

மடைமாண் செப்பில் தமிய வைகிய

பெய்யாப் பூவின் மெய் சாயினளே;

பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்

இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்

கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும்

தண்ணம் துறைவன் கொடுமை

நம்முன் நாணிக் கரப்பாடும்மே” [77]

என்னும் பாடலில் துணை ஏதுமின்றி தனியாக வைக்கப்பட்ட யாரும் சூடாத மலர்களைப் போல தலைவி வாடினாள். பசிய இலைகளுக்கிடையே வளர்ந்துள்ள

உயர்ந்த திரட்சியையுடைய தண்டினைக் கொண்ட நீலமலர் பலவகை மீன்களைக் கொண்ட உப்பங்கழியில் நீர் அலைகள் பெருகும் தோறும் ஆழமான குளத்தில் மூழ்கும் மகளிரின் கண்போலத் தோற்ற மளிக்கும் துறையையுடைய தலைவனே, தலைவியைப் பேணாது பரத்தமையை பேணும் கொடுமையை தலைவி வெளிக்காட்டாமல் தன் மனதில் மறைத்துக் கொண்டவளாய் வாழ்கின்றாள் எனத் தலைவனிடம் கூறி பின்பு தலைவியிடம் தோழிவாயில் வேண்டுதல் மருத நில நிமிர்த்தமாகும். இவ்வொழுக்கம் நெய்தல் திணைப்பாடல்களில் மயங்கி வந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும் ,பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் கேட்க தோழிக்குக் கிழத்தி உரைத்தமை (குறு.349), பரத்தையர் பிரிவால் தலைவி அடைந்த வருத்ததைத் தோழி பாணனுக்கு உரைத்தமை (அகம். 50), காதற் பரத்தையிடம் உறவு கொண்ட தலைவனுடன் ஊடிய தலைவி (ஐங். 121, 122, 123, 124,125, 126, 127,128, 135, 136), வாயில் நேர்ந்த தலைவனுக்குத் தோழி உரைத்தமை (ஐங். 143, 153), வாயில் மறுத்த தலைவி (ஐங். 152, 154), வாயில் மறுத்த தோழி (ஐங். 156, 158), தலைவனிடம் பரத்தமையை கடிந்துரைத்தல் (நற். 315) போன்ற மருதத்திணையின் உரிப்பொருளான ஊடலும் ஊடல் நிமித்தமும் கொண்ட பாடல்கள் நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கமாகக் காணப்படுகின்றன.

### 4.5.4.நெய்தலில் பெருந்திணை

#### 4.5.4.1.மடலேறுதல்

தான் காதலித்த தலைவியைப் பெற வேண்டி ஊரினரின் முன் மடலேறுகின்ற தலைவன் சான்றோர்களை நோக்கி, நற்குணங்களனைத்தும் தம்முள் ஒருங்கே கொண்ட சான்றோர்களே என் நெஞ்சினைக் கவர்ந்து என்னை உரக்கமில்லாது வருந்திய தலைவி, ஒருத்தியின் பொருட்டு அழகிய கண்ணியைச் சூடி, உயர்ந்த பனை மடலால் செய்த குதிரையின் மீது மணி ஒலிக்க ஆரவாரத்துடன் ஏறினேன், என்னிடமிருந்து நீங்காத, காமநோய்க்கு இளைப்பாறுதலாக என்னை வருந்தியவளின் திறன் குறித்துப் பாடுவேன், பிறர் நோயினைத் தம் நோய் போல் பேணக் கூடிய சான்றோர்களாகிய உ ங்களின்

தலையாயக் கடன்களுள் ஒன்று என் மனத்துயரத்தினை நீக்குதலுமாகும் என்று மிகவும் பணிந்து வேண்டுகிறான். இதனை,

''ஒளியோடு உரு என்னைக் காட்டி; அளியள் என்

நெஞ்சு ஆறு கொண்டாள்; அதற்கொண்டும் துஞ்சேன்

.......................................................................................

துயர் நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே''[78]

என்ற பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும் பிறிதொரு பாடலில் தலைவியை இரந்து பின்னின்ற தலைவனுக்குத் தலைவியின் பெற்றோர் தலைவியைத் திருமணம் செய்து கொடாத நிலையில் அவளைப் பெற வேண்டி ஊரார் முன்னிலையில் மடலேறினான். மேலும் தன்னை வருத்திய தலைவியின் அழகு நலனை அவ்வூரிடத்து தெருவின் கண் கண்டார் வருந்த மடன் மா ஏறிப் பாடினான். அதனைக் கண்ட தலைவியின் தமர் குடிப்பழிக்கு அஞ்சித் தாமே முன்வந்து தலைவியைத் தந்து மகட்கொடை நேர்ந்தனர். இதனை,

''வருந்த மா ஊர்ந்து மறுகின்கண் பாட,

திருந்திழைக்கு ஒத்த கிளவி கேட்டு, ஆங்கே

பொருந்ததாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை

போல, கொடுத்தார் தமர்''[79]

என்னும் பாடலடிகளில் தலைவியைப் பெறும் பொருட்டு ஊரார் முன்னிலையில் பிறர் எள்ளலையும், தலைவிக்கு நேரும் பழியையும் பொருட்படுத்தாது தலைவன் மடலேறியதால் இப்பாடல்கள் பெருந்திணையின் உரிப்பொருளைப் பெற்று வந்துள்ளன. மேலும் மடலேறுகின்ற தலைவன் தன் பாங்கனுக்குக் கூறியமை (கலி. 138), கண்டோர்க்குக் கூறியமை (கலி. 140), பிரிவிடை ஆற்றாத் தலைவி சான்றோரை நோக்கியும், பொழுது, ஞாயிறு முதலியவற்றை நோக்கியும் கையற்றுக் கூறியமை (கலி. 142, 143, 144, 145, 146, 147, 148) போன்ற பெருந்திணையின் உரிப்பொருள்கள் நெய்தல் திணைப் பாடல்களில் வந்துள்ளன.

**4.6. தொகுப்புரை**

சங்க இலக்கியங்கள், சங்ககால மக்களின் திணைசார் வாழ்க்கைமுறையையும் ஒழுக்கத்தையும் அந்தந்த நிலத்திற்குரிய தன்மை. அங்கு நிகழும் சூழல் இயற்கைப் பண்பு ஆகியவற்றிற்கு ஏற்ப அமைந்துள்ளன.

சங்கஅகஇலக்கிய பொருள்மரபு முதல், கரு, உரியென வகைப்படுத்தப்பட்டுள்ளன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பவை மக்கள் வாழ்வியல் ஒழுக்கங்களாக இருந்தன. இவற்றில் நெய்தல் கடல்மேற் சென்ற தலைவனின் பிரிவாற்றாது தலைவி இரங்கி நிற்பது. அதனால் இதற்கு இரங்கல் உரிப்பொருள் ஆனது. சங்கப்புலவர்கள் அந்தந்த நிலத்து மக்களின் உள்ளத்தில் எழும் உணர்வுகளுக்கு முதன்மை தந்தே அகப்பாடல்களைப் பாடியுள்ளனர்.

கருப்பொருளும் உரிப்பொருளும் தோன்றுவதற்கு முதலாகிய நிலத்தைக் கூறும்போது முல்லை நிலத்தை முதன்மைப்படுத்துகிறார் தொல்காப்பியர்.

குறிஞ்சி முதலிய நிலங்களின் ஒழுக்கம் பற்றிக் கூறும்போது முல்லையின் இருத்தல், இரங்கல், ஊடல் என்று வரிசைப்படுத்துகிறார்.

புணர்தல் முதலான உரிப்பொருளும் அவற்றின் நிமித்தமும் பெரும்பான்மை அந்தந்த நிலத்திற்குரியதாகவும், சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைக்கும் உரியதாகவும் கொள்ளப்படும் என்கிறார் இளம்பூரணர் கூற்று படி உரிப்பொருள் மயங்கும் என்பதாகவே அமைகிறது.

நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் உரிப்பொருளுக்கு முதற்பொருளும் கருப்பொருளும் இயற்கைப் பின்னணியாக நின்று துணைபுரிவன என்று விளக்கம் தந்துள்ளார்.

இறையனாரகப்பொருள் உரிப்பொருள் என்பதை திணைக்கு உரிய பொருள் என்கிறது. இந்நூல் தொல்காப்பியத்தைப் பின்பற்றியே உரிப்பொருளை வரிசைப்படுத்தியுள்ளது.

தொல்காப்பியத்துக்குப் பின்னெழுந்த நம்பியகப் பொருள் உரிப்பொருளைப் பத்தாக எண்ணுகிறது. தொல்காப்பியம் இரங்கல், ஊடல் என்ற வரிசை முறையில் உரிப்பொருளைக் கூற இந்நூல் ஊடல், இரங்கல் என்ற வரிசைமுறையைக் கடைபிடிக்கிறது. இதற்கான காரணம் ஆராயத் தக்கது.

நம்பியகப்பொருளைப் போன்றே மாறனப்பொருளும் புணர்தல் முதலான உரிப்பொருளும் அவற்றின் நிமிர்த்தமுமென உரிப்பொருளைப் பத்தாக எண்ணுகிறது.

இலக்கணவிளக்கம் உரிப்பொருளைப் பத்தாகக் கூறுகின்றது. முதலும் கருவும் உரிப்பொருளுக்குத் துணை செய்வதை வைத்தியநாத தேசிகரின் உரை தெளிவுபடுத்துகிறது. தமிழ்நெறி விளக்கம் புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் அவற்றின் நிமித்தம் என இலக்கண விளக்கத்தைப் போலவே உரிப்பொருள் வைப்புமுறைப் பின்பற்றப்பட்டுள்ளது.

நெய்தல் திணைப் பாடல்களில் இரங்கல் ஒழுக்கமானது தலைவியின் இற்செறிப்பால் தலைவன் கொண்ட ஆற்றாமை, தலைவனின் வரைவிடைப் பிரிவினால் தலைவியின் மிகுதுயரம், தலைவனை நேரில் காண இயலாததால் தலைவி புலம்பி, கையற்றிருந்த தன்மை, கழி கானலைக் கண்டும் தனிமையை எண்ணியும் தலைவிபடும் மிகுந்த ஆற்றாமையைத் தோழி தலைவனுக்கு உணர்த்தி வரைவு தூண்டுதல், தலைவி தலைவனைக் காணாததால் நெஞ்சழிந்து உயிர்துறக்க எண்ணுதல் போன்றவை நெய்தலின் உரிப்பொருள்களாக கண்டறிப்பட்டுள்ளன.

நெய்தல் திணையில் குறிஞ்சிதிணைக்குரிய களவுகால நிகழ்வுகள் மிக அதிகமாக இடம்பெற்றுள்ளன. மேலும் முல்லை, மருதம் மற்றும் பெருந்திணையின் உரிப்பொருள் கூறுகளும் கலந்து வந்துள்ளன.

இரங்கல் எனும் உணர்வு மாலையிலும், முல்லையிலும் பிரிவு ஏக்கமாக இடம் பெற்றுவிடுவதால் நெய்தல் திணைக்குரிய இரங்கல் உரிப்பொருள் தனித்தன்மையோடு சிறக்கவில்லை. இதனால் நெய்தல் திணையின் உரிப்பொருள் அந்நிலப் பாடல்கள் தவிர பிற எந்த நிலத்திலும் மயங்கவில்லை.

சங்கப் புலவர்கள் திணையை வரையறுத்துக் கொண்டு பாடல்களில் அந்தந்த திணைக்குரிய உரிப்பொருளையே பெரிதும் பாடியுள்ளனர். மேலும் பிறத் திணைக்குரிய உரிப்பொருள்களையும் தாம் எடுத்துக் கொண்ட திணையின் பின்புலத்தில் பாடியிருப்பது சிறப்பிற்குரியதாகும்.

புலனெறி வழக்கமாக இன்ன நிலத்தில் இன்ன ஒழுக்கந்தான் நிகழ்தல் சிறப்பு என்று வரையறை செய்யப்பட்டாலும் உலகியல் வழக்கில் அங்ஙனம் நிகழ்தல் இயலாத ஒன்றாகும். நடைமுறையில் முற்றிலும் ஒவ்வாதது. எனவே ‘‘சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத்திணைகளுக்கும் உரியதாகவும் கொள்ளப்படும் என்ற இளம்பூரணரின் கருத்திற்கு நெய்தல்திணைப் பாடல்களில் உள்ள திணை மயக்கங்கள் இடமளிக்கின்றன.

## சான்றெண் விளக்கம்

1. இளம்பூரணர் (உ.ஆ.), தொல்.பொருள். அகத். ப.2
2. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), தொல்.பொருள். அகத். ப.28
3. ஞானி, தமிழில் படைப்பிலக்கியம், ப.26
4. கி.நாச்சிமுத்து, சங்க இலக்கிய ஆய்வுகள் செய்தனவும் செய்ய வேண்டுவனவும், ப.117
5. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.30
6. பாவலரேறு ச.பாலசுந்தரம் (உ.ஆ.), தொல். பொருள். அகத். (தொகுதி–3, பகுதி–1) சூ.16
7. இளம்பூரணர், (உ.ஆ.), மு.கா.நூல். அகத். ப.16
8. ந.சுப்புரெட்டியார், மு.கா.நூல். பக். 30–31
9. நச்சினார்க்கினியர் (உ.ஆ.), மு.கா.நூல். ப.198
10. மேலது, ப.198
11. மேலது, ப. 199
12. மேலது, ப. 199
13. மேலது, ப. 199
14. நக்கீரர், இறையனார் அகப்பொருள் மூலமும் உரையும், நூ.90
15. சி.வை.தாமோதரம் பிள்ளை, வீரசோழியம், ப.68
16. மேலது, ப.71
17. வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ.), நம்பியகப்பொருள், சூ.25
18. சு.செல்லையாபிள்ளை, மாறனகப்பொருள் ஆய்வுப் பதிப்பும் அதன் அகக்கொள்கைகளும் திருப்பதிக் கோவையில் பயிலும் நிலையில் தொகுதி–1, நூ.30
19. மு.சண்முகம்பிள்ளை, அகப்பொருள் மரபும் திருக்குறளும் ஆராய்ச்சி–6, ப.6
20. அ.கி.நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழர் சமுதாயம், பக். 221–222
21. மு.கோவிந்தராசன், இலக்கிய இலக்கண நுழைவாயில், ப.122

22. வினைத்தொழிற் சோகீரனார், நற்.பா.319:6–11

23. இலம்பூதனார், குறுந்.பா.134:4–6

24. நன்னாகையார், மேலது, பா.325:4–6

25. அம்மூவனார், ஐங். பா.161

26. நிகண்டன் கலைக்கோட்டு தண்டனார், நற்.பா.382:5–9

27. நல்லந்துவனார், கலித்., பா.118:20–25

28. மேலது, பா.120:16–18

29. குறுவழுதியார், அகம். பா.150:12–14

30. அம்மூவனார், மேலது, பா.10:5–8

31. நற்கன்னையார், நற்.பா.19:7–9

32. நல்லந்துவனார், கலித். பா.121:15–23

33. கோகுலமுற்றனார், நற்.பா.96:9–10

34. நம்பிகுட்டுவன், குறுந்.பா.243:4–5

35. பெருங்கண்ணன், மேலது, பா.310:5–8

36. வெள்ளிவீதியார், நற். பா.348:2–10

37. நெய்தல் தத்தனார், மேலது, பா.130:11–12

38. நரிவெரூஉத்தலையார், குறுந்.பா.5

39. உலோச்சனார், நற்.பா.63:5–7

40. நெய்தற்காக்கியார், குறுந்.பா.55:3–6

41. சிறைகுடி ஆந்தையார், மேலது, பா.57:3–6

42. நல்லந்துவனார், கலித். பா.123:13–19

43. அம்மூவனார், ஐங்.பா.111:3–5

44. ஔவையார், குறுந்.பா.102

45. இளந்திரையனார், நற்.பா.94

46. கல்பொருசிறுநுரையார், குறுந்.பா.290

47. நல்லந்துவனார், கலித். பா.126:8–12

48. மேலது, பா.125:21–24

49. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.) தொல். பொருள். தொகுதி–3, பகுதி–2 களவியல், சூ.23

50. நக்கீரர், இறையனார் களவியல் உரை, ப.18

51. உலோச்சனார், நற்.பா.11:8–9

52. குன்றியனார், மேலது, பா.117:1–7

53. ஔவையார், மேலது, பா.295

54. அஞ்சில் ஆந்தை, குறுந்.பா.294

55. அம்மூவன், மேலது, பா.303

56. அறிவுடைநம்பி, நற்.பா.15

57. நக்கன்னையார், மேலது, பா.19

58. நம்பிகுட்டுவன், குறுந்.பா.109

59. குன்றியனார், மேலது, பா.117

60. உலோச்சனார், நற்.பா.38

61. மேலது, பா.287

62. மேலது, பா.249

63. அம்மூவனார், ஐங். பா.183

64. மேலது, பா.116

65. நக்கீரனார், அகம்.பா.310:10–17

66. குடவாயிற்கீரத்தனார், நற்.பா.27

67. பேரிசாத்தனார், மேலது, பா.67

68. அம்மூவனார், ஐங். பா.101

69. மேலது, பா.106

70. மேலது, பா.107

71. தொண்டைமான் இளந்திரையன், நற்.பா.106

72. அம்மூவனார், ஐங். பா.149

73. வாயிலான்தேவன், குறுந்.பா.103

74. அம்மூவனார், ஐங். பா.134

75. மேலது, பா.160:4–5

76. மேலது, பா.151:4–5

77. கயமனார், குறுந்.பா.9

78. நல்லந்துவனார், கலித். பா.39:6–37

79. மேலது, பா.141:21–25

# நெய்தல் நில மக்களின் திணைசார் வாழ்வியல்

## 5.0. முன்னுரை

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து வகைத்திணை சமூகங்களும் ஐந்து வகையான இயற்கைச் சூழல்களை மையமாகக் கொண்டு தங்களின் வாழ்வியலை அமைத்துக் கொண்டனர். நெய்தல் நில மக்கள் கடல்வளத்தையும், உப்பு வணிகத்தையும் மீன் வேட்டையையும் முத்தெடுத்தலையும் முதன்மையான தொழிலாகக் கொண்டு திணைசார்ந்த வாழ்வியலை வாழ்ந்துள்ளனர். இவற்றை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## 5.1. நெய்தல் நில மக்கள்

ஐந்து நிலத்திற்கும் உரிய திணை சார்ந்த மக்களைக் குறிப்பிடும் தொல்காப்பியர்,

''பெயரும் வினையுமென் றாயிரு வகைய

திணை தொறும் மரீஇய திணை நிலைப்பெயரே''[1]

ஐந்து நிலத்திற்கும் உரிய கருப்பொருள்களின் வேறாய் சிறந்து வரும் மக்களைத் திணைக்குரியவர்களாகக் குறிப்பிடுகின்றார்.

இச்சூத்திரத்துக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், ''நால்வகை நிலத்தும் மருவிய குலப்பெயராவன என்று தொடங்கி, நுளையர், திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர், எனவும், உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன பெயர்ப் பெயரும் நாடாட்சி பற்றி வரும் பெயருமாம் என்று தொடங்கி, நெய்தற்குக் கொண்கன் துறைவன், சேர்ப்பன், மெல்லம் புலம்பன், தலைவி பெயர் வந்துழிக் காண்க''[2] என்று கூறியுள்ளார்.

இதே சூத்திரத்துக்கு இளம்பூரணர் உரை எழுதுகையில் ''குலப்பெயரும் தொழிற்பெயரும் என அவ்விருவகைப்படும் திணைதொறும் மருவிப் போந்த

திணை நிலைப் பெயர் என்று உரைத்துப் பின்னர் திணை நிலைப் பெயர் என்றதனால் அப்பெயருடையார் பிற நிலத்து இலர் என்று கொள்ளப்படும். அதனாலே எல்லா நிலத்திற்கும் உரியராகிய மேன்மக்களை ஒழித்து நிலம் பற்றி வாழும் கீழ் மக்களை குறித்து ஓதினார் என்று கொள்க''[3] என்கிறார். ஆக, நுளையர் திமிலர், பரதவர், நுளைத்தியர், பரத்தியர் ஆகியோரை நெய்தல் நில திணை நிலை மாந்தர்களாகவும் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம்புலம்பன் ஆகியோரை காதலுக்குரிய மாந்தர்களாகவும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். நெய்தல் நில மக்களைப் பற்றி நம்பியகப்பொருள்,

''.............சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும அல்குல் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவர் அளத்தியர்''[4]

என்று கூறுகிறது. நெய்தல் நிலத்திற்குரிய தலைமக்களாக சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளையர், நுளைச்சிய, பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர் எனக் குறிப்பிடுகிறது. சங்கஇலக்கியங்களில் நெய்தல் திணைக்குரிய மாந்தர்களாக பரதவர்களை முதன்மைப்படுத்தப்படுவதை,

''கானல் அம் சிறுகுடிக் கடல் மேம் பரதவர்''[5]
''பாட்டம் பொய்யாது பரதவர் பகர''[6]
''கொடுந்திமிறு பரதவர் கோட்டுமீன் எறிய''[7]
''பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கலின்''[8]
''வளைபடு முத்தம் பரதவர் பகரும்''[9]
''தங்கார்– பொதுவர்– கடலுள் பரதவர்''[10]
''பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்''[11]

மேலும் நற்றிணை (63–1, 74–4, 87–8, 175–3, 199–6, 207–9, 239–2, 303–9, 388–4), அகநானூறு (30:3, 140–1, 210–1, 250:1, 280:14, 300:1, 330:15, 340:19, 350:11) போன்ற நெய்தல் திணைப் பாடல்களில் குறிப்பிடப்படுகின்றனர். மேலும் நுளையர் என்பதை,

"நனை முதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்"[12]

"தாழைதுவளும் தரங்க நீர்ச் சேர்ப்பின்றே
ஏழை நுளையரிடம்"[13]

குறிப்பிடுகின்றன. திமிலர் என்பதை,

"திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்"[14]

என்ற பாடலடி சுட்டுகின்றன. மேலும் நெய்தல் திணைக்குரிய பெண்களைக் குறிப்பிடுகையில்,

"மீன் எறி பரதவர் மகளே"[15]

"என் என நினையுங் கொல் பரதவ மகளே ?"[16]

"மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்"[17]

பரதவர் மகள் பரதவர் மடமகள் என்றே சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

### 5.2.பரதவர் குடியிருப்புகள்

சங்ககால இனக்குழு சமூகமானது சிற்றூர், சிறுகுடிகளாக, பாரம்பரியமாக வாழ்ந்த புவியியல் பரப்பில் குடிசையைச் சுற்றியும் ஊரைச் சுற்றியும் வேலிகளை எல்லைகளாக அமைத்து குடும்பங்களாக வாழ்ந்துள்ளனர். பரதவர்களின் குடியிருப்புகள் பாக்கம், சிறுகுடி என்று அழைக்கப்பட்டன. தாழை வேலியும், கழிசூழ்ந்தத் தோட்டமும், முண்டகச் சருகுகளால் வேயப்பட்ட தாழ்வார குடிசைகளைக் கொண்ட பாக்கங்களில் வாழ்ந்ததை,

‘‘கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்
கொழுமீன் கொள்பவர் பாக்கம் கல்லென’’[18]

என கண்டல் மரங்களை வேலிகளாக அமைத்தும் உப்பங்கழிகள் உள்ளப் பகுதிகளில் முண்டகச் சருகுகளைக் கொண்டு அமைக்கப்பட்ட கூரைகள் இருந்தமையை உணர்த்துகின்றன. மேலும்,

‘‘கொடிப்பூ வேழம் தீண்டி, அயல
வடிக்கொள் மராஅத்து வண்தளிர் நுடங்கும்’’[19]

பரதவ இன மக்கள் தங்கள் வசிக்கும் இடங்களுக்கு தில்லை மரங்களைக் கொண்டு வேலி அமைத்திருந்தமையை ஓதலாந்தையாரின் பாடல் சுட்டுகிறது.

மணல் நிரைந்த கானலில் இருந்த பனை ஓலைகளைக் கொண்டு வீட்டைச் சுற்றி வேலிகட்டி பாதுகாப்பு செய்தமையை,

‘‘தான் அது பொறுத்தல் யாவது – கானல்
ஆடு அரை ஒழித்த நீடு இரும் பெண்ணை
வீழ் காவோலைச் சூழ் சிறை யாத்த
கானல் நண்ணிய வார் மணல் முன்றில்’’[20]

என்னும் உலோச்சனாரின் பாடல் பரதவர்களின் குடியிருப்பு அமைப்பை காட்சிப்படுத்துகிறது. மேலும்,

‘‘நிலாவின் இலங்கு மணல் மலி மறுகில்
புலால் அம் சேரி புல்வேய் குரம்பை
ஊர் என உணராச் சிறுமையொடு நீர் உடுத்து’’[21]

ஒளிரும் தன்மை கொண்ட மணல் நிரைந்தப் பகுதியையும் புலால் நாற்றம் வீசும் புல்வேய்ந்த குடிசைகளைக் கொண்ட பரதவர்களின் ஊரை ஊர் என்று கூறமுடியாத சிறுமையைக் கொண்டிருந்தன என்கிறார் உலோச்சனார். பரதவர்களின் குடியிருப்புப் பகுதிகளில் ஊரைச் சுற்றிப் பனை ஓலையோடு முள் மிடைந்து மடலும் பிய்ந்து வீழும் அளவிற்குக் கடும் கடற்காற்று வீசும்போது ஊர் அழிந்து விடாமல் இருக்க வேலிகளைப் பரதவர்கள் அமைத்தமையை,

"பனைத் தலைக் கருக்குடை நெடுமடல் குருந் தொடுமாய
கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்
கணம் கொள் சிமைய உணங்கும் கானல்
ஆழி தலை வீசிய அயீர்ச் சேற்று அருவிக்"[22]

என்னும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பரதவ மக்கள் பேரூர்களாக சேர்ந்து வாழ்ந்துள்ளனர். பரதவர்கள் தூங்கும் இரவு நேரத்தில் கடலில் சுறாமீன் நீரை உமிழும் ஓசைகேட்கும், ஒய்யெனப் பெருந் தெருவில் பெய்யும் மழை நீரை காற்றானது வீட்டுக் கதவு கூரைகளில் தூவும், குளிர்பொறுக்காத நாய்கள் நடுங்கும், அந்த நேரத்தில் இரவுக் காவலர்கள் மணியடித்து ஒலியெழுப்பி எச்சரிக்கை செய்வார்கள் இத்கைய ஆரவாரம் நிரைந்தது பரதவர்களின் குடியிருப்பு என்பதை,

"பேர் ஊர் துஞ்சும்; யாரும் இல்லை;
திருந்து வாய்ச் சுறவும் நீர் தூன்று, ஒய்யெனப்
பெருந்தெரு உதிர்தரு பெயிலுறு தண் வளி
போர் அமை கதவப் புரைதொறும் தூவ
கூர் எயிற்று எகினம் நடுங்கும் நல்நகர்ப்
பயில்படை நிவந்த பல் பூஞ்சேக்கை
அயலும் மாண் சிறியதுவே, அதன்தலை

காப்புடை வாயில் போற்று, ஓ என்னும்

யாமம் கொள்பவர் நெடு நா ஒண் மணி''[23]

என்னும் நற்றிணைப் பாடல் குறிப்பிடுகின்றது.

பரதவ இன மக்கள் குடியிருந்த பகுதிகளை சிறுகுடி, பாக்கம், மூதூர், பேரூர் என அழைத்துள்ளனர். இதனை,

''சிறுகுடிப் பரதவர் பெருங்கடல் மடுத்த

கடுஞ்செலல் கொடுந்திமில் போல''[24]

''கிளைமை கொண்ட வளைஆர் முன்கை

நல்லோள் தந்தை சிறுகுடிப் பாக்கம்''[25]

''தூங்கல் ஓலைஓங்கு மடற் பெண்ணை

மாஅரை புதைத்த மணல் மலிமுன்றில்

வரையாத் தாரம் வருவிருந்து அயரும்

தன்குடி வாழ்நர் அம்குடிச் சீறூர்''[26]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

நெய்தல் நில மக்கள் இயற்கையாக தன் சுற்றுப்புறத்தில் கிடைத்த பொருட்களைக் கொண்டு தங்களின் குடியிருப்புகளை அமைத்தது திணைசார்ந்த நிகழ்வை தெளிவுபடுத்துகின்றது.

## 5.3. நெய்தல் நில ஆண்களின் தொழில்கள்

பரதவ இனமக்கள் நிலம் சார்ந்த தொழில் முறையை மேற்கொண்டிருந்தனர். கடலில் மீன்பிடித்தல், கழிகளில் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், அதனை விற்று அதன் வழியாகக் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு வாழ்க்கை நடத்தியமையை,

“நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை

கடல்பாடு அழிய இனமீன் முகந்து

துணை புணர் உவகையர் பரத மாக்கள்

இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி

உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும்

ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழிஇ,

அயிர் திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்

பெருங்களம் தொகுத்த உழவர் போல

இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்

பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றி

கோடுஉயர் திணிமணல் துஞ்சும் துறைவ”[27]

என்னும் பாடல் உணர்த்துகிறது.

நெய்தல் நில பரதவ இன மக்கள் மீன்பிடித்தல், முத்து எடுத்தல், சங்கு அறுத்தல், உப்பு விற்றல் போன்ற திணைசார்ந்த தொழில்முறைகளை செய்துள்ளனர்.

கடல்சார்ந்த இத்தொழில்முறைகளும், தொழில்நுட்பங்களும் தொழிற்கருவிகளும் அமைந்திருக்கின்றன. “தொழில் நுட்பம் என்பது பண்பாட்டின் பகுதியாகும். அதுவே குறிப்பிட்ட மக்களை அவர்களுடைய சுற்றுச்சூழலுக்கு ஏற்பத்தங்களைத் தகவமைத்துக்கொள்ளும் வாய்ப்பைப்பெற்றுள்ளது. வாழ்க்கைப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும் வகையில் மனித இனம் மட்டுமே தொழில் நுட்ப அடிப்படையில் விடை காணும் முறைகளைக் கண்டுபிடித்து அதனை மேலும் வளர்த்தெடுத்து வந்துள்ளது.”[28] நெய்தல் நில மக்களின் தொழில் நுட்பமாக கலன்களை அமைத்து மீன்பிடித்தலைக் கூறலாம்.

### 5.3.1. மீன்பிடிக்கருவிகள்

நெய்தல் நில பரதவ இன மக்கள் மீன்பிடிக்கும் கருவிகளாக வலைகளையும், கலன்களையும், தூண்டில், எறியுளி ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளனர்.

#### 5.3.1.1. பெரிய வலை

பரதவ இன மக்கள் கடலில் மீன்பிடிப்பதற்கு பல வகையான வலைகளைப் பயன்படுத்தியுள்ளனர். அவற்றில் பெரிய வலையும் ஒன்று. இவ்வலைகளை கடலில் வீசி அனைத்து வகையான மீன்களையும் பிடிப்பதற்கும், அதிகப்படியான மீன்களைப் பிடிப்பதற்கும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

“நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை
கடல்பாடு அழிய இனமீன் முகந்து
துணை புணர் உவகையர் பரத மாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி”[29]

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன. மேலும்,

“உரவுக் கடல் உழந்த பெருவலைப் பரதவர்
மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்
கல்லென் சேரிப் புலவற் புன்னை
விழவு நாறு விளங்கும் இணர் அவிழ்ந்து உடன் கமழும்
அழுங்கல் ஊரோ.................”[30]

இப்பாடலடிகளில் பரதவ இன மக்கள் பெருவலையைப் பயன்படுத்தி அதிகபடியான மீன்களைப் பிடித்து பெரும்மணல் பரப்பில் காயப்போட்டுள்ளதை மெய்ப்பிக்கின்றது.

### 5.3.1.2. வன்ஞாண் பெருவலை

இது வலிமையான நூல்களைக் கொண்டு திரிக்கப்பட்ட வலையாகும். கடலில் உருவாகும் மிகப்பெரிய அலைகளில் வீசி மீன்பிடிப்பதற்குப் பயன்படுத்தியுள்ளதை,

''வடிக்கதிர் திரித்த வல் ஞாண் பெருவலை
இடிக்குரற் புணரிப் பௌவத்து இடுமார்
நிறையப் பெய்த அம்பி காழோர்
சிறை அருங்களிற்றின் பரதவர் ஒய்யும்''[31]

பரதவ இன மக்கள் அதிகபடியான மீன்களைப் பிடித்து மணல் பகுதியில் உணக்கல் செய்தமையை உலோச்சனாரின் பாடல் உணர்த்துகிறது.

### 5.3.1.3. எறியுளி

பரதவ இனமக்கள் கடலுக்குள் படகு மூலம் மீன் பிடிக்கச் செல்லும் போது தங்களின் தற்காப்புக்காக கூர்மையான உளிப்போன்ற கருவியை வைத்திருப்பர். இக்கூர்வளியை மீன்களைப் பிடிக்கப் பயன்படுத்தியமையை,

''கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி
முகம்பட மடுத்தமுலிவெதிர் நோன்காழ்
தாங்குஅரு நீர்ச்சுரத்து எறிந்து, வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய''[32]

என கணக்காயன் தத்தன் எறிஉளிப் பற்றி குறிப்பிடுகிறார். மேலும், பரதவ இன மக்கள் மீன்வேட்டத்திற்கு இரவு நேரங்களில் செல்வதால் எறிஉளி பயன்படுத்தியுள்ளதை,

“கயிறு கடை யாத்த கடுநடை எறிஉளித்
திண்திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ,
நடுநாள் வேட்டம் போகி”[33]

என மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார் குறிப்பிடுகிறார். நீண்ட உறுதியான கயிற்றின் மூலம் எறிஉளியை கட்டிப் பயன்படுத்தியுள்ளனர். மேலும் இக்கயிற்றை மரக்கலத்தின் ஒருமுனையில் கட்டி விட்டு மூங்கில்கம்பால் ஆன எறிஉளியை கடலிலுள்ள மீனின் மீது படுமாறு எறிந்துள்ளனர். மீண்டும் எறிஉளி கலத்திற்கே வந்துவிடும். சிறிது நேரத்தில் காயமடைந்த மீன்கள் இறந்துவிடும். அதனை எடுத்துக் கொணர்வர் என்பதை,

“குறிஇறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்
எறிஉளி பொருத ஏமுறு பெருமீன்
புண் உமிழ்க்குருதி புலவுக்கடல் மறுப்பட
விசும்பு அணி வில்லின் போகி பசும்பிசிர்த்
திரைபயில் அழுவம் உழக்கி உரன் அழிந்து
நிரைதிமில் மருங்கில் படர்தரும் துறைவன்”[34]

என்னும் உலோச்சனாரின் பாடல் பரதவஇனமக்களின் செயல்பாடுகளைக் காட்சிப்படுத்துகின்றன.

**5.3.1.4. தூண்டில்**

பரதவ இன மக்கள் மீன்பிடிக்கப் பயன்படுத்தும் ஒரு கருவியாகும். இது உறுதியான இழையின் நுனியில் கொக்கி போன்ற இரும்பு முள்ளையும் அதில் இணைக்கப்பட்ட தக்கையையும் கொண்ட மெல்லிய நீண்ட கோலாகும். இதனை வாங்குவிசைத் தூண்டில் எனக் குறிப்பிடுவதை,

‘‘....................................... வளைநீர்க்

கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமிற் பரதவர்

வாங்கு விசைத் தூண்டில் ஊங்கு ஊங்குஆகி

வளி பொரக் கற்றை தாஅய் நளி சுடர்

நீல் நிற விசும்பின் மீனொடு புரைய’’[35]

என்னும் பேரிசாத்தனாரின் பாடல் தெரிவிக்கிறது. திணைசார்ந்த தொழிலாகிய மீன் பிடித்தொழிலினை வலைகளைக்கொண்டும் எளிஉளி, தூண்டில் இவற்றின் மூலமாக மீன்களைப் பிடித்து தங்களின் வாழ்வாதாரங்களை பரதவ இனமக்கள் மேம்படுத்தியுள்ளனர். குடும்பநிலையில் ஆண், பெண் என்ற அடிப்படையில் திணை சார்ந்த நிலையில் கடலில் மீன்பிடிக்க ஆண்கள் சென்றுள்ளதை அறியமுடிகிறது. அதோடு பரதவ இன மகளிர் மீன் உணக்கல், உப்புவிற்றல் தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

### 5.3.2.முத்துக்குளித்தல்

பரதவ இன மக்களின் முதன்மையானத் தொழிலாக மீன்பிடித்தலைக் கொண்டிருந்தாலும் முத்துச் சிற்பிகள் நிறைந்த கடல் பகுதிகளை யொட்டி வாழ்ந்தமக்கள் முத்துக்குளித்தலையும் சங்கெடுக்கும் தொழிலையும் செய்துள்ளனர். அதிகபடியான முத்துவளம் நிறைந்த பகுதியாக கொற்கைத் துறைமுகம் விளங்கியதை,

‘‘............................................. ஈண்டு நீர்

முத்துப்படு பரப்பின் கொற்கை முன் துறைச்’’[36]

‘‘அலங்கு இதழ் நெய்தல் கொற்கை முன்துறை

இலங்கு முத்து உறைக்கும் எயிறு கெழுதுவர் வாய்’’[37]

‘‘.................................. முழங்குகடல்

திரைதரு முத்தம் வெண்மணல் இமைக்கும்’’[38]

‘‘........................ பரப்பின்

இவர் திரைதந்த ஈர்ங்கதிர் முத்தம்

கவர் நடைப் புரவிக்கால் வடுத்தபுக்கும்

நல்தேர் வழுதி கொற்கை முன்துறை’’[39]

‘‘.......................................... விரிதிரைக்

கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்

தேன் இமிர் அகன்கரைப் பகுக்கும்

கானல் அம் பெருந்துறைப் பரதவன் எமக்கே’’[40]

என்ற சங்கப்பாடலடிகள் பரதவ இன மக்கள் முத்துக்குளித்தல் தொழிலில் ஈடுபட்டமையை எடுத்துரைக்கின்றன.

### 5.3.3. சங்கெடுத்தல்

நெய்தல் நில பரதவ இனமக்கள் சங்கெடுத்தல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். வலம்புரிச் சங்குகள் கடலில் அதிகபடியாகக் கிடைத்துள்ளதை,

‘‘வலம்புரி உழுதவார் மணல் அடைகரை’’[41]

‘‘துணை புணர்ந்து எழுதரும் தூநிற வலம்புரி

இணைதிரள் மருப்பாக, எறிவளி பாகனா

அயில்திணி நெடுங்கதவு அமைத்து, அடைத்து, அணிகொண்ட

எயில் இடு களிறே போல்— இடுமணல் நெடுங்கோப்பைப்

பயில்திரை, நடுநன்னாள், பாய்ந்து உறூஉம் துறைவ’’[42]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன. மேலும் பரந்த மணல் நிறைந்த நெய்தல் நிலப் பகுதியில் வலம்புரிச் சங்குகள் மேய்ந்து வந்தமையால் உழுத புழுதிபோன்று

காட்சியளித்தமையை அறியமுடிகிறது. சங்குகளை பெண்கள் கைகளில் அணியும் வளையல்களாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

''கடற்கோடு அறுத்த அரம் போழ் அவ்வளை

ஒண்தொடி மடவரல் கண்டிகும், கொண்க,''[43]

''வளை படு முத்தம் பரதவர் பகரும்

கடல்கெழு கொண்கண் காதல் மடமகள்''[44]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. மேலும் பரதவர்கள் ஆழ்கடலில் மூழ்கி வலம்புரிச் சங்கு எடுக்கும் போது எறிசுறாக்கள் உலவிக்கொண்டிருக்கும். அதனால் தமக்கு தீமைகள் ஏற்படும் என அஞ்சியுள்ளனர் என்பதை,

''இலங்கு இரும்பரப்பின் எறிசுறா நீக்கி

வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவர்''[45]

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

பரதவ இன ஆண் மக்கள் முத்தெடுத்தல், சங்கு எடுத்தல் ஆகிய திணை சார்ந்த தொழில்முறைகளை கையாண்டுள்ளனர்.

### 5.3.4. நெய்தல்நிலம் பெண்களின் தொழில்கள்

சங்ககால இனக்குழுச் சமூகத்தில் இடம்விட்டு இடம்பெயர்ந்து ஊர் ஊராகத் திரிந்து உப்பு வாணிபம் செய்த ஒரே குடியாக உமணர்குடி காணப்படுகிறது. உப்பங்கழிகளில் பரதவர் உண்டாக்கிய உப்பை மொத்தமாகத் தங்கள் மாட்டு வண்டிகளில் ஏற்றி ஊர்களில் நெல்லுக்கு மாற்றாக விற்று வாழும் வாழ்க்கை முறையினைக் கொண்டிருந்துள்ளனர். உப்பு வணிகம் செய்வோரை உமணர்கள் என்று அழைப்பர்.

#### 5.3.4.1. உமணப் பெண்கள் உப்பு வணிபம் செய்தல்

உமணர்கள் கூட்டமாகவே வாழ்ந்துள்ளனர் அவர்கள் ஓரிடத்தில் தங்கி உப்பு விற்றுப் போன பிறகு அந்த இடம் பாழ்பட்ட ஊர்போல இருந்ததாக,

“உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின், அகன்தலை
ஊர் பாழ்த்தன்ன ஓமை அம் பெருங்காடு
இன்னா என்றீர் ஆயின்
இனியவோ – பெரும – தமியோர்க்கு மனையே”[46]

என்னும் பெருங்கடுங்கோவின் பாடல் சுட்டுகின்றது. உமணர்களும் உப்புவிற்றலாகிய திணைசார்ந்த தொழில் முறையைச் செய்துள்ளனர்.

உப்பினை எடுத்துச் செல்ல அவர்களிடம் வண்டி, மாடுகள் இருந்தன. அந்த மாட்டு வண்டிகள் ஒன்றன் பின் ஒன்றாக ஒரே வரிசையில் சென்றன. இதனைப் புலவர்கள் ஒழுகை என்பர். ஓரிடத்தில் உமணர்கள் நிலைத்து வாழாததால் அவர்களுடைய வாழ்க்கை நிலையில்லாதவையாக இருந்தமையை,

“உவர் விளை உப்பின் குன்று போல் குப்பை
மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கை
கணம் கொள் உமணர் உயங்கு வயின் ஒழித்த”[47]

என்னும் அம்மூவனாரின் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

உமணரின் இளையமகளொருத்தி உப்பு விற்கச் சென்றாள். ஒருவீதியின் மருங்கே தன் கையிலுள்ள ஒளிவளை கலகல வென்றொலிக்க வீசி நடந்தாள். கல்லுப்புத் தருவேன் நெல்லினைக் கொடுங்கள் என்று விலை கூறி உப்பு விற்றமையை,

“கதழ் கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்
சேரி விலை மாறு கூறலின் மனைய”[48]

என்னும் பாடல் நெய்தல் நில மகளிர் உப்பு வியாபாரம் செய்தமையை அடையாளப்படுத்துகிறது.

**5.3.4.2.மகளிர் மீன் விற்றல்**

நெய்தல் நில மக்கள் ஆண், பெண் பேதமின்றி தங்களின் திணை சார்ந்த தொழில்களைச் செய்துள்ளனர். பரதவர்கள் கடலுக்குள் சென்று படகில் மீன்பிடித்து கொண்டு வந்ததைப் பெண்கள் வகைப் பிரித்து விற்றமையை,

''ஓங்கு திரைப் பரப்பின் வாங்கு விசைக் கொளீஇ
திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்
தழையணி அல்குல் செல்வத் தங்கையர்
விழவு அயர் மறுகின் விலை எனப் பகரும்''[49]

என்னும் சாத்தனாரின் பாடல் தெரிவிக்கின்றது. மேலும் மீன் வேட்டத்தின்போது தன் தந்தை காயமடைந்து வீட்டிலேயே தங்கி இருக்க தாயும் அவருடைய காயங்களுக்கு மருத்துவம் பார்க்க தங்கிவிடுகிறாள். தந்தை உடல்நலம் பெற்றுத் தொழில்மேற் சென்றமையால் மனமகிழ்ந்த தாயும் அன்று உப்பைப் பெற்று விற்று நெல்லை வாங்கிவர உப்பளத்துக்குச் சென்றமையை,

''வயச்சுறா எறிந்த புண்தணிந்து எந்தையும்
நீல் நிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்
உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்புவினை கழனிச் சென்றனள்''[50]

என்னும் கல்லாடனாரின் பாடல் தெரிவிக்கின்றது.

**5.3.4.3. மீன் உணக்கல்**

பரதவர்கள் அதிகபடியான மீன்களைப் பிடித்து கரைகளில் குவித்துவிடுவர். விற்றது போக எஞ்சி உள்ள மீன்களை உப்பிட்டு மகளிர் வெயிலில் உணக்குவர். இதனை,

“உரவுக்கடல் உழந்த பெருவலைப் பரதவர்
மிகு மீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்
கல்லென் சேரிப் புலவற் புன்னை
விழவு நாறு விளங்குஇணர் அவிழ்ந்து உடன்கமழும்
அழுங்கல் ஊரோ”[51]

“நாள்வலை முகந்த கோள் வல் பரதவர்
நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்
பறிகொள் கொள்ளையர் மறுக உக்க
மீன் ஆர் குருகின் கானல் அம்பெருந்துறை”[52]
“பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணக்கலின்
இருங்கழிக் கொண்டஇறகின் வாடலொடு
நிலவு நிற வெண்மணல் புலவ”[53]

என்னும் பாடலடிகள் நெய்தல்நிலமகளிர் விற்கமுடியாத எஞ்சிய மீன்களை கடற்பரப்பில் உணக்கல் செய்தமையை எடுத்துக் காட்டுகின்றன. ஆக நெய்தல் நில மகளிர் உப்புவிற்றல், மீன்விற்றல், மீன் உணக்கல் போன்ற திணை சார்ந்த தொழில் முறைகளைக் கொண்டிருந்தனர்.

## 5.4. பழக்கவழக்கங்கள்

தனிமனிதனின் நடத்தையைப் பழக்கம் என்றும் குழுக்களின் ஒருமித்தச் செயல்களை வழக்கம் என்றும் கூறலாம். மக்களின் பழக்கவழக்கங்களே நாளடைவில் பண்பாடாக மாறுகின்றது. அந்த வகையில் நெய்தல்நில மக்கள் திணை சார்ந்த சில பழக்கங்களைக் கொண்டுள்ளனர்.

### 5.4.1. விருந்தோம்பல்

விருந்தோம்பல் என்பது தமிழர்களுக்கே உரியதாகும். சங்ககால நெய்தல் நில மக்களிடம் இப்பண்பு அதிகமாகவே இருந்துள்ளன. புதிதாக அறிமுகம் இல்லாத

நபர்களை முகம் கோணாமல் வரவேற்று அவர்களுக்குத் தேவையான பணிவிடைகளைச் செய்து இளைப்பாறிச் செல்ல விடுப்பதே விருந்தினரை உபசரிக்கும் பண்பாகும். இதனை வள்ளுவர் 'விருந்து ஓம்பல்' என்னும் அதிகாரமாகவே படைத்துள்ளார். நெய்தல் நில மக்களுக்கென்று பொருந்தக்கூடிய வகையில்,

''செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்

நல்விருந்து வானத்தவர்க்கு''[54]

என்னும் குறட்பாவினைக் குறிப்பிடலாம். ஈங்கு பரதவர்கள் வந்த விருந்தினர்களை மட்டுமல்லாது வரவிருக்கும் விருந்தினர்களுக்காக காத்திருப்பதை,

''பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்

வருவீர் உளீரோ ? எனவும்''[55]

என்று தினமும் விருந்தினர்கள் பலர் புகுகின்ற இல்லறத்தினை அடைப்பதற்கு முன்னர் இன்னும் யாரேனும் இல்லிற்கு வெளியில் இருக்கிறீர்களா என வினவும் பண்பினை நன்னாகையாரின் பாடல் குறிப்பிடுகிறது. மேலும்,

''வரையாத் தாரம் வருவிருந்து அயரும்

தன்குடி வாழ்நர் அங்குடிச் சீறூர்''[56]

என்னும் பாடலும் பரதவ இன மக்கள் அனைவரிடமும் வருவிருந்து அயரும் பண்பு இருந்தமையைத் தெளிவுறுத்துகிறது.

### 5.4.2. விளக்கேற்றல்

நெய்தல் நில மக்கள் இருளினைப் போக்குவதற்காகவும், மாலை நேரத்தினை வரவேற்கும் பொருட்டும் விளக்கேற்றியமையை,

''பகல்கெழு செல்வன் குடமலை மறைய

புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை

இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர

மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண்சுடர்''[57]

என்ற பாடலடிகள் நெய்தல் நில இல் உறை மகளிர் மாலை நேரத்தை வரவேற்கும் பொருட்டு, மீனின் ஊனிலிருந்து பெறப்பட்ட நெய்யினால் விளக்கு ஏற்றி வழிபட்டு வரவேற்றமையினைக் குறிப்பிடுகிறது. மேலும்,

''மீன் நெய் அட்டிக் கிளிஞ்சல் பொத்திய

சிறு தீ விளக்கில் துஞ்சும் நறுமலர்ப்''[58]

என்று 'கிளிஞ்சல்' என்னும் சிப்பியில் ஏற்றியமை குறிப்பிடத்தக்கது. இவ்விளக்கானது நெய்தல் நிலத்தோடு மிகவும் நெருக்கமான தொடர்புடையதாக மட்டுமின்றி, பரதவர்களின் திணை சார்ந்த பண்பாட்டு நிகழ்வினைக் குறிப்பதாக உள்ளது.

### 5.4.3. நோன்பு நோற்றல்

பரதவ இன மகளிரிடையே நோன்பு நோற்கும் பழக்கம் காணப்பெற்றுள்ளது. நோன்பு இருக்கும் மகளிரை 'படிவ மகளிர்' என்று அழைத்துள்ளனர். இதனை,

''கடலம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்

படிவ மகளிர் கொடி கொய்து அழித்த''[59]

என்னும் பாடலடிகள் நோன்பு நோற்கும் மகளிர் அங்கு படர்ந்துள்ள அடும்பின் கொடிகளைக் கொய்துள்ளமையைத் தெரிவிக்கிறது.

### 5.4.4. ஈகைப்பண்பு

பரதவ இன மக்கள் தாங்கள் வசிப்பது சிறுகுடில்களாக இருந்தாலும் பிறருக்குக் கொடுத்து உதவக்கூடிய ஈகைப் பண்பு உள்ளவர்களாகவும் தம்மை நாடி வந்தோர்க்கு இல்லையென கூறாதவர்களாகவும் வாழ்ந்துள்ளனர். இதனை,

‘‘பெருங்களந் தொகுத்த வுழவர் போல

இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்

பாடு பல அமைத்துக் கொள்ளை சாற்றி’’[60]

என்ற பாடலடிகள் தாம் பிடித்து வந்த மீனை இரப்பவர்களுக்கு எல்லாம் வழங்கிய தன்மையினையும்,

‘‘கானல்அம் படப்பை ஆனாவண் மகிழ்ப்

பெருநல் ஈகைநம் சிறுகுடிப் பொலிய’’[61]

என்ற பாடலடிகள் ஒட்டுமொத்த பரதவஇனமக்களிடம் காணப்பட்ட ஈகைப் பண்பினையும் வெளிக்காட்டுவதாக உள்ளன.

**5.4.5. பௌர்ணமி நாளில் மீன்பிடிக்க செல்லாமை**

நெய்தல் நில பரதவ இன மக்கள் இரவு பகல் என இருவேளைகளிலும் மீன்பிடிக்கச் செல்லும் பழக்கம் உடையவர்கள். இவற்றுள் முழுநிலவு தோன்றும் பௌர்ணமி நாளன்று இரவில் மீன்பிடிக்கச் செல்வதில்லை. அன்றைய தினம் கடல் அலையின் வேகம் அதிகமாகக் காணப்படும். இதனை இப்பரதவர்கள் நன்கு அறிந்தவர்களாக இருந்துள்ளனர். இதனை,

‘‘...................... பெருங்கடல்

இரவுத் தலை மண்டிலம் பெயர்ந்தென உரவுத்திரை

எறிவன போல வரூஉம்

உயர்மணல் படப்பை எம் உறைவின் ஊரே’’[62]

என்ற பாடலடிகள் பௌர்ணமி நாளில் அலைகள் ஆர்ப்பரித்து எழுகின்ற செயலினைப் புலப்படுத்துகின்றன. நெய்தல் நிலமக்கள் தங்களின் நிலச்சூழலுக்கு ஏற்ப தங்களின் பண்பாட்டைக் கட்டமைத்துள்ளார்.

## 5.5. பரதவர்களின் திருமணமுறை

சமூக அங்கிகாரத்துடன் இரு உள்ளங்கள் ஒன்றிணைந்து தங்களுக்குள் உறவினை ஏற்படுத்திக் கொள்ளும் நிகழ்வே திருமணம் ஆகும். ஒரு சமூகத்திற்குள் ‘‘மனித இனம் தன்பால் உந்துதலை ஒரு நிறுவன அமைப்பிற்குள் நிறைவு செய்து கொள்ள ஏற்படுத்திய முறையே திருமணமாகும். உயர் பாலூட்டிகளிடமும் பிற கீழின விலங்குகளிடடும் பாலுறவு ஓர் உயிரியல் செயலாக மட்டுமே நிகழ்கிறது. ஆனால் மனிதர்கள் அடிப்படையில் சமுதாய பண்பாட்டு விலங்காதலால் அவ்வுயிரியல் செயலைத் ‘திருமணம்’ என்னும் நிறுவனச் செயலாக்கி அவர்கள் தம்முடைய உயிரியல் உந்துதல்களை நிறைவு செய்து கொள்கின்றனர்’’[63] என்கிறார் பக்தவச்சலபாரதி. இவ்வகையில் நெய்தல் நிலச் சமூகத்தில் நடைபெற்ற திருமணம் பரதவர்களின் உந்துதல்களை நிறைவு செய்யும் தன்மையில் மட்டுமின்றி நெய்தல் திணை சார்ந்தப் பண்பாட்டு நிகழ்வுகளைப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

பழந்தமிழர் மரபுப்படி தலைவனும் தலைவியும் கொடுப்பாரும் எடுப்பாரு மின்றித் தாங்களே சந்தித்துக் களவிலே பழகிப் பின்னர் மணந்து கணவனும் மனைவியுமாய் இல்லற வாழ்க்கையில் ஈடுபடுவது இயல்பு.

நெய்தல் நில ஆண்மகன் தான் விரும்பும் மங்கையை திருமணம்புரிய நினைக்கிறான். எவ்வளவு பொன்னும், பொருளும் கொடுத்தாலும் அப்பெண்ணின் தந்தை அவனுக்கு அவளை மணம் முடிக்க சம்மதிக்க மாட்டார் என்பதை உணர்கின்றான். எப்பாடுபட்டாவது அப்பெண்ணையே மணம் செய்ய வேண்டும் அதற்காக எது வேண்டுமானாலும் செய்ய ஆயத்தமானான். அதன் பொருட்டு அப்பெண்ணின் தந்தை செய்யும் தொழிலாகிய மீன்பிடித்தல், உப்பளத்திற்குச் சென்று உழைத்தல், அவளிடம் தாழ்ந்து கடத்தல், அறநெறியுடன் இருப்பதை உணர்ந்து பெண் தரமாட்டாரா, தருவார் என்று உறுதியுடன் உழைத்த செய்தியை,

“பொன் அடர்ந்தன்ன ஒள்இணைச் செருந்திப்
பல்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையன்
திணிமலர் அடைகரை அலவன் ஆட்டி
அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்
நலம்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்
..............................................................................................
கானல் அம் பெருந் துறைப் பரதவன் எமக்கே”[64]

எனும் அம்மூவனாரின் பாடல் தெரிவிப்பதோடு, இங்ஙனம் தம்மையடைந்து தமக்கு துணையாக உழைக்கும் ஆண் மகன்களுக்குத் தம் மகளிரையே மணமுடித்துத் தம் இல்லத்தோடு வைத்துக் கொள்ளும் வழக்கம் இருந்தமையை அறியமுடிகிறது.

நெய்தல் நில மக்களின் திருமுண முறையில் கூட திணை சார்ந்த நிலையினைக் கொண்டிருந்தமை புலனாகிறது. பரதவ இன மக்கள், மீன்பிடித்தல், மீன் உணக்கல், உப்பு விளைவித்தல், மீன் விற்றல் என்ற நிலம் சார்ந்த அடையாளங்களுடன் தமது வாழ்வியலில் நம்பிக்கைகளும் சடங்குகளும் கொண்டிருந்தனர்.

## 5.6.நம்பிக்கைகள்

நம்பிக்கை என்பது சங்ககாலம் முதல் இன்று வரை மக்களின் மனதில் இடம்பெறுவதாகும். மனிதனின் அச்ச உணர்வே இதற்குக் காரணம் எனலாம். “சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படும் கருத்துக்கள் சில அக்கால மக்களின் நம்பிக்கையை அறிவிப்பனவாக உள்ளன. இவற்றையும் பாடல்களில் குறித்து வைத்தமையை நோக்க அக்காலப் புலவர்கள் அவற்றை அமைத்துப் பாடுவதையும் இலக்கிய மரபாகக் கொண்டிருந்தனரோ என்று எண்ணத் தோன்றுகிறது. உணர்ச்சிகளைப் போல மக்களின் கருத்துக்களைப் படைத்துக் காட்டுவது இலக்கியத்தின் தன்மைகளில் ஒன்றாதலின் இப்பாடல்கள் இவற்றைத் தாங்கி

நிற்கின்றன போலும். ஆயினும் இவை வெறும் குறிப்புகளாக அமையாமல் உவமைகளாகவோ, அறஉணர்வு ஊட்டுவனவாகவோ அமைந்துள்ளமையைக் காணலாம்.''[65] என்கிறார் அ.அ.மணவாளன்.சங்ககாலத்தில் வாழ்ந்த பரதவ இன மக்களிடையே ஏராளமான நம்பிக்கை காணப்படுகின்றன.

### 5.6.1. தெய்வம் குறித்த நம்பிக்கை

நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாட்டுத் தெய்வமாகும். நெய்தல் நிலமக்கள் மரத்தில் தெய்வம் உறைவதான நம்பிக்கையினைக் கொண்டிருந்தனர். ஊர்பொதுவில் உள்ள பனை மரத்தில் தெய்வம் தங்கியிருக்கும் என நம்பினர். இதனை,

''தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்கு மடற்குடம்பைத்''[66]

''துஞ்சாக் கண்ணள் அலமரும் நீயே
கடவுள் மரத்த முள் மிடைக்குடம்பைச்''[67]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன. மேலும், கடலை தங்களது வாழ்வுக் களமாகக் கொண்ட நெய்தல் நில மக்கள் தெய்வம் கடலிலும் பனித்துறைகளிலும் விரும்பி உறைவதாகக் கருதினர். இதனை

''.......................................... தென்திரைப்
பெருங்கடல் பரப்பின் அமர்ந்து உறை அணங்கோ ?
இருங்கழி மருங்கு நிலை பெற்றனையோ ?''[68]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

#### 5.6.1.1. தெய்வ வழிபாடு

சங்ககாலத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் தெய்வம் பற்றிய நம்பிக்கை கொண்டிருந்தனர். ''காடு, மலை, கடல், சுரம் முதலான பழையகால நாகரிகப்

பகுதிகளில் வாழ்ந்த குடிகளிடம் தாங்கள் வாழ்ந்த இயற்கைப் பகுதிகளான மரங்கள், மலைச்சாரல்கள், மலைச்சுனைகள், நீருற்றுக்கள், நீர்நிலைகள், கடல்துறைகள், காட்டுப்பூக்கள், ஆள் அரவமற்ற இடங்கள், இரவுக்காலம் ஆகியவற்றில் கடவுள், தெய்வம், சூள், அணங்கு, சூலி, முருகு ஆகியவை நடமாடின என்ற நம்பிக்கை வெகு ஆழமாக வேர்விட்டிருந்தன''[69] என்கிறார் ராஜ்கௌதமன்.

பரதவ இன மக்களிடம் கடல்துறையிலும், மரங்களிலும், விலங்குகளின் கொம்புகளிலும் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தமையை,

''அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி

யாயும் ஆயமொடு அயரும், நீயும்

தேம்பாய் ஓதி திருநுதல் நீவிக்''[70]

என்ற பாடலடிகள் கடல்துறையில் உள்ள தெய்வத்தை வழிபட்டமையும்

''சினைச்சுறவின் கோடு நட்டு

மனைச்சேர்த்திய வல்லணங்கினான்

மடல்தாழை மலர் மலைந்தும்

புன்தலை இரும்பரதவர்''[71]

எனவரும் பாடலடிகள் சுறாவின் கோட்டில் தெய்வம் உறைந்த செய்தியினையும் வெளிக்காட்டுகின்றன.

### 5.6.1.2. சூள்

தெய்வத்தை முன்னிருத்தி இவளைப்பிரியேன் என்ற ஆண் மகனது சூள் பொய்த்தால் தெய்வம் வருத்தும் என நம்பிக்கை கொண்டு உயிர்பலி எனும் சடங்கினைச் செய்து ஆண் மகனின் நலம் கருதி பெண் செய்யும், வழிபாட்டினை,

“அணங்கல் ஓம்பமதி வாழிய நீ! என
கணம் கெழு கடவுட்கு உயிர்பலி தூஉய்
பரவினம் வருகம் சென் மோ”[72]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

#### 5.6.1.3. விழா

நெய்தல் நில மக்கள் தாம் வழிபடும் தெய்வத்திற்குப் புன்னை மலரும் காலத்தில் விழா எடுக்கும் மரபினைக் கொண்டிருந்தனர், இதனை

“விழவு அயர் மருங்கின் விலை எனப் பகரும்
கானல் அம் சிறுகுடிப் பெருநீர்ச் சேர்ப்ப”[73]

“ஊரே ஒலி வரும் கம்மை யொடு மலிபு தொகுபு ஈண்டி
கலி கெழு மறுகின். விழவு அயரும்மே;”[74]

“உருகெழு தெய்வமும் கரந்து உரையின்றே
விரி கதிர் ஞாயிறும் குடக்கு வாங்கும்மே”[75]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. விழா நடைபெறும் தெருக்களில் மீனின் விலை கூறிவிற்றதையும், நெய்தல் நில விழா ஆரவாரத்துடன் ஊரினர் கூடி நிலவொளியில் கொண்டாட்டத்துடன் நிகழ்ந்ததையும் அறியமுடிகிறது.

#### 5.6.1.4. துணங்கையாடுதல்

நெய்தல் நில விழாவில் அணிகலன்களைச் சூடியப் பெண்கள் விழாக் களத்தில் துணங்கையாடி மகிழ்ந்தனர். இதனை

“இழைஅணி அல்குல் விழவு ஆடு மகளிர்
முழங்கு திரை இன் சீர் தூங்கும்
அழுங்கல் மூதூர் அறிந்தன் றோஇன்றே”[76]

என்னும் அம்மூவனாரின் பாடல் தெரிவிக்கின்றது.

### 5.6.1.5. பலிச்சோறு

மனையில் மகளிர் சமைத்த உணவில் ஒரு கவளத்தை எடுத்து முற்றத்தில் பலியாக இடுவதைக் காணமுடிகிறது. அச்சோற்றினைக் காக்கை உண்டதாகக் கூறப்படுகிறது. இன்னும் இப்பழக்கம் வழக்கத்தில் உள்ளது. மொத்தத்தில் பலிச்சோறு என்பதை நெய்தல் நில மக்களின் சடங்காகக் கருதலாம். இதனை,

''பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்கு உசிர் நிமிரல் மாந்தி எல்பட''[77]

என்னும் நக்கீரரின் பாடலடிகள் எடுத்துக்காட்டுகின்றன.

### 5.6.1.6. நிமிர்த்தம் பார்த்தல்

நிமிர்த்தம் என்பது ஒருவர் வாழ்க்கையில் நிகழப் போவதை வேறொரு நிகழ்வின் வழியாக அறிந்து சொல்வதைக் குறிக்கும். இது ஒவ்வொரு நிலத்திற்கும் மாறுபாடு அடையக் கூடியதாகும். கடற்கரையில் உள்ள வீட்டில் வாழும் பல்லி ஆண் மகனின் வருகை, பெண்களின் துன்பம் தீர விரைவில் நிகழும் என்று முன்கூட்டியே ஒலி செய்தது என்பதை

''முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீர
படும் கொல்வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி''[78]

எனும் பாடலடிகள் விளக்குகின்றன. மேலும்

''கருங்கோட்டுப் புன்னை மலர்த்தாது அருந்தி
இருங்களிப் பிரசம் ஊத அவர்
நெடுந்தேர் இன் ஒலி கேட்டலோ அரிதே''[79]

என்ற பாடலடிகள் வண்டுகள் மலர்களில் படிந்துள்ள மகரந்தங்களை உண்டு களிப்படைந்து ஒலிப்பது நன்னமித்தமாகக் கருதப்படுவதை உணர்த்துகிறது.

**5.6.1.7. பேய்**

நெய்தல் நில மக்களிடம் பேய் பற்றிய நம்பிக்கை காணப்படுகிறது. தொல்காப்பியர் போரினை அடிப்படையாகக் கொண்ட புறத்திணை இயலில் நிலையாமையினை அறிவுறுத்தும் காஞ்சித் திணைத் துறைகளுள் பேய் பற்றிக் கூறுகின்றார். இதனை,

‘‘ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்’’[80]

என்ற கூற்றில் போரில் புண்பட்டுக் காப்பாற்ற முடியாமல் கிடந்தவனைப் பிற பிணம் தின்னும் விலங்கினங்கள் உண்ணாமல் இருப்பதற்காகப் பேய் காத்துக் கொண்டிருந்தமையைக் கூறுகின்றார். இக்கருத்தை உணர்த்தும் வகையில்

‘‘பசும்பூண் வேந்தர் அழிந்த பாசறை,
ஒளிறு வேல் அழுவத்துக் களிறு படப்பொருத
பெரும் புண்ணுறு நர்க்குப் பேஎய் போல’’[81]

என்ற பாடலடிகள், பேய் எவ்வாறு உயிர் போகும் அளவு காத்து நின்றதோ அதே போல தலைவனும் தலைவிக்காகக் காத்துக் கிடந்தமையை உவமையின் வழி அறிந்து கொள்ளமுடிகிறது. மேலும்,

‘‘முது மரத்து உறையும் முரவு வாய் முதுபுள்
கதும் எனக் குழறும் கழுது வழங்கி அரைநாள்
நெஞ்சு நெகிழ் பருவரல் செய்த’’[82]

என்ற பாடலடிகள், நடுஇரவில் முதுமையான மரத்தில் வாழும் வயதான ஆந்தைகூவும் அந்நேரத்தில் பேய்கள் திரியும் எனத் தலைவி அச்சப்படும் தன்மையினைக் காணமுடிகிறது. நெய்தல் நில மக்களிடம் இயற்கைச் சார்ந்த அச்ச உணர்வு இருந்தமையை இதன்வழி அறிந்துகொள்ளமுடிகிறது.

நெய்தல் நில மக்கள் பனைமரத்திலும் கடலிலும் பனித்துறையிலும் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கையினைக் கொண்டிருந்தனர். மேலும் ஆண்கள் சுறாமீனின் கொம்பினை நட்டு கூதாளி, தாழைமலர்களைத் தூவி வழிபாடு செய்தமையை அறியமுடிகிறது.

## 5.7. நெய்தல் நில மக்களின் உணவுமுறைகள்

பயிர்தொழில் செய்யமுடியாத நெய்தல் நில மக்கள் அலைகள் நிறைந்த கடலில் சென்று வலைகளையும் குத்துக்கோலினையும் கொண்டு பல்வேறு விதமான மீன்களை வேட்டையாடுதலையும் பாத்தியமைத்து உப்பு விளைவித்தலையும் தொழிலாகக் கொண்ட இவர்களது உணவு முறைகளை பல நெய்தல் திணைப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

### 5.7.1. நெல் உணவு

நெல்விளையாத நிலப்பரப்பில் வாழும் நெய்தல் நில மக்கள் தாங்கள் பிடித்த மீனினை விற்று மாற்றாகப் பெற்ற நெல்லினை உணவாகப் பயன்படுத்தினர். இதனை,

“பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்
தயிர் மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே”[83]

“நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்
சேரிவிலை மாறு கூறலின் மனைய”[84]

“உப்பை மாறி வெண்ணெல் தரீஇய
உப்பு விளை கழனிச் சென்றனள்”[85]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 5.7.2. மீன்குழம்புடன் நெல்சோறு

உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட வெண்சோற்றில் அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவை மிகுந்த புளிங்கறியை ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் உணவு உண்ட முறையை,

“உப்பு நொடை நெல்லின் முரல்வெண் சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”[86]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன. நெய்தல் நிலம் எப்போதும் புலால் நாற்றம் வீசும் என்பதையும் மணல் மேடுகளில் மீன்கள் கருவாட்டிற்காக உலர்த்தப்படுவதையும்,

“சிறுகுடிப் பாக்கத்து மறுகு புலா மறுக்கும்
மணம் கமழ் கானல், இயைந்த நம் கேண்மை”[87]
“மோட்டு மணல் அடைகரைக் கோட்டுமீன் கெண்டி”[88]

என்னும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 5.7.3. மீனைச் சுட்டு உண்ணல்

நெய்தல் நிலத்தில் வாழும் பரதவச் சிறுவர்கள் இறால் மீனை நெருப்பில் சுட்டு உண்ணும் வழக்கம் உடையவர்கள். இதனை

“கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கி”[89]

என்ற பாடலடி தெரிவிக்கின்றது. மேலும் கொழுமீனை உணவாகக் கொண்டமையை,

“கொழுமீன் வல்சி என்றனம் இழும் என”[90]

“கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்”[91]

என்னும் பாடலடிகள் சுட்டுகின்றன.

### 5.7.4. பனைநுங்கு

நெய்தல் நிலச் சிறுவர்கள் இனியதும், கண்ணை உடையதுமான நுங்கைப் பகுத்து உண்டனர். இச்செய்தியை,

“துணை யதின் முயன்ற தீம்கண் நுங்கின்

பணை கொள் வெம் முலை பாடுபெற்று உவக்கும்,”[92]

என்னும் பாடலடிகள் தெளிவுபடுத்துகின்றன.

### 5.7.5. கள்ளுண்ணல்

கள் என்பது மகிழ்வுணவாகக் கொள்ளப்படுவதாகும். நெய்தல் நிலத்தில் பனைமரத்திலிருந்து பெறப்பட்ட கள் உண்ணப்பட்டதை,

“இரும் பனந்தீம் பிழி உண் போர் மகிழும்”[93]

“ஓங்கித் தோன்றும் தீம்கள் பெண்ணை

நடுவணதுவே தெய்ய”[94]

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

“ஓங்கி இரும்புன்னை வரி நிழல் இருந்து

தேம் கமழ் தேறல் கிளையொடு மாந்தி”[95]

“ஞான்ற ஞாயிறு குடமலை மறைய

மான்ற மாலைமகிழ்ந்த பரதவர்”[96]

“கலி மடைக் கள்ளின் சாடி அன்ன, எம்”[97]

என்ற பாடலடிகள் நெய்தல் நில மக்கள் கள்ளுண்டதற்கான ஆதாரங்களாக அமைகின்றன. இந்நில மக்கள் மாலை நேரத்திலும், புன்னை மர நிழலிலும் சாடி எனும் பாத்திரங்களில் வைத்த கள்ளினை உண்டு மகிழ்ந்தாடியமையை அறியமுடிகிறது. இவ்வாறு நெய்தல் திணை சார்ந்த உணவு முறைகளைக் கொண்டு இந்நில மக்களின் வாழ்வியல் அமைந்தமையை அறியமுடிகிறது.

### 5.8. நெய்தல் நில மக்களின் ஆடைகள்

நெய்தல் நில பரதவ இன மக்கள் இலை தழைகளால் ஆன ஆடைகளை அணிந்துள்ளதை சங்க இலக்கிய நெய்தல் திணைப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

#### 5.8.1. தழையாடை

இயற்கையாய்க் கிடைக்கக்கூடிய பசிய இலைதழைகளைப் பறித்து அதிலிருந்து ஆக்கப்பட்ட ஆடை தழையாடை ஆகும். பெண்கள் தங்கள் தோழிகளுடன் அதிகாலையில் கடற்கரைச் சோலைக்குச் சென்று அங்குள்ள நெய்தல் பூவோடு வேறு நிறங்களையுடைய பூக்களையும் தளிர்களையும் பறித்துத் தொடுத்து அணிந்துள்ளனர். இதனை,

‘‘கானல் ஆயமொடு காலைக்குற்ற
கள் கமழ் அலர தண் நறுங் காவி
அம்பகை நெறித் தழை அணி பெறத் தைஇ’’[98]

என்ற பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன. மேலும் நெய்தல் நிலத்தலைவன் திணை சார்ந்த தழையாடையினைத் தலைவிக்கு அணிவிக்கின்றான். இதனை,

‘‘கொடுங் கழி நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம்பகை நெறித் தழை அணி பெறத் தைஇ
தமியர் சென்ற கானல் என்று ஆங்கு’’[99]

என்ற பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. நெய்தல் நிலப்பெண்களே இத்தழையாடையை பெரும்பான்மையாக அணிந்துள்ளனர். தம் நிலத்தில் உள்ள மலர்களையே பயன்படுத்தியமைக் குறிப்பிடத்தக்கதாகும்.

### 5.9. நெய்தல் நில மக்களின் அணிகலன்கள்

நெய்தல் நில மக்கள் பல்வேறு சிறப்புடைய பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்துள்ளனர். ‘‘பழைய இலக்கியங்களில் அணிகள் பல பெயர்களால் வழங்கப்பட்டன. அணி, பூண், இழை, கலம், தொடி, குழை, வளை என்னும் சொற்கள் அணியைக் குறிப்பன. இவை எல்லாம் யாதாயினும் ஒரு காரணம் பற்றி வந்த பெயர்களாகும். முற்காலத்தில் ஆடை அணிதல் போல உரிய முறையில் அணியும் கழுத்தணியைக் குறித்து, பின் காலப்போக்கில் எல்லா நகைகளையும் பொதுவாகக் குறிக்கும் பெயராக அணி என்பது வந்திருக்கலாம். பூண் என்பது புணரப்படுவது ஆகும். ஓரங்களில் இறுக்கத்திற்காகப் பூண் போடுவதை அறியலாம். அதே போலக் கைகளில் செறிவா அணிந்த நகையைப் பொதுப்பெயராய் வழங்கி இருக்கலாம். இழை என்பது இழைத்துச் செய்யப்படும் நகைகட்குப் பொதுப் பெயராக இழை வழங்கி இருக்கலாம்’’[100] என்பர். நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பரதவ இன மக்கள் ஆண்கள், பெண்கள் என்ற நிலையில் வேறுபட்ட அணிகலன்களை அணிந்துள்ளனர்.

### 5.9.1. ஆண்களின் அணிகலன்

நெய்தல் நில ஆண் மக்கள் மணிகள் பதித்த கழுத்தணியை அணிந்ததற்கான குறிப்பைத் தவிர வேறொன்றும் இல்லை எனலாம். இதனை,

‘‘அணிகிளர் நெடுவரை அலைக்கும் நின் அகலத்து
மணிகிளர் ஆரம் தாரொடு துயில்வர’’[101]

### 5.9.2. பெண்களின் அணிகலன்கள்

நெய்தல் நிலப் பெண்கள் பொன்னால் இழைக்கப்பட்ட அணிகலன்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

### 5.9.2.1. இழை

பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களைக் குறிக்க சங்ககாலப் புலவர்கள் 'இழை' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர் இது பெண்களுக்கு மட்டும் உரிய அணிகலன் ஆகும். இதனை,

"ஒள் இழை உயர் மணல் வீழ்ந்தென"[102]

"மணம் கமழ் பொழில் குறிநல்கினள் நுணங்கு இழை"[103]

"வால் இழை மகளிர் விழவு அணிக் கூட்டும்"[104]

"ஒள்இழை மகளிரொடு ஓரையும் ஆடாய்"[105]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 5.9.2.2. தொடி

நெய்தல் நிலப் பெண்கள் தொடியெனும் அணியைத் தோள்களிலும் கைகளிலும் அணிந்தனர். சான்றாக,

"பண்பும் பயனும் கொண்டனள் தொண்டித்
தண் கமழ் புதுமலர் நாறும் ஒண் தொடி"[106]

"தொடியோர் மடிந்தெனத்துறை புலம்பின்றே"[107]

"பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த"[108]

"பொன் அடர்ந்தன்ன ஒள் இணர்ச் செருந்திப்
பல் மலர் வேய்ந்த நலம்பெறு கோதையின்"[109]

"செறி தொடி ருந்திப் பாறுமயிர் நீவிச்"[110]

"கடிய கழறல் ஓம்புமதி தொடியோன்"[111]

“ஒண் தொடி அரிவை – என நெஞ்சு கொண்டோளே”[112]

“ஒண் தொடி அரிவை கொண்டளை நெஞ்சே”[113]

“நிரை தொடி துயரம் நீங்கின்றால் விரைந்தே”[114]

என்ற பாடலடிகள் அமைகின்றன.

### 5.9.2.3. வளை

நெய்தல் நிலப் பெண்கள் பெரும்பாலும் சங்கினால் செய்த வளையல்களை அணிந்துள்ளனர். பொன்னால் செய்த வளையல்களும் அணிந்துள்ளனர். அரத்தாலும், வாளாலும் அறுத்து வளைகள் செய்து அணிந்தமையை,

“தண்கடல் வளையினும் இலங்கும் இவள்”[115]

“அரம் போழ் அவ்வளைக் குறுமகள்”[116]

“கடற்கோடு செறிந்த மயிர்வார் முன்கை”[117]

“......................... நீதந்த
அறைபுனல் வால் வளை நல்லவோ தாமே”[118]

“கடற்கோடு அவத்த அரம் போழ் அவ்வளை”[119]

என்ற பாடடிலகள் மூலம் அறியமுடிகிறது. நெய்தல்நில மக்களிடம் வளை என்பது மிகவும் புலக்கத்தில் இருந்த அணிகலன் ஆகும். ஐங்குறுநூற்றில் உள்ள ‘வளை பத்து’ என்ற பகுதியில் உள்ள 10 பாடல்களும் சங்கிலிருந்து அறுத்துச் செய்யப்பட்ட வளையல்களைத் தலைவி அணிந்துள்ளதாகப் பாடப்பெற்றுள்ளன.

### 5.9.2.4. சிலம்பு

பெண்களின் காலில் அணியும் ஒருவகை அணிகலன் ஆகும். மணிகள் உள்ளிட்ட சிலம்பினையும், மணலில் நண்டுபிடித்து விளையாடும்போது உடைந்த சிலம்பினைப் பொற்கொல்லர் சரி செய்தலும் சுட்டப்படுகிறது. சிலம்பினை நெய்தல் நிலப்பெண்கள் அணிந்திருந்தமையை,

“இன்மணிச்சிலம்பின் சில்மொழி ஐம்பால்”[120]

“சிலம்பு ஆர்ப்ப இயலியாள், இலள் மன்னோ, இனிமன்னும்”[121]

“அலவன் ஆட்டுவோள் சிலம்பு ஞெமிர்ந்து எனவே”[122]

என்ற பாடலடிகள் தெரிவிக்கின்றன.

### 5.9.2.5.குழை (காதணி)

நெய்தல் நில மகளிர் காதில் அணிகலன் அணிந்துள்ளனர். இதனைக் குழையென்று அழைத்துள்ளனர்.

“கயல் ஏர் உண்கண் கனங்குழை மகளிர்”[123]

“காண்பாம் கனங்குழை பண்பு”[124]

என்னும் பாடலடிகள் கனங்குழையினை நெய்தல் நிலப்பெண்கள் அணிந்தமையைச் சுட்டுகிறது.

## 5.10. தொகுப்புரை

கடலும் கடல்சார்ந்த பகுதியில் வாழ்ந்த நெய்தல் நில மக்களை பரதவர், நுளையர், நுளைச்சியர், திமிலர் என்ற பெயர்களாலும், சேர்ப்பன், புலம்பன், துறைவன், கொண்கன் என்போர் உரிப்பொருளுக்குரிய மாந்தர்களாகவும் திணைசார்ந்த நிலையில் அடையாளங்காணப்பட்டுள்ளது.

நெய்தல் நில மக்கள் தங்கியிருந்த குடியிருப்புக்களின் அமைப்பு, அதற்குப் பயன்படுத்திய பொருட்கள், அவற்றை அமைத்த வகை ஆகியனவும், இம்மக்களின் தொழில்முறைகள், தொழிற்கருவிகள், தூண்டில், எறியுளி, வலைகள் மற்றும் நெய்தல் நில மக்களின் ஆடை, அணிகலன்கள் அவற்றினை அணிந்த முறைகள் போன்ற நெய்தல் திணைசார்ந்த பல செய்திகள் இடம்பெற்றுள்ளன.

நெய்தல் நில மக்கள் பனை மரத்திலும், கடலிலும் பனித்துறையிலும் தெய்வம் உறையும் என்ற நம்பிக்கையினைக் கொண்டிருந்தனர் என்பதும்

பெண்கள் முத்துக்களையும், வலம்புரிச் சங்கினையும் வழிபட்டனர் என்பதும், ஆண்கள் சுறாமீனின் கொம்பினை நட்டு கூதாளி, தாழைமலர்களைத் தூவி வழிபட்டனர் என்பதையும் அறியமுடிகிறது.

தெய்வத்தை முன் நிறுத்தி நிலத் தலைவன் சூள் உரைத்தலும், புன்னை மலரும் காலத்தில் மக்கள் விழா எடுக்கப்பட்டதும், பெண்கள் துணங்கை ஆடியதையும் நெய்தல் திணைப் பாடல்களின் வாயிலாக அறியமுடிகிறது.

நெய்தல் நில மக்களின் திணைசார்ந்த உணவு முறைகள் சமைத்த உணவை காக்கைக்கு முதலில் வைக்கும் பழக்கம் இருந்தமை போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன.

நெய்தல் நில மக்களின் திணை சார் வாழ்வியலாக மீன்பிடித்தல், மீன் உணக்கல், உப்பு விளைவித்தல், மீன் விற்றல், உணவு முறைகள், அணிகலன்கள் ஆடைகள், நம்பிக்கைகள் போன்றவற்றை அடையாளங்களாகச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் பதிவாகியுள்ளன.

நெய்தல் நிலமக்கள் அந்த நிலத்தில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டே தங்களின் வாழ்க்கை முறையை மேற்கொண்டிருந்தமைப் புலப்படுகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), தொல். பொருள். அகத். (தொகுதி–3, பகுதி–1) சூ.20
2. நச்சினார்க்கினியர், (உ.ஆ.), தொல். பொருள். அகத். ப.56
3. இளம்பூரணர், (உ.ஆ.), தொல். பொருள். அகத். ப.13
4. நாற்கவிராசநம்பி, நம்பியகப்பொருள். சூ. 24:1–4
5. அம்மூவனார், நற்.பா.4–1
6. உலோச்சனார், மேலது, பா.38–2
7. கணக்காயன் தத்தன், குறுந்.பா.304–4
8. தும்பிசேர்கீரன், மேலது, பா.320–1
9. அம்மூவனார், ஐங். பா.195–1
10. நல்லந்துவனார், கலித். பா.106–24
11. அம்மூவனார், அகம்.பா.10–10
12. குடவாயிற் கீரத்தனார், மேலது, பா.366–11
13. கணிமேதாவியார், திணைமாலை நூற்றைம்பது, பா.59:3–4
14. சீத்தலைச் சாத்தனார், அகம்.பா. 320:2
15. ஆசிரியர் பெயர் இல்லை, நற்.பா.45:3
16. மிளைகிழான் நல்வேட்டனார், மேலது, பா.349:10
17. ஆரிய அரசன், யாழ்ப்பிரமதத்தன், குறுந்.பா.184:5–6
18. ஆசிரியர் பெயர் இல்லை, நற்.பா. 207:1–3
19. ஓரம்போகியார், ஐங். பா.14:1–2
20. உலோச்சனார், நற்.பா.354:1–4
21. மேலது, அகம்.பா.200:1–4
22. விற்றூற்று மூதெயினனார், குறுந்.பா.372:1–4
23. ஆ.பெ. இல்லை, நற்.பா.132
24. உலோச்சனார், அகம்.பா.330:15–16

25. வடமவண்ணக்கன் பேரிச் சாத்தனார், நற்.பா.323:5–3

26. கதப்பிள்ளையார், நற்.பா135:1–4

27. நெடுஞ்சேரலாதன், அகம்.பா.30

28. ஆ.தனஞ்செயன், சங்கஇலக்கியமும் பண்பாட்டுச்சூழலும், ப.147

29. நெடுஞ்சேரலாதன், அகம்.பா.30:1–5

30. உலோச்சனார், நற்.பா.63:1–5

31. மேலது, பா.74:1–4

32. கணக்காயன் தத்தன், குறுந்.பா.304:1–4

33. பெருங்கண்ணனார், நற்.பா.388:3–5

34. உலோச்சனார், அகம்.பா.210:1–6

35. பேரிசாத்தனார், நற்.பா.199:6–9

36. கணக்காயனார், மேலது, பா.23:5–6

37. அம்மூவனார், ஐங். பா.185:1–2

38. மேலது, பா.105:1–2

39. வெண்கண்ணனார், அகம்.பா.130:8–11

40. அம்மூவனார், அகம்.பா.280:11–14

41. மேலது, ஐங். பா.193:1

42. நல்லந்துவனார், கலித். பா.135:1–5

43. அம்மூவனார், ஐங். பா.194:1–2

44. மேலது, பா.195:5–6

45. சேந்தன் கண்ணனார், அகம்.பா.350:10–11

46. பாலை பாடிய பெருங்கடுங்கோ, குறுந்.பா.124

47. அம்மூவனார், நற்.பா.138:1–3

48. மேலது, அகம்.பா.140:5–8

49. மதுரைக் கூலவாகின் சீத்தலைச்சாத்தனார், அகம்.பா.320:1–4

50. கல்லாடனார், குறுந்.பா.269:3–6

51. உலோச்சனார், நற்.பா.63:1–5

52. மேலது, அகம்.பா.300:1–4

53. தும்பிசேர் கீரன், குறுந்.பா.320:1–3

54. திருவள்ளுவர், திருக்குறள், 86

55. நன்னாகையார், குறுந்.பா.1181:3–4

56. கதப்பிள்ளையார், நற். பா.135:3–4

57. மதுரை அள்ளம் போதனார், நற்.பா.215:2–6

58. ஆ.பெ. இல்லை, மேலது, பா.175:3–4

59. முக்கல் ஆசான், நல்வெள்ளையார், மேலது, பா.272:1–2

60. நெடுஞ்சேரலாதன், அகம்.பா.30:8–10

61. பிசிராந்தையார், நற்.பா.91:8–9

62. வெண்கண்ணி, நற்.பா.375:6–9

63. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.379

64. அம்மூவனார், அகம்.பா.250

65. அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம், ப.61

66. ஆலம்பேரிசாத்தனார், நற். பா.303:3–5

67. சாகலாசனார், அகம்.பா.270:11–12

68. பராயனார், நற்.பா.155:5–7

69. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும், ப.176

70. எழூஉப்பன்றி நாகன் குமாரனார், அகம்.பா.210:8–10

71. கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட்டினப்பாலை, பா.200:86–87

72. நக்கீரர், நற்., பா.358:5–7

73. சீத்தலைச் சாத்தனார், அகம்.பா.320:4–5

74. வெள்ளிவீதியார், நற்.பா.348:3–4

75. உலோச்சனார், மேலது, பா.398:1–2

76. அம்மூவனார், மேலது, பா.138:9–11

77. நக்கீரர், மேலது, பா.258:5–6

78. ஆ.பெ. இல்லை, நற்.பா.169:1–3

79. உலோச்சனார், மேலது, பா.311:1–4

80. பாவலரேறு ச.பாலசுந்தரம், (உ.ஆ.), மு.கா.நூல். சூ.81

81. மிளைகிழான், நல்வேட்டனார், நற்.பா.349:6–8

82. மோசிக்கரையனார், அகம்.பா.260:12–14

83. நக்கீரர், மேலது, பா.340:14–15

84. அம்மூவனார், மேலது, பா.140:7–8

85. கல்லாடனார், குறுந்.269:5–6

86. குடவாயிற் கீரத்தனார், அகம்.பா.60:4–6

87. உலோச்சனார், நற்.பா.203:6–7

88. அம்மூவனார், அகம்.பா.10:11–12

89. உலோச்சனார், நற்.பா.311:6

90. போந்தைப் பசலையார், அகம்.பா.110:17

91. நக்கீரர், மேலது, பா.290:3

92. மதுரை மருதன் இளநாகனார், நற்.பா.392:4–5

93. உலோச்சனார், மேலது, பா.38:3

94. வடமவண்ணக்கன் பேரிசாத்தனார், மேலது, பா.323:1–2

95. பெருங்கண்ணனார், மேலது, பா.388:7–8

96. குன்றியனார், மேலது, பா.239:1–2

97. ஔவையார், மேலது, பா.295:7

98. காஞ்சிப்புலவனார், மேலது, பா.96:7–9

99. கோக்குள முற்றனார், மேலது, பா.96:7–9

100. தமிழ்நாட்டு சமூக வரலாற்றுக்குழு, தமிழ் நாட்டு வரலாறு, சங்ககாலம் வாழ்வியல், ப.79

101. அம்மூவனார், கலித். பா.135:17–18

102. மேலது, ஐங்., பா.122:2

103. மேலது, பா.174:2

104. வெள்ளிவீதியார், குறுந்.பா.386:.3

105. பராயனார், நற். பா.155:1

106. அம்மூவனார், ஐங். பா.176:1–2

107. நெய்தல் தத்தனார், நற்.பா.49:2

108. நக்கீரர், மேலது, பா.258:5

109. அம்மூவனார், அகம்.பா.280:1–2

110. உலோச்சனார், மேலது, பா.300:7

111. பெரும்பாக்கன், குறுந்.பா.29:6

112. அம்மூவனார், ஐங். பா.171:4

113. மேலது, பா.171:1

114. நல்லந்துவனார், கலித். பா.134:27

115. அம்மூவனார், ஐங். பா.106:3

116. மேலது, பா.185:3

117. மேலது, பா.191:1

118. மேலது, பா.193:3–4

119. மேலது, பா.194:1

120. நல்லந்துவனார், கலித். பா.125:16

121. மேலது, பா.147:4

122. உலோச்சனார், நற்.பா.363:10

123. பாலை பாடிய பெருங்கடுங்கோ, மேலது, பா. 398:3

124. நல்லந்துவனார், கலித். பா.142:14

# முடிவுரை

இதுகாறும் சொல்லப்பட்ட செய்திகளின் அடிப்படையில் கீழ்காணும் உறுதிப்பொருட்களை இவ்வாய்வின் முடிவுகளாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

சங்கஅகஇலக்கியப் பொருள்மரபு முதல், கரு, உரியென வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் அடிப்படையிலே சங்கப் பாடல்கள் புனையப்பட்டுள்ளன. முதல் என்பது நிலமும் பொழுதும் ஆகும். முதற்பொருளாகிய நிலத்திலிருந்து தோன்றும் பொருளே கருப்பொருளாகும். உரிப்பொருள் என்பது மக்களுக்குரிய ஒழுக்கம் ஆகும்.

காலத்தால் முற்பட்டதும் பொருளிலக்கணம் கூறுவதும் தமிழ்க்கவிதை மரபை எடுத்துரைப்பதும் ஐந்திணை வைப்பு முறைகளைக் குறிப்பிடுவதில் முதன்மையானதும் தொல்காப்பியமாகும்.

தொல்காப்பியம் ஏழு திணைகளில் கைக்கிளையை முதன்மையாகவும் பெருந்திணையை இதியாகவும் குறிப்பிடுகின்றது. நிலப்பின்னணியில் பகுத்துக் கூறும்போது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்று நிலங்களையும், தெய்வங்களை அடையாளப்படுத்தும்போது முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்றும் குறிப்பிடுகின்றது. உரிப்பொருள்களைக் குறிப்பிடும்போது புணர்தல் (குறிஞ்சி), பிரிதல் (பாலை), இருத்தல் (முல்லை), இரங்கல் (நெய்தல்), ஊடல் (மருதம்) என்றும் குறிப்பிடுகின்றது. மேலும் புறத்திணைகளை பற்றிப் பேசும்போது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்ற வைப்புமுறைக் கூறப்படுகிறது. இத்தரவுகளின் மூலம் தொல்காப்பியர் எவ்விதமான திணைவைப்பு முறையையும் பின்பற்றாமை தெளிவாகிறது.

இறையனார் அகப்பொருளில் குறிஞ்சி, நெய்தல், பாலை , முல்லை, மருதம் என்றும் மற்றொரு இடத்தில் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்றும்

குறிப்பிடுவதிலிருந்து இந்நூலில் திணைவைப்பு முறை கையாளப்படாமை தெளிவாகிறது.

வீரசோழியம் முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் எனத் திணைகளை அடையாளப்படுத்துகின்றன. பிற்கால இலக்கண நூல்களான நம்பியகப்பொருள், மாறனப்பொருள் இரண்டும் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் திணைவைப்புமுறைச் செய்துள்ளன.

குறுந்தொகை, நற்றிணை, நூல்களுக்குப் பதிப்பாசிரியர்களே திணைகளைக் கூறியுள்ளனர். ஆனால் திணைவைப்பு முறை செய்யப்படவில்லை.

திட்டமிட்டுத்தொகுக்கப்பட்ட பாடல் மரபைக் கொண்ட அகநானூற்றில் பாலை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற முறையில் திணை வைப்புமுறை மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஐங்குறுநூற்றில் பாலைகுறிஞ்சி, பாலை முல்லை, பாலை மருதம், பாலை நெய்தல் என்ற முறையில் பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பாலையில் தொடங்கி நெய்தலில் முடியுமாறு திணைவைப்புமுறை செய்யப்பட்டுள்ளன.

கலித்தொகையின் திணைவைப்பானது பாலைத்திணையில் தொடங்கி நெய்தலில் முடியுமாறு பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியப் புறநூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, ஆற்றுப்படை நூல்களிலும் ஐந்திணைகள் பற்றியச் செய்திகள் இடம்பெற்றுள்ளன. ஆனால் திணைவைப்பு முறைகள் எதுவும் பின்பற்றப்படவில்லை.

தமிழ் இலக்கண நூல்களிலும் சங்க இலக்கியங்களிலும் ஐந்திணைகளின் வைப்புமுறையில் எவ்வித ஒருமித்த நிலையும் பின்பற்றப்படவில்லை.

சங்க இலக்கியப் பாடல்களுக்குத்திணை, துறைவகுப்பதில் பதிப்பாசிரியர்கள், உரையாசிரியர்களிடையே சிக்கல்கள் இருந்தமையை அறியமுடிகிறது.

நெய்தல் திணைப்புலவர்களாக உலோச்சனார், நல்லந்துவனார், அம்மூவனார் ஆகியோரைக் குறிப்பிடலாம். இம்மூவரின் பாடல்களிலும் நெய்தல் நிலமும் இந்நிலம்சார்ந்த செயல்பாடுகளும் சிறப்பாகப் பாடப்பட்டுள்ளன.

நிலம் மனித உற்பத்திக் காரணங்களுள் ஒன்றாகும். ஒருநாட்டின் வளத்தை நிலம்தான் தீர்மானிக்கின்றன. கடலும் கடல் சார்ந்த பகுதி நெய்தல் நிலமாகும். இப்பெயருக்கு காரணம் இந்நிலத்தில் பெரும் பான்மையாகப் பூத்த நெய்தல் பூவே ஆகும். அதனாலேயே நெய்தல் என பெயர் பெற்றுள்ளன.

சங்க இலக்கிய நெய்தல்திணைப் பாடல்களில் இளமணல் எக்கர், நுன்மணல் அடைகரை, பூமணம், மெல்லம் புலம்பு, பரப்பு, சேர்ப்பு என்ற சொற்கள் நிலப்பகுதியை குறிக்கின்றன. மேலும் கடல்பகுதியை, அழுவம், புணரி, உரவுக்கடல், தெண்கடல், பெருங்கடல், பனிகடல், குணகடல், திரைச்சுரம், மாநீர், வளைநீர், புலவுநீர், துறைநர், மலிநீர், தீம்நீர் என்ற சொற்களால் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

நெய்தல் திணைப் பாடல்களில் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய ஆறுபொழுதுகளும் பாடுபொருளாக வந்து நெய்தலின் உரிப்பொருளான இரங்கலுக்குத் துணைபுரிகின்றன.

நெய்தல் திணைக்குரிய எற்பாடு, மற்றும் பிறதிணைக்களுக்குரிய மாலை, வைகறை, யாமம் ஆகியனவும் நெய்தல் திணைப் பாடல்களில் கால மயக்கங்களாக வந்துள்ளன.

நெய்தல் நிலத்தலைவன், தலைவி ஆகியோரின் காதலுக்கு நெய்தல்நிலமாகிய கடலும் கடல்சார்ந்த பகுதியும் காரணமாக அமைந்துள்ளன.

தலைவியின் காதலைப் பெற்றோருக்குத் தெரிவிக்கவும், தலைவனின் குறிஇடமாகவும், தலைவியின் சினத்தை அதிகரிக்கவும் கடலே காரணமாக அமைந்து தலைவியின் மன உணர்வான இரங்களை வெளிப்படுத்தியுள்ளன.

தலைவியின் ஆற்றாமை, தலைவியின் புலம்பல், தலைவியின் கலக்கம் ஆகிய நிகழ்வுகளின் வெளிப்பாட்டிற்குக் கடலே காரணமாக இருந்துள்ளன.

திணை ஒழுக்கத்தின் புறநடையே திணை மயக்கமாகும். இத்திணை மயக்கம் இலக்கிய மரபு மீறலுக்கான வரையறை எனலாம்.

குறிஞ்சி, முல்லை, மருதம், ஆகியவற்றின் சிறுபொழுதுகள் நெய்தல்திணைப் பாடல்களில் வந்து நெய்தல் திணைக்குரிய உரிப்பொருளுக்குத் துணை புரிவதாகவே அமைந்துள்ளன.

முதற்பொருளான நிலத்தில் கருக்கொண்டப் பொருள் கருப்பொருளாகும். இக்கருப்பொருளே உரிப்பொருளின் கட்டுமானத்திற்கு உதவுகின்றன.

நிலம் பொழுதின் இயல்பினால் தோன்றுவது கருப்பொருள்களாகும், இக்கருப்பொருள்கள் மானிட நிகழ்ச்சியை விளக்கும் வாயில்களாக அமைந்துள்ளன.

புன்னை, தாழை, ஞாழல், பெண்ணை, தில்லை, வேம்பு , செருந்தி, குரவும், புன்கு, நாவல் ஆகிய மரவகைகள் நெய்தல் நிலத்திற்குரிய கருப்பொருள்களாகும்.

பறவை இனங்களாக அன்னம், அன்றில், கடற்காக்கை, குருகு, கருங்கால், வெண்குருகு, வெள்ளாங்குருகு, மகன்றில், கொக்கு மற்றும் நாரை வகைகளான சாம்பல் நாரை, செந்நாரை, செவ்வரி நாரை, பூ நாரை போன்றவை நெய்தல் திணைப்

பாடல்களின் பாடுபொருள்களாக வந்து தலைவியின் இரங்கல் உணர்வு வெளிப்பாட்டிற்கு அமைந்துள்ளன.

நெய்தல் திணைக்குரிய விலங்குகளாக சுறா மீன், முதலை, உமண்பகடு, குதிரை, நீர்நாய், ஞமலி, கோவேறுகழுதை, ஆமை, அலவன், சங்குகள், தாலி, முரல், முத்துசிற்பிகள் போன்றவை சங்க இலக்கிய நெய்தல்திணைப் பாடல்களில் பாடுபொருள்களாக வந்து தலைவியின் திணைசார் ஒழுக்கத்திற்கு உறுதுணையாகும் கருபொருள்களாகும்.

நெய்தல் திணைக்குரிய கருப்பொருள்களின் வழியாக தலைவியின் பிரிவுத்துயர், புன்னை மரத்திடம் தலைவி கொண்ட அன்பு, இல்லறப்பண்புகள், தலைவனின் பரத்தமை ஒழுக்கம், தலைவியின் பசலை போன்ற உணர்வுகளை வெளிப்படுத்தும் வாயில்களாக அமைந்துள்ளன.

வேலன் வெறியாடல், குறும்பொறைநாடன், அருவி, கோங்கு, மூங்கில் போன்ற குறிஞ்சித் திணைக்குரிய கருப்பொருள்கள் நெய்தல்திணைப் பாடல்களிலிருந்து நெய்தல் நிலத்தலைவியின் இரங்கல் ஒழுக்க வெளிப்பாட்டிற்குத் துணைபுரிபவைகளாக வந்துள்ளன.

முல்லைத்திணைக்குரிய கருப்பொருள்களான நாடன், முயல், மாடு, முல்லை, கொன்றை போன்ற பொருள்களும், மருதத்திணைக்குரிய கருப்பொருள்களான நல்வயல் நாடன், குருகு, வதிநாரை, எருமை, மூதூர் குவளை, தாமரை மா, நெல், தண்ணுமை, செந்நெல் அரித்தல் போன்றவைகளும் நெய்தல் திணைப்பாடல்களில் கலந்துவந்து நெய்தலின் உரிப்பொருள்களை வெளிப்படுத்தும் வாயில்களாக அமைந்துள்ளன.

பாலைநிலக் கருப்பொருள்களான வேட்டுவர், கூகை, குராஅ, இடும்பை போன்ற பொருட்கள் நெய்தல் திணைப் பாடல்களின் பாடுபொருள்களாக அமைந்து தலைவியின் ஆற்றாமை உணர்வை வெளிப்படுத்துகின்றன.

‘கருப்பொருள்கள் வந்த நிலத்தின் பயத்தவாகும்’ என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு ஏற்றாற்போல பிறதிணைக் கருப்பொருள்கள் நெய்தல் திணைப்பாடல்களில் கலந்துவந்து நெய்தல்திணைக்குரிய ஒழுக்க வெளிப்பாட்டிற்குக் காரணமாகின்றன.

தமிழ் இலக்கண நூல்கள் குறிப்பிட்டுள்ள கருப்பொருள்களைப் பெற்றதோடு மட்டுமல்லாமல் பிறகருப்பொருள்களான புகார் தெய்வம், அணங்கு, குதிரை, காளை, வலம்புரிசங்கு, வேம்பு, தில்லை, தாழை அடும்பங்கொடி, அன்னம், அன்றில் போன்றவை பாடுபொருள்களாக வந்துள்ளன. உரிப்பொருள் என்பது மக்களுக்குரிய உயிர்ப்பொருளாகும்.

புணர்தல் முதலான உரிப்பொருள்களும் அவற்றின் நிமித்தங்களும் பெரும்பான்மை அந்தந்த நிலத்திற்கு உரியதாகவும், சிறுபான்மை பிற திணைக்கும் உரியதாகவும் கொள்ளப்படும் என்கிறார் இளம்பூரணர். இவர்கூற்று உரிப்பொருள்கள் மயங்கும் என்பதாக உள்ளது.

நச்சினார்க்கினியர் ஐந்திணைஅல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் மயங்கும் என்கிறார்.

இறையனாரகப் பொருள் உரிப்பொருளைத் திணைக்கு உரிய பொருள் என்கிறது. இந்நூல் தொல்காப்பியத்தைப் பின்பற்றி உரிப்பொருளை விளக்குகிறது.

வீரசோழியம் உரிப்பொருளை நடையியல் சான்றுகளுடன் விளக்குகிறது. முதலும் கருவும் உரிப்பொருளுக்குத் துணை புரிவனவாகக் குறிப்பிடுகின்றது.

நம்பியகப்பொருள், மாறனகப்பொருள் ஆகிய நூல்கள் உரிப்பொருளை பத்தாகக் குறிப்பிடுகின்றன.

தொல்காப்பியம் உரிப்பொருள் மயங்காது என உணர்த்த நம்பியகப்பொருள் முப்பொருளும் மயங்கு என்று கூறுகிறது.

மாறனகப்பொருள் உரிப்பொருள் மயங்கும் என்றும் நிலம் மயங்காது என்றும் குறிப்பிடுகிறது.

நெய்தல் திணைப்பாடல்களில் தலைவி ஆற்றாமை உணர்வின் மிகுதியால் இரங்குவதாகப் பாடப்பட்டுள்ளன.

உரிப்பொருள் வைப்புமுறை, பெரும்பாலான இலக்கண நூல்களிலும் பின்பற்றப்படவில்லை.

தமிழ்நெறி விளக்கமும், இலக்கண விளக்கமும் உரிப்பொருள்களைக் குறிப்பிடும்போது புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் அவற்றின் நிமித்தம் எனக் கூறுவதோடு நெய்தல் திணையின் உரிப்பொருளான இரங்கலை இறுதியாக வைத்துள்ளன.

நெய்தல் நிலத்தலைவன், தலைவியின் ஒழுக்கங்களாக இத்திணைப் பாடல்களில் தலைவியின் இற்செறிப்பால் தலைவன் கொண்ட ஆற்றாமை, தலைவனின் வரைவிடைப் பிரிவால் தலைவியின் மிகுதுயரம் தலைவனை நேரில் காண இயலாததால் தலைவி புலம்பி கையற்றிருந்த தன்மை ஆகியவை நெய்தல் திணைக்கே உரிய ஒழுக்கமாகக் கொல்லாம்.

கழி கானலைக் கண்டும், தனிமையை எண்ணியும் தலைவிபடும் மிகுந்த ஆற்றாமையைத் தோழி தலைவனுக்கு உணர்த்தி வரைவிற்கு தூண்டுவதையும் தலைவனைக் காணாததால் தலைவி நெஞ்சழிந்து உயிர்துறக்க எண்ணுதலையும் நெய்தல் திணைக்குரிய ஒழுக்க நிமிர்த்தங்களாகக் கூறலாம்.

புலனெறி வழக்கமாக இன்ன நிலத்தில் இன்ன ஒழுக்கந்தான் நிகழ்தல் சிறப்பு என்று வரையறை செய்யப்பட்டாலும் உலகியல் வழக்கில் அங்ஙனம் நிகழ்தல் இயலாததொன்றாகும். நடைமுறையில் முற்றிலும் ஒவ்வாதது. எனவே சிறுபான்மை எல்லாப் பொருளும் எல்லாத் திணைகளுக்கும் உரியதாகவும் கொள்ளப்படும் என்ற

இளம்பூரணரின் கருத்திற்கு நெய்தல்திணைப் பாடல்களில் உள்ள திணை மயக்கங்கள் இடமளிக்கின்றன.

நெய்தல் திணைப்பாடல்களில் முதல், கரு, உரி என்னும் மூன்று பொருளும் சிறப்பாகப் பயின்று வந்துள்ளன. இப்பாடல்களில் உரிப்பொருளுக்கு முதற்பொருளும் கருப்பொருளும் பின்னணியாக நின்று துணைபுரிந்துள்ளன.

மக்களின் அறிவுநலம், ஒழுக்க உயர்வு, கொள்கை நலம், பண்பு நலம், வாழ்க்கை நலம் ஆகியவற்றின் திருந்திய நிலையே பண்பாடு எனலாம்.

நெய்தல் நில மக்கள் இந்நிலம் சார்ந்த அடையாளங்களுடன் வாழ்க்கை நடத்தியுள்ளனர்.

நெய்தல் நிலத்தில் வாழ்ந்த மக்களை நுளையர், திமிலர், உமணர், பரதவர் என்று ஆண்களையும் நுளைச்சியர், பரத்தியர் என்று பெண்களையும் குறிப்பிடுகின்றனர். மேலும் தலைவன் பெயராகச் சேர்ப்பன், துறைவன், கொண்கன், மெல்லம்புலம்பன் எனவும் இத்திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

நெய்தல் நிலமக்கள் கடலையடுத்த மணல் பகுதிகளில் சிறுசிறு குடில்களை அமைத்து வாழ்ந்துள்ளனர். இச்சிறுசிறு குடில்களை கானலம் சிறுகுடி எனச் சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

கானல் நண்ணிய காமர் சிறுகுடி, சிறுகுடிபாக்கம், பெருமீன் கொள்ளும் சிறுகுடிப்பரதவர், புலவு நாறு சிறுகுடி, துறைகெழு சிறுகுடி, கானல் நண்ணிய சிறுகுடி, அவ்வலைப் பரதவர் காலம் சிறுகுடி, கல்லென் சிறுகுடி போன்றவை நெய்தல் நிலம் சார்ந்த அடையாளங்களாக மக்களின் குடியிருப்பு பகுதிகளைக் குறிக்கின்றன.

நெய்தல் நில மக்கள் குடியிருப்புகளில் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வருவதாம் அக்குடியிருப்புகள் மூதூர் என்று அழைக்கப்பட்டுள்ளன.

நெய்தல் நிலமக்களின் குடியிருப்புகள் மூங்கில் கோல்களை வரிசையாக நட்டு வஞ்சி, காஞ்சி மரங்களை இடையில் பரப்பி இவற்றை தாழை நாரினைக் கொண்டு கட்டி மேலே தருப்பைப் புல்லைக் கொண்டு வேய்ந்து குடில்கள் அமைத்து வாழ்ந்துள்ளனர்.

நெய்தல் நில ஆண்மக்கள் அம்பி, திமில், நாவாய், வங்கம், கலம், தோணி, போன்ற மரக்கலங்களைப் பயன்படுத்தி மீன்பிடிப்புத் தொழில் நடத்தியுள்ளனர். இதுவே இவர்களின் வாழ்வாதாரமாக அமைந்துள்ளன. குறுங்கண் வலை, நுண் ஞாண் வலை, விரிவலை, முடிவலை, எறிஉளி, தூண்டில் போன்றவை மீன்பிடிக்கும் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நெய்தல்நில மகளிர் மீன் உணக்கல், உப்பு விளைவித்தல், உப்பு விற்றல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர். இந்நில மக்களின் வாழ்வாதாரமாக நிலமும் இந்நிலத்தில் கிடைக்கும் கருப்பொருள்களும் அமைந்துள்ளன.

தனிமனிதனின் நடத்தையைப் பழக்கம் என்றும் குழுக்களின் ஒருமித்தச் செயல்பாட்டை வழக்கம் என்றும் கூறலாம்.

பரதவ இன மக்கள் முழுப்பௌர்ணமி நாளன்று கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லமால் சுறாக் கொம்பினைச் சார்த்தி பூஜை செய்து வருணனுக்காக வழிபாடு நடத்தியுள்ளனர்.

நெய்தல் நில மக்களின் உணவுப்பழக்கங்களாக நெல், மீன், கள் போன்றவை இடம்பெற்றுள்ளன.

தழையாடை, நூலாடை மற்றும் விழாக்காலங்களில் பட்டாடை போன்றவை நெய்தல் நில மக்களின் ஆடைகளாகும்.

நெய்தல் நில மக்களின் அணிகலன்களாக வலையணி, பூண், சிலம்பு, மலரணி போன்றவற்றைக் கூறலாம்.

விருந்தோம்பல், நோன்பு நோற்றல், விளக்கேற்றல், இல்லினை எழில்படுத்துதல் போன்றவற்றை இந்நில பெண்களுக்குரியப் பண்பாகக் குறிப்பிடலாம்.

நெய்தல் நில மக்கள் பேய், அணங்கு, கூற்றம், சூள் உரைத்தல், ஊழ் போன்றவற்றில் நம்பிக்கை கொண்டவர்களாக வாழ்ந்துள்ளனர்.

நெய்தல் நில மக்களின் வாழ்க்கை முறையானது இந்நில முதற்பொருள், கருப்பொருள்களின் மூலமாகவே திணைசார்ந்த வாழ்வியல் முறையாக அமைந்துள்ளன.

சங்க இலக்கிய நெய்தல் திணைப் பாடல்களில் முதற்பொருள், கருப்பொருள் ஆகிய இரண்டும் உரிப்பொருள் சிறக்கத் துணைப்புரிகின்ற விதத்தில் அமைந்துள்ளன.

நெய்தல் திணைக்குரிய இரங்கல் மற்றும் இரங்கல் நிமித்தம் அனைத்து நெய்தல் திணைப்பாடல்களிலும் பாடுபொருளாக வந்துள்ளன.

பிறத்திணைகளைப் போலவே இரங்கல் உணர்வு மிகுதியாக பெண்களை மையமாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன.

**மேலாய்வுக்குரிய களங்களாக,**

1. சங்க இலக்கிய ஐந்திணைகளில் ஒரு துறைசார்ந்தப் பாடல்கள்
2. சங்ககால நெய்தல் நில மக்களின் மொழி நிலைகள்
3. இனவரைவியல் நோக்கில் நெய்தல்திணைப் பாடல்களும் இன்றைய மீனவர்களின் வாழ்வியலும்
4. நெய்தல் திணைப் பாடல்களில் சுற்றுச்சூழல்

ஆகியனவற்றைக் குறிப்பிடலாம்.

# துணைநூற்பட்டியல்

## மூலநூல்கள்

1. கந்தையா, ந.சி. 2008 செவ்விலக்கியக் கருவூலம்
அகநானூறு
தமிழ்மண் அறக்கட்டளை
பெரியார்குடில், தியாகராயர் நகர்
சென்னை–600 017.

2. மேலது, 2008 செவ்விலக்கியக் கருவூலம்
பரிபாடல்
தமிழ்மண் அறக்கட்டளை
பெரியார்குடில், தியாகராயர் நகர்
சென்னை–600 017.

3. சக்திதாசன் சுப்பிரமணியன் 2008 செவ்விலக்கியக் கருவூலம்
குறுந்தொகை, கலித்தொகை
தமிழ்மண் அறக்கட்டளை
பெரியார்குடில், தியாகராயர் நகர்
சென்னை–600 017.

4. துரைசாமிப்பிள்ளை, சு. ஔவை (உ.ஆ.) 2008 செவ்விலக்கியக் கருவூலம்
நற்றிணை தொகுதி–1,2,3,4,
ஐங்குறுநூறு தொகுதி – 1,2,
புறநானூறு, பதிற்றுப்பத்து – 1,2
பத்துப்பாட்டு
தமிழ்மண் அறக்கட்டளை
பெரியார்குடில், தியாகராயர் நகர்
சென்னை–600 017.

5. தட்சிணாமூர்த்தி, அ. 2007 ஐங்குறுநூறு மூலமும் உரையும்
தொகுதி 1,2
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்
அம்பத்தூர்
சென்னை–98.

6. நாகராஜன், வி. 2007 குறுந்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98.

7. மேலது 2007 அகநானூறு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98.

8. பாசுப்பிரமணியன். கு.வெ. 2007 நற்றிணை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98.

9. விசுவநாதன், அ. 2007 கலித்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98.

**துணைமை ஆதாரங்கள்**

1. அகத்தியலிங்கம்.சு. 2001 தொல்காப்பிய உருவாக்கம்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்–1.

2. அருணாசலம், ப. 1975 தொல்காப்பியம்
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை.

3. அம்மன்கிளிமுருகதாஸ் 2006 சங்கக் கவிதையாக்க மரபும் மாற்றமும்
குமரன் பதிப்பகம்
சென்னை–26.

4. அப்பாத்துரை,கா. 2010 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்
இராமையா பதிப்பகம்
சென்னை–14.

5. அறவாணன், க.ப. 2002 அற்றை நாட்காதலும் வீரமும்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்–1.

6. இளம்பூரணர் (உ.ஆ.) 1992 தொல்காப்பியம் பொருளதிகாரம்
அகத்திணையியல்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

7. எங்கெல்ஸ்,பி. 2008 குடும்பம் தனிச்சொத்து அரசு
ஆகியவற்றுடன் தோற்றம்
பாரதி புத்தகாலயம்
சென்னை.

8. கடிகாசலம்.ந. (ப.ஆ.) 1998 சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு
சிந்தனைப் பின்புல மதிப்பீடு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை.

9. கந்தையா.ந.சி. 2002 தமிழர் சரித்திரம்
அமிழ்தம் பதிப்பகம்
சென்னை.

| | | | |
|---|---|---|---|
| 10. | கந்தசாமி. சோ.ந. | 1986 | குறுந்தொகை திறனாய்வு<br>மணிவாசகர் பதிப்பகம்<br>சிதம்பரம்–1. |
| 11. | கலியாணசுந்தரம், தெ. | 1992 | சங்க இலக்கிய அகப்பாடல்<br>உணர்வுப்போராட்டம்<br>வாணிப் பதிப்பகம்<br>கோவை–11. |
| 12. | கார்த்திகேசு சிவத்தம்பி | 2003 | பண்டைத் தமிழ்ச் சமூகம்<br>வரலாற்றுப் புரிதலை நோக்கி<br>மக்கள் வெளியீடு<br>சென்னை. |
| 13. | மேலது | 1982 | இலக்கணமும் சமூக உறவுகளும்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>சென்னை–98. |
| 14. | கேசவன், கோ. | 1979 | மண்ணும் மனித உறவுகளும்<br>சென்னை புக் ஹவுஸ்<br>சென்னை. |
| 15. | கோவிந்த ராசமுதலியார், கோ. | 1998 | அகப்பொருள் விளக்கம்<br>கழக வெளியீடு<br>சென்னை. |
| 16. | கைலாசபதி,க. | 1978 | பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்<br>மக்கள் வெளியீடு<br>24, உனிசு அலி சாகிம் தெரு<br>சென்னை. |
| 17. | சிங்காரவேலு முதலியார். அ. | 1983 | அபிதான சிந்தாமணி<br>ஏசியன் எடுகேஷன் சர்வீஸ்<br>புதுடெல்லி. |

18. சுப்பிரமண்யன், ந. 2010 சங்ககால வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை—98.

19. சுப்பிரமணியன். கா. 2011 சங்ககாலச் சமுதாயம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை—98.

20. சுப்புரெட்டியார், ந. 2011 தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை
சந்தியா பதிப்பகம்
சென்னை—23.

21. மேலது 1981 அகத்திணைக்கொள்கைகள்
நாவல் பிரிண்டர்ஸ்
137, ஜானி ஜான் கான் ரோடு
சென்னை—14.

22. தட்சிணாமூர்த்தி, அ. 2005 தமிழர் நாகரிகமும் பண்பாடும்
யாழ் வெளியீடு
சென்னை.

23. தமிழண்ணல் 2009 சங்கமரபு
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை—1.

24. மேலது 2003 சங்க இலக்கிய ஒப்பீடு
(இலக்கியக் கொள்கைகள்)
மீனாட்சி புத்தக நிலையம்.

25. தாமோதரம்பிள்ளை, சி.வை. 2008 வீரசோழியம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை—113.

| | | |
|---|---|---|
| 26. திலகவதி. க. | 2001 | சங்ககால மகளிர் வாழ்வியல்<br>இறையருள் பதிப்பகம்<br>4/ 371 முதல்தெரு<br>ஆதிநகர், காட்டூர்<br>திருச்சி–19. |
| 27. தேவநேயப்பாவாணர்,நா. | 1966 | பண்டைத் தமிழர் நாகரிகமும்<br>பண்பாடும்<br>நேசமணி பதிப்பகம்<br>காட்டுப்பாடி பிரிவு<br>வேலூர். |
| 28. நச்சினார்க்கினியர் | 1992. | தொல்காப்பியம் பொருளதிகாரம்<br>அகத்திணையியல்<br>மதுரை காமராசர் பல்கலைக்கழகம்<br>மதுரை. |
| 29. மேலது | 2007 | தொல்காப்பியம் பொருளதிகாரம்<br>மூலமும் பேராசிரியர் உரையும் பாகம்–1,2<br>கணேசையர் பதிப்பகம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி–113. |
| 30. பக்தவத்சலபாரதி | 2009 | பண்பாட்டு மானிடவியல்<br>மெய்யப்பன் பதிப்பகம்<br>சிதம்பரம்–1. |
| 31. பாமயன் | 2012 | திணையியல் கோட்டுபாடுகள்<br>தடாகம்<br>12/293 இராயப்பேட்டை நெடுஞ்சாலை<br>இராயப்பேட்டை<br>சென்னை–600 014. |

32. பாலசுப்பிரமணியன், கு.வெ. 1994 சங்க இலக்கியத்தில் அமைப்புகள்
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
தஞ்சாவூர்.

33. பாலசுந்தரம்.ச (உரை.ஆ.) 2012 தொல்காப்பியம் (தொகுதி–2,3,
பகுதி–1,2) பொருளதிகாரம்
ஆராய்ச்சிக்காண்டிகையுரை
அகத்திணையியல்– புறத்திணையியல்
பெரியார் பல்கலைக்கழகம்
சேலம்–11.

34. பிள்ளை, கே.கே. 2004 தமிழ் வரலாறும் மக்களும் பண்பாடும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

35. மணிவேல்,மு. 2009 தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள்
செல்லப்பா பதிப்பகம்
மதுரை–1.

36. மயிலை சீனி வேங்கடசாமிநாட்டார் 2005 சங்ககால வரலாற்றில் சில செய்திகள்
பாவை பப்ளிகேஷன்ஸ்
இராயப்பேட்டை
சென்னை.

37. மறைமலையடிகள், சி.இ. 2004 இலக்கியமும் சமூகவியலும்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை–1.

38. மாதையன், பெ. 2009 அகத்திணைக்கோட்பாடும் சங்க
அகக்கவிதை மரபும்
பாவை பப்ளிகேஷன்ஸ்
சென்னை–14.

39. மேலது — 2011 — தமிழ்ச் செவ்வியல் படைப்புகள்
கவிதையியல் சமுதாயவியல் நோக்கு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை–98.

40. மேலது — 2004 — சங்ககால இனக்குழு சமுதாயம்
அரசு உருவாக்கமும்
பாவை பப்ளிகேஷன்ஸ்
சென்னை–14.

41. ராஜ்கௌதமன் — 2006 — பாட்டும் தொகையும்
தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக
உருவாக்கமும்
தமிழினி
சென்னை–14.

42. வசந்தாள், த. — 1990 — தமிழிலகியத்தில் அகப்பொருள் மரபுகள்
ஒரு வரலாற்றுப் பார்வை
சென்னை பல்கலைக்கழகம்
சென்னை–5.

43. ஜமாலன் — 2003 — மொழியும் நிலமும்
புதுமலர் பதிப்பகம்
176/10 வைகரைத் தெரு
ஈரோடு–4.

44. ஷஜகான் கனி, வெ.மு. — 2012 — திணைவரலாறு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை–13.

## ஆய்வேடுகள்


1. இராசாத்தி. வே. 1998 சங்க இலக்கியத்தில் திணைக்கோட்பாடு ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடு பாரதியார் பல்கலைக்கழகம் கோவை–46.

2. சிவமணி, கா. 1992 சங்க அகத்திணை கோட்பாட்டு நோக்கில் தமிழ் மலையாள நெய்தல் நில நாவல்கள் முனைவர்பட்ட ஆய்வேடு பாரதியார் பல்கலைக்கழகம் கோவை–46.

3. சோமசுந்தரம், மா. 1992 சங்க அகப் பாடல்களில் திணை மயக்கம் முனைவர்பட்ட ஆய்வேடு பாரதியார் பல்கலைக்கழகம் கோவை–46.

4. முத்துக்கண்ணப்பன் 1971 சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம் முனைவர் பட்ட ஆய்வேடு சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை.

# பின்னிணைப்பு

## அட்டவணை–1

## நெய்தல்திணைப் பாடல்களில் முதற்பொருள்

| நூல் | நிலம் இடம்பெறும் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 4, 11, 15, 19, 27, 31, 35, 38, 45, 49, 64, 72, 74, 87, 94, 96, 101, 106, 111, 124, 127, 131, 135, 138, 155, 167, 173, 187, 195, 211, 227, 231, 245, 254, 263, 267, 272, 275, 278, 283, 291, 295, 299, 311, 315, 323, 327, 331, 342, 345, 349, 372, 385, 398 | 54 |
| குறுந்தொகை | 5, 9, 49, 51, 92, 97, 103, 109, 114, 123, 166, 175, 184, 197, 205, 212, 228, 230, 236, 243, 245, 248, 269, 294, 296, 299, 303, 304, 306, 310, 313, 316, 318, 320, 326, 328, 334, 340, 341, 345, 349, 351, 376, 397, 401 | 46 |
| அகநானூறு | 10, 20, 30, 60, 70, 90, 110, 120, 130, 180, 220, 230, 280, 310, 320, 330, 350, 380, 390, 400 | 20 |
| ஐங்குறுநூறு | 102, 105, 106, 107, 108, 111, 112, 113, 114, 115, 117, 119, 120, 121, 122, 123, 124, 125, 126, 132, 133, 134, 136, 138, 141, 142, 143, 144, 145, 146, 147, 148, 150, 152, 153, 154, 155, 156, 158, 159, 161, 162, 163, 164, 165, 166, 167, 168, 169, 170, 179, 181, 182, 184, 186, 187, 189, 190, 191, 192, 193, 194, 195, 196, 198, 199 | 66 |
| கலித்தொகை | 124, 125, 132, 133, 136, 141, 149 | 7 |
| | மொத்தம் | 193 |

## அட்டவணை–2

| நூல் | நிலம் இடம்பெறாப் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 132, 152, 218, 348, 369, 398 | 7 |
| குறுந்தொகை | 6, 92, 118, 172, 195, 197, 341, 376 | 8 |
| அகம் | – | – |
| ஐங்குறுநூறு | 104, 173, 197 | 3 |
| கலித்தொகை | 118, 119, 120, 122, 137, 139, 141, 146 | 8 |
| | மொத்தம் | 26 |

## அட்டவணை–3

| நூல் | பெரும்பொழுது இடம்பெறும் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 132, 152, 218, 348, 358, 369, 398 | 7 |
| குறுந்தொகை | 103, 197, 210, 341, 376 | 5 |
| அகநானூறு | 140 | 1 |
| ஐங்குறுநூறு | – | 0 |
| கலித்தொகை | 127, 128, 100 | 3 |
| மொத்தம் | | 16 |

## அட்டவணை–4

| நூல் | சிறுபொழுது இடம்பெறும் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 49, 54, 58, 67, 78, 91, 117, 123, 130, 132, 145, 149, 152, 159, 163, 175, 178, 183, 187, 191, 199, 207, 215, 118, 219, 223, 235, 239, 258, 287, 303, 307, 319, 335, 338, 348, 354, 358, 363, 369, 375, 378, 382, 385, 388, 392, 395, 398 | 48 |
| குறுந்தொகை | 6, 55, 92, 114, 118, 122, 145, 163, 172, 177, 195, 200, 226, 246, 310, 311, 324, 381, 386 | 19 |
| அகநானூறு | 40, 50, 80, 100, 110, 120, 140, 150, 160, 170, 190, 200, 210, 240, 250, 260, 270, 290, 300, 340, 380, 360, 370 | 23 |
| ஐங்குறுநூறு | 104, 116, 157, 172, 173, 183, 188, 197 | 8 |
| கலித்தொகை | 118, 119, 120, 121, 122, 123, 126, 127, 128, 129, 130, 131, 132, 134, 135, 139, 141, 142, 143, 144, 145, 146, 147, 148 | 24 |
| | மொத்தம் | 122 |

## அட்டவணை–5

## நெய்தல்திணைப் பாடல்களில் கருப்பொருள்கள்

| நூல் | கருப்பொருள் இடம்பெறும் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 4, 11, 15, 19, 27, 31, 38, 49, 54, 58, 63, 67, 74, 78, 91, 96, 101, 106, 111, 117, 123, 124, 127, 131, 135, 138, 145, 149, 152, 155, 159, 163, 167, 172, 175, 178, 183, 187, 191, 195, 199, 203, 207, 211, 215, 218, 219, 223, 227, 231, 235, 239, 245, 254, 258, 263, 267, 270, 278, 283, 287, 291, 299, 303, 307, 315, 319, 323, 327, 331, 335, 338, 342, 345, 349, 354, 363, 372, 375, 378, 382, 385, 388, 392, 395, 398 | 87 |
| குறுந்தொகை | 9, 49, 57, 55, 97, 103, 109, 114, 117, 122, 123, 125, 145, 172, 175, 177, 184, 1205, 212, 219, 226, 227, 228, 230, 243, 245, 246, 248, 269, 299, 303, 304, 310, 311, 316, 318, 320, 324, 326, 328, 334, 340, 345, 351, 386, 397, 401 | 48 |
| அகநானூறு | 10, 30, 70, 80, 90, 110, 120, 130, 140, 160, 170, 190, 200, 210, 230, 240, 250, 260, 270, 280, 290, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390, 400 | 31 |
| ஐங்குறுநூறு | 101 முதல் 106, 108–117இ 119–128, 131–134 136–148, 150–170, 173, 179, 182, 184, 186, 187, 189, 191–198, 200 | 80 |
| கலித்தொகை | 121–129, 131–136, 138–141, 142, 144, 145, 148, 149 | 23 |
| | மொத்தம் | 269 |

## அட்டவணை–6

| நூல் | கருப்பொருள் மயக்கம் பெற்றப் பாடல்கள் | மொத்தம் |
|---|---|---|
| நற்றிணை | 87 (நெ+கு), 369 (நெ+மு), 45, 132, 249, 272, 275, 311 (நெ+4), 130 (ம) | 9 |
| குறுந்தொகை | 294 (நெ+மு), 5, 163, 236, 296, 306, 349, 381 (நெ+ம), 341 (நெ+மா), 200 (கு), 92 (பா) | 11 |
| அகநானூறு | 20, 300 (நெ+மு), 40, 50, 100, 150, 180 (நெ+ம) | 7 |
| ஐங்குறுநூறு | 181 (நெ+மு), 190 (நெ+மு), 183 (நெ+கு+ம+மு) | 3 |
| மொத்தம் | | 30 |

## அட்டவணை–7

| நூல் | கருப்பொருள் இடம்பெறாதப் பாடல்கள் (நெய்தல்) | மொத்தம் |
| --- | --- | --- |
| நற்றிணை | 35, 72, 195, 295, 348, 358 | 6 |
| குறுந்தொகை | 4, 6, 57, 102, 118, 128, 166, 195, 197, 290, 325, 376 | 12 |
| அகநானூறு | 60, 220 | 2 |
| ஐங்குறுநூறு | 107, 118, 135, 149, 171, 172, 174, 175, 176, 177, 178, 180, 185, 188, 199 | 15 |
| கலித்தொகை | 120, 122, 137, 150 | 4 |
| மொத்தம் | | 39 |

கு–குறிஞ்சி, மு– முல்லை, ம–மருதம், நெ–நெய்தல், பா–பாலை

## அட்டவணை–8

### நெய்தல் திணைப் பாடல்களில் உரிப்பொருள் மயக்கம்

| நூல் | குறிஞ்சி | முல்லை | மருதம் | பெருந்திணை | மொத்தம் |
| --- | --- | --- | --- | --- | --- |
| நற்றிணை | 27, 67, 78, 91, 155, 159, 163, 172, 207, 223, 245, 254, 278, 323, 331, 363, 375 (17) | 35, 36, 111, 131 (4) | 74, 127, 167, 270, 291, 315 (6) | – | 27 |
| குறுந்தொகை | 51, 248, 269, 345, 351 (5) | 103, 122, 195, 197, 200, 341 (6) | 9, 49, 349 (3) | – | 14 |
| அகநானூறு | 20, 30, 60, 70, 80, 90, 100, 110, 130, 140, | 400 (1) | 50 (1) | – | 31 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 160, 180, 190, 200, 210, 220, 230, 240, 260, 290, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390 (29) | | | | |
| ஐங்குறுநூறு | 101–103, 105–110, 112–115, 117, 119, 120, 133, 141, 142, 144–147, 162, 163, 166, 168, 171–182, 185, 186, 187, 189–197, 199, 200 (53) | 104, 134, 148, 149, 188 (5) | 118, 121–128, 131, 1342, 135–140, 143, 150–160, 164, 165, 167, 169, 170, 184, 198 (36) | – | 94 |
| கலித்தொகை | 133, 135, 136 (3) | 130, 134 (2) | – | 138–148 (11) | 16 |
| | மொத்தம் | | | | 182 |